# சங்க இலக்கியத்தில் பொருளாதாரச் சிந்தனைகள்

பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் (பி.எச்டி) தமிழ் பட்டத்தின்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ச. கனகராஜ்**

**பதிவு எண்.** 10500/Ph.D.2/Tamil/FT/July 2012

நெறியாளர்

முனைவர் **அ. ஜெஸிந்தாராணி,** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எச்.டி., பி.ஜி.டி.ஜே.ஆர்.

உதவிப் பேராசிரியர், தமிழாய்வுத்துறை

புனித சிலுவை கல்லூரி (தன்னாட்சி ‘A’)

திருச்சிராப்பள்ளி – 620 002.



**தமிழாய்வுத் துறை**

**புனித சிலுவை கல்லூரி (தன்னாட்சி ‘A’)**

**திருச்சிராப்பள்ளி – 620 002.**

**ஜூன் - 2018**

முனைவர் **அ. ஜெஸிந்தாராணி,** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எச்.டி., பி.ஜி.டி.ஜே.ஆர்.
உதவிப் பேராசிரியர், தமிழாய்வுத்துறை
புனித சிலுவை கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி – 620 002.

---

# நெறியாளர் சான்றிதழ்

''சங்க இலக்கியத்தில் பொருளாதாரச் சிந்தனைகள்'' எனும் தலைப்பிலுள்ள இவ் ஆய்வேட்டை, திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக, புனித சிலுவை கல்லூரி மாணவன் ச. கனகராஜ் (2012–2017) ஆய்வு செய்து அளித்ததாகும்.

இவ் ஆய்வேடு, இதற்கு முன் யாராலும் எந்த பட்டத்திற்காகவும், ஆய்வரங்கிற்காகவும், அளிக்கப் பெறவில்லை என்பதற்கும், என் நெறிகாட்டுதலின் கீழ் இஃது இவருடைய சொந்த முயற்சியால் வெளிவருகிறது என்பதற்கும் நான் சான்றிதழ் வழங்குகிறேன்.

துறைத் தலைவர் கையொப்பம்　　　　　　　　நெறியாளர் கையொப்பம்

இடம் : திருச்சி – 2.

நாள் :

**ச. கனகராஜ்**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
பதிவு எண். 10500/Ph.D2/Tamil/FT/July 2012
தமிழாய்வுத்துறை, புனித சிலுவை கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி – 620 002.

# ஆய்வாளர் உறுதிமொழி

''**சங்க இலக்கியத்தில் பொருளாதாரச் சிந்தனைகள்**'' என்னும் தலைப்பில் அமைந்த இவ் ஆய்வேடு முனைவர் பட்டத்திற்காக இவ்வாராய்ச்சி என் சொந்த முயற்சியால் உருவானது எனவும், இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் இவ் ஆய்வேடு அளிக்கப்படவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

ஆய்வாளர் கையொப்பம்

**(ச. கனகராஜ்)**

இடம் : திருச்சி – 2.
நாள் :

# நன்றியுரை

சங்க இலக்கியத்தில் பொருளாதாரச் சிந்தனைகள் எனும் தலைப்பில் புனித சிலுவை கல்லூரியில் தமிழாய்வுத்துறையில் முனைவர் பட்ட ஆய்வை, முழுநேரம் மேற்கொள்வதற்கு அனுமதியளித்த, திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வைத் தொடங்க வாய்ப்பளித்த கல்லூரி முதல்வர் முனைவர் அருட்சகோதரி **கிறிஸ்டினா பிரிஜிட்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி. மற்றும் மேனாள் முதல்வர் தமிழாய்வுத் துறைத்தலைவர் **முனைவர் அருட்சகோதரி ஜெஸின் பிரான்ஸிஸ்** அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

கல்லூரியில் சேர்ந்த நாள் முதலாய் இன்றுவரை என்னை ஊக்குவித்து, என் வளர்ச்சியில் அக்கறை காட்டி வருபவரும், என்றும் இனியவராய், எல்லோருக்கும் நல்லவராய், என் ஆய்வுப் பணியில் ஊக்கமும், சுதந்திரமும் அளித்து, இலக்கிய திறனாய்வுத் துறையில் ஒரு புதிய தேடலுக்கான ஊக்கத்தை கொடுத்து மனதில் நீக்கமின்றி ஆட்கொண்ட எனது நெறியாளர் **பேரா. முனைவர் அ. ஜெஸிந்தாராணி** உதவிப் பேராசிரியர், தமிழாய்வுத்துறை அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன். மேலும் தமிழாய்வுத்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆராய்ச்சிக்கு நான் பதிவு செய்து கொண்ட பிறகு பாரதிதாசன் பல்கலைக்கழகத்தால் அமைக்கப்பட்டிருந்த மூதறிஞர் குழுவைச் சேர்ந்த பேராசிரியர்கள் என் ஆராய்ச்சி செந்நெறியில் அமைவதற்குரிய வழிகளையும், முறைகளையும் எடுத்துரைத்தார்கள். அவர்களுக்கும் என் நன்றி!

ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கிய கல்லூரி நூலகத்திற்கும் பாரதிதாசன் பல்கலைக்கழக நூலகத்திற்கும் என் நன்றி. தன் பொன்னான நேரத்தை, எனக்காக ஒதுக்கி ஆய்வுக்கு தொடர்புடைய செய்திகளை கூறி, என்னை ஊக்கப்படுத்திய உருமு தனலட்சுமி கல்லூரி (சுயநிதிப் பிரிவு) முன்னாள் உதவிப் பேராசிரியர் **முனைவர் ச. பாலமுருகன்** அவர்களுக்கும் என் நன்றி! அனைத்திற்கும் மேலாக என்ககு ஆசீர் வழங்கிய என் தந்தை **நா. சம்மந்தமூர்த்தி** அவர்களுக்கும் தாய் **ச. குப்புராஜம்மாள்** அவர்களுக்கும் நான் சமர்ப்பிக்கிறேன்.

ஆய்வேட்டை சிறந்த முறையில் தட்டச்சு செய்து கட்டமைத்துக் கொடுத்த சிவதர்ஷன் கணினி நிறுவனத்திற்கும் என் நன்றி!

என் கல்வி வளர்ச்சியின் மேல் உள்ளார்ந்த அன்பும் அக்கறையும் கொண்ட அனைத்து நல் உள்ளங்களுக்கும் உளமார்ந்த நன்றி!

நன்றியுடன்,

**ச. கனகராஜ்**

# பொருளடக்கம்

# முன்னுரை

**ஆய்வுத்தலைப்பு**

சங்ககால இலக்கியங்கள், அவை தோன்றிய காலக்கட்டத்தில் நிலவிய நாகரீகம், பழக்கவழக்கங்கள் மற்றும் வாழ்வியல் போக்குகளை பறை சாற்றுபவையாக இருக்கின்றது. ஆகவே இவற்றை அடிப்படை ஆதாரங்களாக கொண்டு அக்கால மக்களின் வள்ளன்மை, தொழில் வளமை மற்றும் வணிக முறைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட “சங்க இலக்கியங்களில் பொருளாதாரச் சிந்தனைகள்” என்பது இவ்வாராய்ச்சியின் தலைப்பு.

**பொருளாதாரம்**

அருளை சிறப்பாக நாடுவது நமது தேசிய இலட்சியம், ஆனால் பொருளைப் பற்றிய எண்ணத்தை விட்டுவிடுவது என்பது அதன் கருத்தல்ல. அருளையும் பொருளையும் சேர்ந்த நாடுபவரே இகபரம் இரண்டுக்கும் தகுதியுடையவர் ஆவர். ‘நாட்டின் செல்வம் யாரோ சிலர் கையில் ஏராளமாக குவிவது சிறந்த பொருளாதார திட்டமாகாது. பொதுமக்கள் எல்லோருக்கும் ஆரோக்கியமான நல்வாழ்வுக்கேற்ற அளவு பண்டங்களும் ஏனைய வசதிகளும் எளிதில் அகப்படும்படியான பொருளாதாரத்திட்டம் எதிர்கால இந்தியாவுக்கு சரியானதாகும். தனவான்கள் ஏராளமாக தனத்தை சேகரிப்பது, தன் சமூகத்தின் நன்மைக்கென்பதை அவர்கள் மறவாதிருப்பார்கள். பணத்துக்கு அவர்கள் பெரிதும் பொறுப்பாளிகளாக இருப்பவர்களே ஒழிய இன்றைக்கு இருப்பது போன்று உரிமையாளர்களாக இருக்க மாட்டார்கள். பெருமிதமான வாழ்வு எம்மனிதனுக்கும் உகந்தது ஆகாது. பெருமித வாழ்வே மனிதனை கீழ்மைப்படுத்துகிறது. கேடுகள் பலவற்றை அது சமுதாயத்தில் பரப்புகிறது. நல்ல உணவு, தூய உடை, வசதியான வீடு ஆகியவைகள் நாட்டுமக்கள் எல்லார்க்கும் உரியவைகள் ஆகும். வாழ்க்கை முறையில் ஏழை என்றோ பணக்காரன் என்றோ வேற்றுமைக்கு இடம் கொடுக்காத எளிய வாழ்வே எல்லோருக்கும் பொதுவானதாகும்’ என்பர் சான்றோர்.

இருப்பினும் சமூக வாழ்க்கையின் அனைத்துப் பகுதிகளுமே அந்த சமூகத்தின் பொருளாதார செயல் முறைகளின் வளர்ச்சியிலேதான் இருக்கிறது. வாழ்க்கையோடு இணைந்த இந்த பொருளாதாரப் பின்னணியானது காலங்காலமாக

பின்னிப்பிணைந்துள்ளது. ஒவ்வொரு காலக்கட்டத்தின் பொருளாதார ஏற்ற இறக்கங்களே அந்த காலக்கட்டத்தில் இலக்கியங்களாக பிரதிபலித்திருக்கிறது. சங்ககால இலக்கியங்களில் காணப்படும் ஒருசில குறிப்புகளை கொண்டு அதற்குரிய நிகழ்வுகளை நடைமுறையில் பெரிதாக்கி அனுபவங்களால் உணரப்பட்டு பொருளாதாரப் பார்வையோடு பார்ப்பதின் மூலம் அன்றைய சமூகத்தின் இயங்கு நிலைகளை அடையாளம் காணமுடியும்.

**ஆய்வின் நோக்கம்**

பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே தமிழகப் பொருளாதார விஞ்ஞானத்தின் தொடக்க நிலையில் மனித குலத்தின் பண்பாட்டின் மீது அழியாத முத்திரைப் பதித்து சென்ற தனிச்சிறப்புடைய தற்சிந்தனையும் பொருளாதார திறமைமிக்க மாபெரும் அறிவாளிகளையும் நம் சங்ககால தமிழகம் பெற்றிருந்ததையும் அவர்களின் சமூகம் சார்ந்த பொருளாதாரச் சிந்தனைகள் வெவ்வேறு காலக்கட்டங்களில் உலகப் பொருளியல் அறிஞர்களால் வரையறுக்கப்பட்ட பொருளாதாரக் கருத்துக்களுடன் ஒப்பிட்டு அரசியல் பொருளாதாரம் என்பது உலர்ந்து போன சுவையற்ற ஆய்வு என்ற எண்ணத்தை உடைத்தெறிந்து பிரச்சினைகளும் இரகசியங்களும் இரண்டற கலந்திருப்பதை வெளிப்படுத்த வேண்டுமென்பதும் சங்க இலக்கியத்தில் காணப்படும் பொருளாதார கருத்துருவாக்கங்களை நேர்மையாக எடுத்து விளக்க வேண்டுமென்பதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

மேலும் தமிழக பொருளாதாரச் சிந்தனை, நசிவுற்ற நிலையிலிருந்து வளர்ந்துயர வேண்டும் என்ற சமூக நோக்கத்தோடு சங்ககால மக்களின் வாழ்க்கை நிலை, பண்பாடு, நாகரீகம், மன்னர்களின் வரலாறு, போர் நிகழ்வுடன் அரசியல் நுட்பங்கள் ஆகியவற்றுடன் அந்த கால சமூக வரலாற்றை அறிவதற்கு இன்றி யமையாத சில குறிப்புகளும் இவ் ஆய்வேட்டில் இடம்பெற்றுள்ளன.

## ஆய்வு எல்லை

எட்டுத்தொகை நூல்கள் : நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன பத்துப்பாட்டு நூல்கள்: திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுபடை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகியவற்றை முதன்மையாக கொண்டு 'சங்க இலக்கியங்களில் பொருளாதாரச் சிந்தனைகள்' எனும் இவ் ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு கருதுகோள்

சங்க இலக்கியத்தில் காணப்படும் பொருளியல் வல்லுநர்களின் பொருளாதார வளர்நிலைச் சிந்தனைகளை வெளிக்கொணர்ந்து நாட்டின் பொருளாதார வளர்ச்சி மேம்பாடடைய வழிவகுப்பதும் ஏற்றத்தாழ்வற்ற சமூகத்தை உருவாக்கும் பணிகளை இடையறாது செய்வதற்குரிய புலப்பாட்டு நெறிகளை மேற்கொள்வதும் ஆய்வின் கருதுகோளாக அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

பொருளாதாரம் பற்றிய கூறுகளை ஆராய 'பகுப்பாய்வு முறை' இலக்கிய போக்கில் கூறப்பெற்ற பொருளியல் பற்றிய கருத்துக்களோடு நடைமுறைச் சார்ந்த பொருளாதாரக் கருத்துக்களை விரித்துரைக்க 'விளக்க ஆய்வு', மற்றும் ஒப்பீட்டு திறனாய்வு பொருளாதாரம் பற்றிய சிந்தனைகள் மக்களிடம் ஏற்றம் பெற்றிருக்கின்றனவா, மாற்றி கூறப்பட்டுள்ளனவா, உள்ளவாறே உணரப் பட்டிருக்கின்றனவா என்றும், ஏனைய இலக்கியக் கருத்துக்களை கூறும் வகையில் விளக்கமுறையும், மதிப்பீட்டுமுறை திறனாய்வும், சங்க இலக்கியங்களில் பரவி நிற்கும் அழகுத்தன்மையைப் பலவகையாக ஆராயும் முறையில் 'முருகியல் திறனாய்வு முறையினையும்' சங்க இலக்கியத்தைச் சமுதாய அரசியல் கண்ணோட்டத்தோடு அணுகி ஆராய்வதற்கு வரலாற்றுத் திறனாய்வு முறையும் இந்த ஆய்வில் பின்பற்றப் பெற்றுள்ளன.

**ஆய்வுப் பகுப்பு**

முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாக ஆய்வேடு பகுக்கப் பெற்றுள்ளது. அவை,

1. சமூக அமைப்பு
2. நிலங்களும் திணைகளும்
3. வாணிபமும் தொழில்களும்
4. மக்களின் மனச்செம்மை
5. வளமும் வள்ளல்களின் வளமையும்

என்பனவாகும்.

**'சமூக அமைப்பு'** என்ற முதல் இயலில் சங்ககால சமுதாய வளர்ச்சி நிலை பற்றிய விளக்கங்களும், குடும்ப அமைப்பும், உருவாக்கமும் பற்றிய செய்திகளும் சமய நிலைகளும், கடவுள் வழிபாடுகளும், கலைகளும் நுட்ப திறன்களும் ஆராயப் பெற்றுள்ளன.

**'நிலங்களும் திணைகளும்'** என்ற இரண்டாவது இயலில் சங்ககால திணை சமுதாயத்தையும் சமூக வேறுபாடுகளையும், சீறூர் மன்னர், முதுகுடி மன்னர் குறுநில மன்னர், மூவேந்தர்களின் நிலைப்பாட்டையும், அரசாட்சி முறையினையும், போர் மற்றும் போர்க்கொடுமைகளும் ஆராயப்பெற்றுள்ளன.

**'வாணிபமும் தொழில்களும்'** என்ற மூன்றாவது இயலில் பொருளாதாரம் பற்றிய பொருளியலாளரின் கருத்துக்கள் சங்க இலக்கியத்தில் காணப்பெறும் பொருளியல் சிந்தனைகள், வாணிபம், வாணிப முறைகள், வாணிப பொருள்கள், உள்நாட்டு அயல்நாட்டு வாணிபங்கள், ஏற்றுமதி, இறக்குமதி மற்றும் துறைமுகப் பட்டினங்கள், நிலம் சார்ந்த தொழில்கள், பொதுத் தொழில்கள், உழைப்பு, உற்பத்தி, கூலி முதலியவைப் பற்றி ஆராயப்பெற்றுள்ளன.

**'மக்களின் மனச்செம்மை'** என்ற நான்காவது இயலில் குடிமக்களின் வள்ளன்மை, வள்ளல்களை நாடிச் செல்லும் வழியில் ஐவகை நிலத்தாரின் உளப்பாங்கு. பரிசில் பெற்று மீண்ட கலைஞர்கள், பரிசில் பெற வேண்டி

செல்வோர்க்கு வழிகாட்டிய முறைகள் மற்றும் பாணர், பொருநர், கூத்தர், புலவர் பற்றி ஆராயப்பெற்றுள்ளன.

**'வளமும் வள்ளல்களின் வளமையும்'** என்ற ஐந்தாம் இயலில் இயற்கை வளமும், பொருளாதார நிலையும், நீர் வளம், நில வளம், மனித வளம், அரசர்களின் வள்ளல்தன்மையும், கடையேழு வள்ளல்களின் வள்ளன்மையும் ஆராயப் பெற்றுள்ளன.

## இயல் 1

# சமூக அமைப்பு

ஒன்றுப்பட்ட எண்ணத்துடன் கூடிய சட்ட வன்முறைகளைக் கருத்திற் கொண்டு ஒன்றிணைந்து வாழ்வதே சமூக அமைப்பு. இதனை **“ஒரு தனியொரு மனிதனின் வாழ்நாளை விடவும் அவர் சார்ந்துள்ள கூட்டம் நீடித்த நிலைபேறு உடையதாக இருத்தல், உறுப்பினர்களின் குடும்பங்களில் முறையாகப் பிறந்த குழந்தைகளையே புதிய உறுப்பினராக ஏற்றுக் கொள்ளுதல், பழக்கவழக்கங்கள், மதிப்புகள், சமூக உறவுகள் ஆகியவை கூட்டத்தின் அனைவரிடமும் ஒன்று போல் காணப்படுதல் பொது தன்மையும் செயல் ஒருமைப்பாடும் இணைந்து பளீச்சென்று பிறர் அறியக் கூடிய வகையில் தனித்துவம் பெறுதல், இந்தத் தனித்துவப் பண்பு, கூட்டத்தினர் ஒவ்வொருவருக்கும் சமூக வாழ்வில் மேன்மேலும் அவர்கள் உயர்வதற்கு உறுதியளிக்கக்கூடிய தன்னிறைவு உள்ளதாக அமைதல் என இவையனைத்தையும், ஒரு மக்கள் தொகுதி என்கின்ற போது அது சமூகமாகக் கருதப்படுகிறது”1** என்பது சமூகவியல் அறிஞரின் கருத்தாகும்.

மேலும் **“ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொது வாழ்க்கை முறையைப் பின்பற்றி கூட்டாக வாழும் மக்கள் தொகுதி சமூகம் எனப்படுகிறது”2** என்று வாழ்வியல் களஞ்சியம் தெரிவிக்கிறது.

மக்களை உருவாக்கும் சமுதாய அடுக்குகள் காலத்துக்குக் காலம் வெவ்வேறாக இருந்திருக்கின்றன. இவற்றில் பாடுபடும் மக்கள் மட்டுமே மக்களாகக் கருதப்பட்டனர். **‘ஆதிகால சமுதாயத்தில் சமுதாய உறுப்பினர்கள் அனைவரும் மக்களாவர். சமுதாயம் வர்க்கங்களாகப் பிளவுற்று உழைப்பாளர்களும் சுரண்டுபவர்களும் தோன்றியதோடு இந்த மக்களின் தொகுப்பு மாறுகிறது. அப்போது மக்கள் என்பதில் உழைப்பாளர்களே பிரதானமாக அடங்குவர்”3.** இத்தகைய சமூக அமைப்பில் சங்ககால நம் தமிழ் சமுதாயம் சற்றே மாறுபட்டுச் இருந்திருக்கிறது.

பொன்னாபரணங்களை வீசி கோழியை விரட்டக்கூடிய அளவிற்கு வளமும் இருந்தது. ‘எனது வீட்டு அடுப்பில் காளான் பூத்துவிட்டது, பசியால் உடல் மெலிந்த என் மனைவியின் மார்பிலே பால் சுரக்கவில்லை. அதனால் வெறுமனே

சுவைத்த என் குழந்தை பால் வராததால் கதறுகிறது என்று புலவர் ஓலமிடும் அளவிற்கு வறுமையும் இருந்தது.

**'சங்க கால சமுதாயம் ஏற்றத்தாழ்வான சமுதாயமே. வளம் சில இடங்களில் கொலு வீற்றிருந்தது. வறுமை சில வீடுகளைப் பிடுங்கி தின்றுக் கொண்டிருந்தது. வாழ்வின் கலாச்சாரப் பகுதியை மன்னர்கள் அல்லது செல்வந்தர்கள் பராமரித்துக் கொண்டார்கள். அப்படிச் செய்யாதவர்களும் உண்டு. இதிலே முக்கியமான விஷயம் வாழ்வு இப்படித்தான் இருக்கும். இது தான் இயல்பு எனும் சிந்தனையோடு அவர்கள் வாழ்ந்து முடித்தது தான்'**[4] என்கிறார் அருணன்.

சங்க இலக்கியங்களில் காணப்படும் சில குறிப்புகளைக் கொண்டு பார்க்கையில் சமூக அமைப்பானது செவ்வனே இருந்தது தெளிவாகிறது.

### 1.1. நிலப்பாகுபாடும் மக்களும்

சங்ககால மக்களின் வாழ்வமைதிகள் பெரும்பாலும் அவரவர் வசித்த நிலத்தின் போக்கில் நடத்திய உயிரினங்களையும் செழித்து வளர்ந்த மரம் செடி கொடிகளையும், அதைச் சார்ந்த வளங்களையும் தழுவிச் செல்வதாகவே இருந்தது. அறிவு வளர்ச்சி மேம்பட, மேம்பட மக்கள் அனைவரும் ஒன்றிணைந்து ஊரும் சேரியுமாகச் சேர்ந்து வாழத் தொடங்கினர். தமக்கெனச் சமுதாய நெறிகளை வகுத்துக் கொண்டனர்.

காலம் செல்லச் செல்ல ஒவ்வொரு நிலத்தில் வசித்த மக்களிடமும் அடுத்தடுத்த நிலப் பொருள்களிலேயே கவனம் சென்றது. அவற்றைப் பயன்படுத்த ஆர்வம் கொண்டு ஒருவருக்கொருவர் தன்னிடமிருந்ததைக் கொடுத்தும், பெற்றும் வாழத் தொடங்கினர். பொருள்களைக் கொடுத்து வாங்கும் பழக்கத்துடன் கருத்துப் பரிமாற்றமும் தன்னிலத்து வழக்கப் பரிமாற்றங்களும் ஏற்படுத்திக் கொண்டனர். இவ்வாறு கொடுத்து வாங்கியதையே பலர் வாழ்வியல் தொழிலாகவும் மேற்கொண்டு பயன்பெற்றதனால் வாணிக மக்கள் உருவாகி, தாமே தனித்தும், பலர் உதவிக் கொண்டும் தொழில் செய்யத் தொடங்கினர்.

**'நாடன் என்கோர் ஊரன் என்கோ**
**பாடிமிழ் பணிக்கடற் சேர்ப்பன் என்கோ?**
**யாங்ஙனம் மொழிகோ, ஓங்குவாட் கோதையை'**[5]

என்ற புறநானூற்றுப் பாடல் முல்லை நிலத்தவனை நாடன் என்றும் மருத நிலத்தவனை ஊரன் என்றும், கடற்கரைப் பகுதியானைச் சேர்ப்பன் என்றும் குறிக்கிறது.

### 1.1.1 குறிஞ்சி நில மக்கள்

மலையும் மலைச் சார்ந்தப் பகுதியும் குறிஞ்சியாகும். நிலத்தின் தன்மைக் கொண்டே அங்கு வாழும் மக்களின் மன இயல்பு இருக்கும். அவர்கள் கால வாழ்வுப் போக்கைக் கொண்டவர்கள்.

> **‘வன விலங்குகளும் அடர்ந்த தண்ணீரைக் கட்டுப்படுத்தியும், ஒலி முழங்கும் அருவியும் மலர் கெழுமிய சுனையும், எழில் வண்ண மலர் வகைகளுமாக இயற்கையின் எழிலார்ந்த மலைப் பகுதியிலே வாழும் மக்களும் அவ்வியற்கையோடும் அவை எழுப்பும் உணர்வுகளோடும் இணைந்தே மனமொன்றி வாழ்ந்தனர். ஆண்களும் பெண்களும், நெஞ்சத் துணிவும், சுதந்திரப் போக்கும், உடல் உள உரனும் பெற்று விளங்கினர். மலைச் சார்ந்த வாழ்வினர் ஆதலால் ஐவன நெல்லும், மூங்கிலரிசியும். தேனும், தினையும், வள்ளிக் கிழங்கும் இவர்கள் உணவுப் பொருட்களாயின. வேட்டையும் இவர்களின் முதன்மைத் தொழிலாக விளங்கிற்று. துணிவும் தூய மனமும் இவர்கள் உடைமையாயின்6**

எளிய வாழ்வினை வாழ்ந்தவர்கள், இருப்பதைக் கொண்டு ஆடியும் பாடியும் மகிழ்ந்திருந்தனர். பெண்கள் தோழியருடன் காட்டில் சுனையாடியும், அருவியாடியும், தினைபுனத்தைக் காவற்காத்தும். பூக்குற்றியும் மனமகிழ்வோடு இருந்தனர். காதலும், பிறகு கடிமணமும் செய்து, நல்ல மனையறம் உடையவராக இருந்தனர்.

வேட்டுவன், மலைக் கிழவோன், மாமலை நாடன், வெற்பன், சிலம்பன், கொடிச்சி, பொருப்பன் என தலைமக்கள் அழைக்கப்பட்டனர். குறவர், குறத்தி, கானவர், தாழ்ந்தவர்களாகக் கருதப்பட்டனர்.

### 1.1.2 முல்லை நில மக்கள்

காடும் காடு சார்ந்தப் பகுதியும் முல்லை நிலமாகும். மாயோன் மேய காடுறை உலகம் என்று இப்பகுதியைத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இப்பகுதி

வாழ்மக்கள் நிலத்தின் வளமைகளும், காலப் பகுதியான காரும் மாலையும் தூண்டும் உணர்வினைப் பெற்றிருந்தனர். மாடு மேய்த்தலும், அதனால் கிடைக்கும் பயனை அனுபவித்து, இன்புற்றிருந்தனர், அவற்றின் பொருட்களைப் பிறர்க்கு கொடுத்து, தமக்குத் தேவையானதைப் பெற்று வாழ்வதும் இந்நில மக்களின் வாழ்வியலாக இருந்தது. இங்கு வாழும் மக்களை ஆயர், ஆச்சி, இடையர், இடைச்சியர், கோவலர், பொதுவர் எனப்பட்டனர். இவர்கள் சாகாரிப் பண்ணையும், ஏறுகோட்பறையும், பெரிதும் விரும்பி மகிழ்ந்திருந்தனர்.

### 1.1.3 மருத நில மக்கள்

வயலும் வயல் சார்ந்த பகுதியும் மருத நிலமாகும். ‘வேந்தன் மேவிய தீம்புனல் உலகம்’ என்றும், மருதம் பல்பொருள் வளமையால் பெருக்க முற்றிருந்தது போன்றே, மக்களின் வாழ்வியல் வகையாலும் பிறநிலத்து மாந்தரினும் தனித்தன்மை பெற்றிருந்தது. மழை நோக்கி வாழ்வார் ஆதலால், சில காலத்துக்குக் கடின உழைப்பும், விளைவு பெற்ற பின்னர் சில காலத்தே நெடிய ஓய்வும் பெற்ற வாழ்வினராக மருத மக்கள் விளங்கினர்.

பெருவளம் உடையாரும் அவர்பால் உழைத்துக் கூலி ஏற்று உண்பாருமாக மேல்குடியினரும், கீழ்க்குடியினரும் என்றும் பிரிவு தோன்றிற்று. இதனால் ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் சார்ந்தும், ஒருவரையொருவர் போற்றியும், உறுதுணை நின்றே வாழ்தல் என நிலவிய பழந்தமிழரின் பிற திணை ஒழுக்க மரபுகளுக்கும் மருதத்தில் இறுக்கம் உண்டாயிற்று.

> **‘பொன்னும் பொருளும் விரும்பி, அதைப் பெறுவதற்காக, பிறர்க்கு அடித்தொண்டு செய்வோரும், அவற்றை வழங்கி, அத்தொண்டேற்று, மனம் கழிப்பாருமாக, மக்கள் மனநிலையாலும் பிளவுப்பட்டனர். மருதத்தின் சமுதாய வாழ்வியல் ஒழுக்கமானது தன் நெறிமையிலே தளர்வுற்று ஆடவர்க்கு ஒன்றும், பெண்டிர்க்கு மற்றொன்றுமாகவும் மேற்குடியார்க்கு ஒன்றும், பிறருக்கு வேறொன்றுமாகவும் கருதப்பட்ட நிலையதாயிற்று. ஆகவே பரத்தமை ஒழுக்கம் தோன்றியதும் மருதத்தில் தான். பரத்தமை பழிக்கப் பெற்றதும், ஒழுக்கவியலினரும் சகித்துப் போக வேண்டியதொன்றாகக் கருதி, சகிக்கப்பட்டதும் மருத திணையின் மரபாயிற்று.’7**

### 1.1.4 நெய்தல் நில மக்கள்

கடலும் கடல் சார்ந்த நிலமும் நெய்தலாகும். அங்கு வாழ்வியல் கண்டரான மீன் பிடிப்பாரும், உப்பு விளைவிப்பாருமாகிய மக்களின் வாழ்வியலைத் தழுவிச் செல்லுதல் ஒழுக்கமாக அமைந்தது.

'பெருமணல் உலகம்' என்றும் நெய்தல் நில மக்களின் அக ஒழுக்கங்களைச் சங்க நூல்கள் எடுத்துரைக்கிறது.

இங்கு வாழும் தலைமக்கள் சேர்ப்பன், துறைவன், கொண்கன், மடமகள் எனப்பட்டனர். பரதவரும், நுளையரும் தாழ்ந்தவர்களாகக் கருதப்பட்டனர். இவர்கள் வருணனை வணங்கினர். இவர்களின் ஊர் பட்டினம், பாக்கம் என அழைக்கப்பட்டது. சிறுபொழுது எற்பாடு (பிற்பகல் 2.00 மணி முதல் 6.00 மணி வரை) ஆகும். பெரும் பொழுது – கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என ஆறு பொழுதுகளாகும்.

### 1.1.5 பாலை நில மக்கள்

**'முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென்'8** நான்கு வகையான நிலங்களை மட்டுமே சுட்டுகிறார் தொல்காப்பியர். பாலை என்றொரு நிலப்பாங்கு தொல்காப்பியர் காலத்தில் இருக்கவில்லை என்பது இதன் வழி தெளிவாகிறது. சங்க காலத்திற்கு பிறகு பாலை உருவாகி இருக்கிறது.

> **'முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து – பாலை**
> **என்பதோர் படிவங் கொள்ளும்'9**

என்ற சிலம்பின் மூலம் இதை அறியலாம். குறிஞ்சியும் முல்லையும் கோடை காலத்தில் கலையிழந்து பாலையாகிறது எனத்தெரிய வருகிறது. இதனால் பாலையைத் தனித் திணை எனக் கருதாமல் பொதுத் திணையாகக் கருதுவது சான்றோர் மரபாயிற்று.

'மருதத்தைத் தவிர மற்ற மூன்று நிலங்களிலும் பாலை காணப்படும் எனவும், 'பால்' என்றால் 'விதி' எனவும், 'காலப் பகுப்பு' எனவும், பொருள். ஆதலால் அத்தகைய விதியின் காலக் கோளாறின் விளைவாலே வெம்மையுற்று தகைமை திரிந்த பகுதி ஆதலால் இதனைப் 'பாலை' என்று குறித்தனர் என்றும் கருதலாம்.

**ஆறலைக் களர்வர்க்கும் பிறபிற கொடுஞ் செயலாளர்களுக்கும் ஒதுக்கி வாழ்நிலமாகவே இப்பாலை கூறப்பெற்றாலும், எந்த நிலப்பகுதி திரிந்து பாலையாயிற்றோ, அதற்குரியரான மக்களும் இடம் பெயர்ந்து போதற்கு மனமற்றப் பலரும் இப்பாலை பகுதியிலேயே எவ்வாறோ வாழ்ந்து வந்தனர் எனவும் கூறலாம்'.10**

பாலையில் விளைச்சல் இல்லாததால் இப்பகுதியில் வாழ்வோர் வழிபறிச் செய்து வாழும் வில்லேறு உழவராக வாழ்ந்தனர். இவர்களில் 'வன்மை மறவர்'கள் மன்னர்களுக்கு முன் செல்லும் படையினராகவும், ஆநிரை கவர்தல் போன்ற செயல்களுக்கு உதவியாக இருந்தமையும் அறிய முடிகிறது.

இருப்பவர்களின் செல்வத்தைக் கொள்ளை அடிப்பதே இவர்கள் மரபாக இருந்தது. இதற்காக உயிரை விடுவதை நினைத்தும், கவலைக் கொள்ளாத வீரர்களாகவே இருந்தனர். கொள்ளையடித்தச் செல்வத்தைத் தனக்கென வைத்துக் கொள்ளாது பிறர்க்கு வாரி வழங்கினர்.

இந்த மாநில வேறுபாடுகளில் பாலை நிலத்திற்கு என தனிப்பட்ட வாழ்வு முறை இல்லாவிடினும் சங்கப் பாடல்களில் போக்குவரத்துக்குப் பயன்பட்ட பெரியதொரு வறண்ட நிலமும், அங்கு வாழும் மக்களின் வாழ்வு முறையும் காணமுடிகிறது.

இவ்வாறாக மக்களிடையே நான்குவகை பாகுபாடுகள் இருந்தன – **'இந்த நான்கு வகை வேறுபாடுகளுக்கும் வடமொழியாளரின் வருண வேறுபாடுகளுக்கும் எவ்வித தொடர்புமில்லை'11** என்பார் தமிழண்ணல்.

## 1.2 குடும்ப அமைப்பும் உருவாக்கமும்

மனிதன் தானொரு சமூக உயிர் என்பதை அறிந்து கொண்டான். தன் தேவைகளையும், விருப்பங்களையும் பூர்த்திச் செய்து கொள்வதற்கு அவன் மற்றவர்களுடன் தொடர்பில் இருக்க வேண்டியதை அறிந்தான். அதற்காகப் பல சட்டத்திட்டங்களை வகுத்துக் கொண்டு, வாழ்வியலை நெறிப்படுத்த தெரிந்து கொண்டு தனக்கென ஒரு குடும்பத்தை நிர்மானித்துக் கொள்ள ஆரம்பித்தான். கால வளர்ச்சியில் அவனுடன் அறிவும் வளர்ந்தது. ஒழுக்கமான சமூகத்தை அமைக்க ஆண் பெண் உறவுகளை வரையறுத்தான். காதல் மணம் கொண்டால்

அதுவே கற்பு மணமாகவும் இருக்க விரும்பினான். மக்கள் செல்வங்களைப் பெற்றான். இல்வாழ்க்கையிலும் சிறப்பானதொரு இடத்தைப் பெற்றான். இதுவே பொதுவாக மனிதனின் பரிணாம வளர்ச்சியாகும்.

சங்கத் தமிழர்கள் இத்தகைய குடும்ப உறவுகளில் மேம்பட்டதொரு வரன்முறையைக் கையாண்டு இருக்கிறார்கள். ஆண் - பெண் இருவரும் அறத்தோடு இணைந்த வாழ்வை வாழ்ந்திருக்கிறார்கள் என்பதைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

### 1.2.1 களவு வாழ்க்கை

சங்க காலத்தில் களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை என்று இல்லறம் இரு கூறாக்கப் பட்டிருந்திருக்கிறது. பெண் திருமணத்திற்குப் பின்பான வாழ்வினிலே கற்புக்கடன் பூண்டொழுக வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டு உள்ளது.

**‘களவு என்பது பிறர்க்குரியதன்று. இருமுது குறவரார் கொடை எதிர்ந்த தலைவியை, அவர் கொடுப்பக் கொள்ளாது, இருவரும் கறந்தவுள்ள தோடெதிர்ப் பட்டுப் புணர்வது. இது பிறர்க்குரிய பொருளை மறையிற் கொள்ளும் களவன்று. இது வேதத்தை மறையென்பது போல்வது’**12 என்கிறது அபிதான சிந்தாமணி.

அகப்பாடல் வரிசையில் முதலாவதாகக் களவு வாழ்க்கையையே சுட்டுகிறது. தலைவன் தலைவியின் மனதில் தோன்றும் ஒரு வித எழுச்சி நிலையினையே பகிர்ந்து கொள்ளும் விதமாகவே களவு வாழ்க்கை அமைகின்றது. சமுதாயத்திற்கும் பெற்றோருக்கும் தெரியாமல் ஒருவரையொருவர் தொடர்புக் கொண்டு வாழ்வது களவு வாழ்க்கை. சங்ககால களவு வாழ்க்கை பெரும்பாலோரால் கடைபிடிக்கப்பட்டு வந்த போதிலும், அவர்கள்

**‘கற்பும் காமமும் ஒழுக்கமும்**
**பொறையும் கட்டிய கிழவோன் மாண்புகள் தாம்’**13

என்று தொல்காப்பியர் கூறும் வரையறைக்குள் தான் வாழ்ந்திருக்கின்றனர்.

களவு வாழ்க்கையானது தலைவனும், தலைவியும் பிற்காலத்தில் இணைந்து நடத்த வேண்டிய இல்வாழ்க்கையின் நினைவாகவே நடத்தப் பட்டிருக்கிறதை அறிய முடிகிறது.

இக்களவு வாழ்க்கை காலத்தே தோழிக்குப் பிறகு அம்பல், அல் மூலம் களவு ஒழுக்கம் வெளிப்படுத்தப்பட்டது. அம்பல் என்பது இவர்களின் களவு ஒழுக்கத்தைச் சிலர் மட்டுமே அறிதல். அலர் என்பது பலரும் அறிதல்.

தலைவியின் உடல் வேறுபாட்டினைத் தாய் கண்டதும் கட்டுவிச்சியை கூப்பிட்டுக் குறி கேட்பதும், கழங்குப் பார்த்துக் காரணம் கண்டுபிடிப்பதும், வேலனைக் கொண்டு வெறியாட்டுதலும் கூட நிகழ்ந்திருக்கிறது. சில நேரங்களில் களவு வாழ்க்கையின் வெளிப்பாடாகத் தலைவியின் உடலில் ஏற்படும் மாற்றத்தைக் கண்ட தாய் அவளை வீட்டிற்குள்ளேயே இருக்கும்படி செய்து விடுவாள். இதற்கு "இற்செறித்தல்" என்று கூறுவர். பிறகு தான் தலைவியின் கள ஒழுக்கம் பெற்றவளுக்குத் தெரிய வரும். அப்படி தெரிய வருகிற போது பெற்றோர்கள் காதலுக்குத் தடை விதிப்பர். அந்தச் சமயத்தில் தலைவி, தலைவனுடன் இரவோடு இரவாகப் புறப்பட்டு வேற்றிடம் சென்று விடுவாள். இது "உடன்போக்கு" எனப்பட்டது. இந்த உடன்போக்கு தோழியின் துணையோடு நடைபெற்று இருக்கிறதைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

**"மங்களம் என்ப மனைமாட்சி மாற்றதன்**
**நன்கலம் நன்மக்கட் பேறு'**14

என்ற பொருளுக்கேற்ப களவு வாழ்க்கை திருமணத்தில் முடிவதையே சங்க மகளிர் விரும்பினர். மேலும் இளமையானது நீர்க்குமிழி போல் தானே அழியும் தன்மையுடையது அது அழியும் முன்னே தலைவனை மணம் முடிக்கவே பெரும்பாலும் விரும்பினள் என்பதை,

**'குரங்கின் றலைவன் குருமயிர்க் கடுவன்**
**சூரலஞ் சிறுகோல் கொண்டு வியலறை**
**மாரி மொக்குள் புடைக்கு நாட**
**யாநின் னயந்தன மெனினுமெம்**
**மாய்நலம் வாருமோ வருளுதி யெனினே**15

என்ற பாடலால் அறியலாம்.

### 1.2.1.1. தலைவனின் பண்பும் ஒழுக்கமும்

நல்லவர்களின் குணம் தீய வழியில் சென்றால் திரும்பப் பெற இயலாது என்கிறது குறிஞ்சிப் பாடலொன்று

**'முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை**
**நேர்வருங் குரைய கலங்கெடிற் புணரும்**
**சால்பும் வியப்பும் இயல்புங் குன்றின்**
**மாசற கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்**
**ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை**
**எளிய எண்ணார் தொன்மருங் கறிஞர்'16**

என்ற வரிகளானது முத்து, மாணிக்கக் கற்கள், பொன் ஆகியவற்றைச் சேர்க்க வேண்டிய முறையில் சேர்த்துச் செய்யப்பட்ட அணிகலன் ஏதேனும் ஒரு காரணத்தால் நூலறுந்து போனால் அதனைச் சிறந்த தொழிற்நுட்ப கலைஞரைக் கொண்டு சீர்படுத்திக் கொள்ளலாம். முன்பு போல அழகுடைய அணிகலனாய் மாற்றிக் கொள்ளலாம். ஆனால் சான்றாண்மையோ, பெருமையோ, நல்லொழுக்கமோ ஏதேனும் ஒரு காரணத்தால் வாழும் போது கெட்டுவிடுமானால் அதனால் உண்டான குற்றத்தை நீக்கி, மீண்டும் அந்த உயர்வினைப் பெறுதல் என்பது முனிவர்க்குக் கூட முடியாத செயலன்று என்று கூறுகின்றது.

அது மட்டுமின்றி ஒழுக்கம் தவறாமல் வாழவும் நம் பைந்தமிழ் இலக்கியங்கள் பல அறிவுரைகளை வழங்கியிருக்கிறது. மேலும் ஒழுக்கம் தவறாதவர் பெறக்கூடிய எட்டுவகை நன்மைகளையும் ஆசாரக்கோவை பட்டியலிடுகிறது. அவை நற்குறிப்பிறப்பு, நீண்ட வாழ்க்கை, பொருட் செல்வம், அழகுடமை, நிலத்துக்கு உரிமை, சொல்லின் மேன்மை, கல்வியறிவு, பிணியில்லாமை ஆகும்.

**'பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு**
**நிலக்கிழமை மீக்கூற்றல் கல்விநோ யின்மை**
**இலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்றும்**
**ஒழுக்கம் பிழையா தவர்'17**

இத்தகைய நெறிமுறைகளைக் கருத்தில் கொண்டே தலைவனின் பண்பு நலனும் அமைந்திருப்பதை அகப்பாடல்கள் பலவற்றின் வாயிலாக அறிய முடிகிறது.

**'பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை**
**யாடு சிறைவன் டழிப்பப்**
**பாடல் சான்ற காண்கம்வா ணுதலே'18**

**'உடன்நிலை வேட்கையின் மடநாடு தழீஇ**
**ஊர்வயின் பெயரும் பொழுதில்'19**

**'நம்நோய் தன்வயின் அறியான்**
**எம்நொந்து புலக்கும் சோல், மாஅயோளே'20**

**'யுள்ளுதொறு கலிழு நெஞ்சம்**
**வல்லே யெம்மையும் செவிழைத் தனையே'21**

என்னும் வரிகள் தலைவனின் பண்பு நலத்தையும் அவன் தலைவியின் மேல் வைத்திருந்த ஈடில்லா காதலையும், ஒழுக்க நெறியினையும் பறைசாற்றுகிறது.

### 1.2.1.2. தலைவியின் பண்பும் துணிவும்

சங்ககாலம் முதல் இக்காலம் வரை பெண்கள் தங்கள் வாழ்வின் எல்லா நிலைகளிலும் சிறப்பானவர்களாகவே காணப்படுகின்றனர். தலைவன் ஒருவன் மீதே விருப்புற்று வாழ்வது என்று பெண்கள் அவரவர் நிலைக்கேற்ப தம் பண்புகளையும், துணிவுகளையும் வெளிப்படுத்தியதைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகிறது.

தம் தலைவியை ஆற்றுவிக்க வேண்டிய தலைவனைப் பற்றியும் அவன் இயல்பு பற்றியும் பழித்துக் கூறுகிறாள் தோழி. அது கேட்ட தலைவி

**'தொல் கவின் தொலைய, தோள் நலம் சாஅய**
**நல்கார் நீத்தனர் ஆயினும், நல்குவர்**
**நட்டனர் வாழி!'22**

எனப் பழித்துச் சொல்லும்படி சென்றாலும் தன் தலைவன் தன்பால் மிக்க நட்பு வைத்திருப்பதாகவும், குறித்த பருவத்து அந்தத் தலையணி செய்வார் என்றும் கூறுவதோடன்றி, தம் தலைவனை நீடூழி வாழ்க! என வாழ்த்தும் தலைவியின் பண்பு போற்றத்தக்கதாகவே இருக்கிறது.

**‘செயல்படு மனத்தர் செய் பொருட்டு**

**அகல்வர், ஆடவர் அது அதன் பண்பே’23**

என ஆடவர் வினைமேற் கொண்ட உள்ளத்தாராய் பொருளீட்டுதற்கு அகலா நிற்பர். அவ்வாறு அவர் அகலும் போது மறுத்துக் கூறாமல் உடன்படுவதை அதற்குரிய பண்பு என தோழியிடம் தலைவி கூறுகிறார். இத்தகைய நல்ல பண்பு நலன்களைச் சங்க கால பெண்கள் பெற்றிருந்ததைக் குறிப்பிடுகின்றது.

**‘அறிவு அறிந்து அளவல் வேண்டும், மறுத்தற்கு**

**அரிய – வாழி, தோழி – பெரியோர்**

**நாடி நட்பின் அல்லது**

**நட்டு நாடார், தம் ஒட்டியோர் திறத்தே’24**

என்று தம் தலைவனுடன் நட்பு கொண்ட பின் அவன் தகுந்தவனா, தகாதவனா என்று ஆராய்ந்து கொண்டிருப்பது தவறான செயல் என்று தோழியிடம் தலைவி உரைக்கும் பண்பு நலன் போற்றத் தக்கது ஆகும்.

தலைவி எத்தகைய சூழலில் இருந்தாலும், அவள் தன்னைப் பற்றியோ, தன் மன உணர்வுகளைப் பற்றியோ எண்ணாமல் தன் நாட்டையும், நாட்டு மக்களையும் காக்க வேண்டிய தலைவன் நன்றாக இருக்க வேண்டும் என்ற உயர்ந்த பண்பினைப் பெற்றிருந்தாள்.

**‘வாழி யாதன் வாழி யவினி**

**நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க’25**

**‘விளைக வயலே வருக விரவல்’26**

பொய்கையில் மலரும் பூவினைக் காட்டிலும் மெல்லிய குணமுடையவள் சங்ககால தலைவி என்பதை, பொய்கை யூரன் மகளிவள் பொய்கைப் பூவினு நறுந்தண்ணியளே என்று ஐங்குறுநூறு சுட்டுகிறது.

ஐங்குறுநூற்றுப் பாடல்களில் வேட்கைப் பத்து முழுவதிலும் பெண்ணின் குணம் போற்றப்படுகிறது. புறத்தொழிக்கிலே நெடுநாள் ஒழுகிய தலைவனின் உடனுறைவின்பம் பெற்றில்லாத காலத்திலே தலைவியின் மன வேட்கை எவ்வாறு பொறுப்புணர்வோடு சென்றது என்பதை இதன் வழி விரிவாக உரைக்கப்பட்டுள்ளது.

தன்னுடைய இல்லறக் கடமைகளிலே தன் மனதை முற்றச் செய்திருக்கும் மனையற மாண்பினையும் இந்த இலக்கியத்தில் குறிக்கப்பட்டுள்ளது.

தன் தலைவனை நினைக்கும் முன் அவள் மனம் நாடு, அந்நாட்டு காவல் நன்றாக இருக்க வேண்டும் என்பதையே முதலில் நினைத்து வாழ்த்துகிறது.

**'பால்பல வூறுக பகடுபல சிறக்க்'**
**'பகைவர் புல் லார்க பார்ப்பா ரோதுக'**
**'பசியில் லாகுக பிணிசே ணீங்குக்'**
**'வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக்'**
**'அறநனி சிறக்க வல்லது கெடுக்'**
**'யரசு முறை செய்க களவில் லாகுக்'**
**'நன்று பெரிது சிறக்க தீதில் லாகுக்'**
**'மாரி வாய்க்க வளநனி சிறக்க்' 27**

என்ற வரிகள் இதனை எடுத்துரைக்கும்.

### 1.2.1.3. அறத்தோடு நிற்றல்

அறத்தோடு நிற்றல் என்பதற்குக் **'களவை முறையே வெளிப்படுத்தி நிற்றல், வெளிப்படுத்தலாவது, தலைவி பாங்கிற்கறத்தொடு நிற்கும், பாங்கி செவிலிக்கறத்தொடு நிற்றல், செவிலி நற்றாய்க்கறத்தொடு நிற்கும், நற்றாய் தந்தை தன்னையர்க்கறத்தொடு நிற்கும் என்பது'28** என்ற அபிதான சிந்தாமணி விளக்கம் கூறுவதோடன்றி மேலும் விரித்துரைக்கின்றது.

தலைவியின் நிலைகளை மறைமுகமாக எடுத்துக்கூறி அவளின் களவு ஒழுக்கத்தை வெளிப்படுத்தியும் கற்பே அறம் என எண்ணி அதை நிறைவேற்ற முற்படுவதே தோழியின் நிலையாகும்.

**'உண்டுறை யணங்கிவ ளுரைநோ யாயிற்**
**றண்சேறு கள்வன் வரிக்கு மூரற்**
**கொண்டொடி நெகிழச் சாஅய்**
**மென்றோன் பசப்ப தெவன்கொ லன்னாய்'29**

என்ற பாடல் தலைவனுக்கும், தலைவிக்கும் உள்ள உறவை எடுத்துக் கூறி மனம் செய்துரைக்க முற்படும் தோழியின் உயரிய மாண்பினைப் புலப்படுத்துகிறது.

### 1.2.2 கற்பு வாழ்க்கை

**'நற்றாய் கண்ணார், பாணர், கூத்தர், விறலி, பரத்தையர், அறிவர், தலைவன், தலைவி, பார்ப்பான், பாகன், பாங்கி, செவிலி என பதிமூன்று பெயர்களைக் கற்பிற் கூற்றிற்குரியவராகக் கூறுவர்.'30**

பெண்ணுக்குப் புகழைச் சேர்ப்பவை

**'கற்பும் காமமும் ஒழுக்கமும் பெறையும்**
**நிறையும் விருந்தெதிர் கோடலும்31**

என தொல்காப்பியர் கூறுகிறார்.

சங்ககால மக்களின் கற்பு வாழ்க்கையின் இன்பமயமான குடும்ப வாழ்க்கை மேலோங்கியிருந்ததாகத் தெரியவில்லை. தலைவனின் பரத்தையர் ஒழுக்கம் மேம்பட்டு இருந்த நிலையில் தலைவியின் துயரநிலையே ஆளுமை பெற்றிருந்ததாக அறியமுடிகிறது. இருப்பினும் பெண்ணானவள் பெருமையின் சிகரமாக இருந்து குடும்பத்தைக் கற்பு நெறியோடு காத்து வந்திருப்பது தெளிவாகிறது.

செல்வச் செழிப்புடன் வாழ்ந்தாலும் இல்வாழ்க்கை வெற்றிபெற சகிப்புத் தன்மையும், பொறுமையும், அவசியம் என்பதைத் தலைவியர் உணர்ந்திருந்தனர். அதனாலேயே இல்வாழ்க்கையானது உயர்நிலையை அடைந்திருந்தது.

தம் தலைவனின் ஊரானது நீரால் நல்குரவு உடைத்தெனினும் குறை கூறி பழிக்காது, தலைவன் இருக்கும் இடமே இன்பம் தரும் சொர்க்கம் எனக் கருதி இல்லறம் நடத்திய பெண்கள் கற்பு போற்றத்தக்கதே. இதனை

**'சினனே பேதைமை நிம்பிரி நல்குரவு**
**அனைநூல் வகையும் சிறப்பொடு வருமே32**

என்று தொல்காப்பியர் கூறுகிறார். இதுவே நம் தமிழ்ப் பெண்களின் பண்பாடு.

செல்வத்தில் பிறந்து செல்வமாய் வளர்ந்து செழித்தவள் ஒரு தலைவி. பிறந்த வீட்டில் தேன் கலந்த பாலை தான் பருக அடம் பிடிப்பவள் அவள். காதலில் ஒருவனை அவள் கைப்பிடித்த பின்பு கொண்ட கணவன் குடி வறுமை கண்டது. இதை அறிந்த செல்வ தந்தை கொடுத்தனுப்பிய கொழுஞ்சோற்றை மனதாலும் நினையாமல் ஒரு பொழுது உண்டு மறுபொழுது பட்டினி கிடந்து

கணவனின் வருவாய்க்குத் தக்க வாழ்வை மேற்கொண்டு வன்மையைக் கற்பின் திண்மையை

கொண்ட கொழுநன் குடிவறன் உற்றுளனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கு அறல் போலப்
பொழுது மறுத்து உண்ணும் சிறுமதுகையளே

என்ற பாடல் கற்பு வாழ்க்கைக்கு ஓர் சான்றாகும்.

**'சங்ககால மகளிர் நிலைமை மிகவும் உயர்ந்திருந்தது, என்பதில் சிறிதும் ஐயமில்லை. இல்லத்துக்கு மெய்யான அணிகலன் என மதிக்கப்பெற்ற மகளிர் தம் கணவரைத் தெய்வம் என வழிபடும் உயர்ந்த அறத்தின் குறிக்கோள் உடையராய் விளங்கினர். அவர் பெருமை சிறந்த தன்னுரிமையுடன் வாழ்ந்தனர். முகமூடி, முக்காடு மற்றும் சில பாசாங்கு ஒழுக்கமுறை இவற்றை பின்பற்றாது தாராளமாய் எங்கும் உலாவித் திரிந்தனர். பணத்திற்காக செல்வமிக்க இளைஞரை பயக்கும் விலைமகளிரும் இருந்தனர். எனினும் சமுதாயத்தில் இகழ்ந்து ஒதுக்கப்பெற்றனர். அவர் நிலை மிகவும் தாழ்ந்து இருந்தது'**[13] என்று கூறுவது ஒப்புநோக்கத்தக்கது.

### 1.2.3. திருமணம்

தமிழ் மக்கள் வாழ்வியலில் திருமணம் என்பது மிகவும் இன்றியமையாத ஒரு சடங்காகும். சங்க காலத்தில் களவு மணம், கற்பு மணம் என இருவகை மண ஒழுக்கங்கள் வழக்கில் இருந்தன.

சங்க இலக்கியங்களில் காணப்படும் திருமண முறைகள் தமிழர் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் முன்னரே நாகரீக வளர்ச்சி பெற்றிருந்ததை எடுத்துக் காட்டுகின்றது.

#### 1.2.3.1. தொல்காப்பியர் சுட்டும் திருமணம்

சங்க இலக்கியங்களுக்கு இலக்கணமாய் இருப்பது தொல்காப்பியம். இது பழந்தமிழ் இலக்கண நூல் மட்டுமின்றி, பழந்தமிழர்களின் வாழ்க்கையை முறைபடுத்திக் காட்டும் ஒரு விளக்க நெறி நூலாகும். அத்தொல்காப்பியத்தில்

திருமண முறைகளும், அதை சார்ந்த பல சடங்கு நெறிகளும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**
**காமக் கூட்டங் காணுங் காலை**
**மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்**
**துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே'34**

என்று களவின் வழி வந்த மனத்தைப் பற்றிக் கூறும் போது (பிரம்மம், பிரசாபத்தம், ஆரிடம், தெய்வம், காந்தருபம், அசுரம், இராக்கதம், பைசாசம்) எண்வகை மணங்களைக் குறிப்பிட்டு செய்கிறார்.

### 1.2.3.2. களவு (காதல்) மணம்

காதல் என்ற சொல் காலத்திற்கினிய சொல்லாகவும், கருத்துக்கு இனிய பொருள் தருவதாகவும் உள்ளது. காதல் உண்டானால் இவ்வுலகில் எல்லாம் உண்டு. காதல் இல்லையேல் ஏதுமில்லை. எனவே தான் 'காதல்... காதல்... காதல் இன்றேல் சாதல் சாதல் சாதல்' என்றார் பாரதி.

தேவாரத்தில் கூட 'காதலாலே கருதும் தொண்டர் காரணத்தார் ஆகி' என்று அடியாரது காதல் பேசப்படுகிறது.

**'காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி**
**ஓதுவார் தம்மை நன்னெறிக் குய்ப்பது**
**வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது**
**நாதன் நாமம் நமச்சிவாயமே'35**

என்று திருஞானசம்பந்தர் இறைவன் திருநாமத்தை ஓதும் காதலடியார் பெருமையை கூறுகிறார்.

நண்பர்களையும் பெற்ற பிள்ளையையும் கூட காதலன் என்று கூறும் வழக்கம் நம் பழந்தமிழரிடத்தில் இருந்ததை 'வழி காதலன்' என்று வாலியின் மைந்தனாகிய அங்கதனைக் கம்பர் கூறுவதிலிருந்து உணரமுடிகிறது.

**‘சீதையை நோக்கித் தம்பி திருமுகம் நோக்கித் தீராக் காதலனாகும் என்று கருணையின் மலர்ந்த கண்ணன் யாதினும் இனிய நன்ப இருத்தி ஈண்டு எம்மொடு என்றான்’36** என்று கங்கைக் கரையிலே இராமனுடைய நண்பனாகிய குகனைப் பற்றிக் கம்பர் கூறுவதிலிருந்து பாசமும், நேசமும், பக்தியும், அன்பும் கலந்ததுவே காதல் என்று புலப்படுகிறது.

> **‘ஆதியில் காதல் மணமே தமிழ்நாட்டில் சிறந்து விளங்கிற்று. காதல் இல்லா வாழ்க்கை உயிர் இல்லாத உடல் போன்றது என்பது தமிழர் கொள்கை. காதலுற்ற கன்னியர் தம் கருத்து நிறைவேறும் வண்ணம் காமனை வேண்டிக் கொள்ளும் வழக்கமும் முற்காலத்தில் இருந்ததாகத் தெரிகிறது. காதல் விளைவிக்கும் தேவனைக் காமன் என்றும், காமவேல் என்றும் தமிழர் அழைத்தனர். தாம் கருதிய காதலனைக் கணவனாக பெறுவதற்கும், பிரிந்த கணவனை மீண்டும் அடைவதற்கும் காமன் கோயில் சென்று மங்கையர் வழிபடும் வழக்கமும் அந்நாளில் இருந்தது’37**

### 1.2.3.2.1 களவு வெளிப்பட்டபின் திருமணம்

காதலில் வீழ்ந்த தலைவனும், தலைவியும் திருமணம் செய்து கொள்ள இருமறைகளைப் பின்பற்றியிருக்கிறார்கள். ஒன்று வெளிப்பட வரைதல் மற்றொன்று படாமை வரைதல் என்பதை,

> **‘வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று**
> **ஆயிரண் டென்ப வரைதல் ஆறே’ 38**

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

இது தலைவி அறத்தோடு நின்ற பின் நிகழ்வது. தலைவன் தலைவியை மணந்து கொள்ளும் பொருட்டுத் தன் சுற்றத்தாருடன் தலைவியின் இல்லம் தேடி சென்று பெண் கேட்டுப் பரிசுப் பொருள் கொடுத்து மணந்து கொள்ளும் திருமணம் வெளிப்பட வரைதல் எனப்பட்டது.

#### 1.2.3.2.2 வெளிப்படாமை வரைதல்

தலைவன் தலைவி அறத்தோடில்லாமல் நிகழும் திருமணம் வெளிப்படா வரைதல் ஆகும். அதாவது தலைவன், தலைவியைத் தனது ஊருக்கு கொண்டு சென்ற பின் தலைவியின் இருப்பை அறிந்து தலைவனைக் கண்டு தம்மூரில் வந்து மணம் புரிந்து கொள்ளுமாறு தலைவன் சுற்றத்தார் வேண்டுவர். அதற்குத் தலைவன் உடன்பட்டால் தலைவியின் இல்லம் அடைந்து திருமணம் புரிவான். இல்லையேல் தலைவன், தலைவியைத் தன் வீட்டிலே வைத்து மணம் புரிந்து கொள்வான். இதுவே வெளிப்படாமை வரைதல் ஆகும். இதனை **'ஒழிந்த கலியாணம்'39** என இறையனார் அகப்பொருளுரைச் சுட்டுகிறது.

மேலும் மடலேறி திருமணம் கொள்ளுதல், ஏறு தழுவி திருமணம் கொள்ளுதல், மறங்கொல் மணம் (யானைகளைக் கொன்று மணம் புரிதல், பெண்ணின் தந்தையை வென்று மணமுடித்தல் போன்ற முறைகளையும் கடைப்பிடித்தனர்.

### 1.2.3.3 கற்பு மணம்

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து இம்மை புகழும், மறுமைப் பேறும் பெறுவதற்கென்று, ஆன்றோர்களின் ஆசிகளுடன், சடங்குகளுடன் நடத்தப்படுவதே திருமணம் என்பதை,

> **'காமஞ் சான்ற கடைக்கோட காலை**
> **ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி**
> **அறம்புர் சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
> **சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே் 40**

எனத் தொல்காப்பியர் கூறுகிறார்.

> **'திருமணம் என்பது ஒரு வேள்வி போன்றது. இது வறிதே ஓர் ஆணையும், பெண்ணையும் இணை விழைச்சுக் காரணமாக இணைத்து வைக்கும் செயலன்று. அ∴து இல்லறம் என்ற வாழ்க்கைப் பயனைப் பெற சமுதாயத்தில் அமைத்துத் தரப்படும் ஒரு அந்தணர் ஓம்பல், துறவோர்க்கெதிர்த்தல், விருந்தெதிர் கோடல் அன்றியும் தென்புலத்தால்**

**தெய்வம் இவர்களைப் பேணல், சுற்றம் தழுவுதல் போன்ற பலவற்றிற்கு அடிப்படையாக நிகழ்த்தப் பெறும் சடங்கொடுப்பட்ட நிகழ்ச்சியாகும்41**

உற்றார் உறவினர் அறிய பெற்றோர் பார்த்து மணம் புரிந்து வைப்பது கற்பு மணமாகக் கருதப்படுகிறது. பண்டைய காலத்தே திருமணம் பேச, தலைவன் வீட்டைச் சார்ந்த சான்றோர் தலைவி வீட்டிற்குச் செல்லுவதும், சென்று கேட்பதும், தலைவியின் சுற்றத்தாரும் ஊர் சான்றோரும் கேட்டுத் தகுதி முதலியவற்றை ஆராய்ந்து இசைவதும் இயல்பாகவே இருந்திருக்கிறது. பலரறி மணமே திருமண உறவாக ஏற்கப்பட்டிருந்ததை வெள்ளி வீதியாரின் குறுந்தொகைப் பாடல் தெளிவுப்படுத்துகிறது.

**'அம்ம வாழி தோழி – நம் ஊர்ப்**
**பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர் கொல்லோ**
**தண்டுடைக் கையர், வெண்தலைச் சிதவலர்**
**'நன்று நன்று' என்னும் மாக்களோடு**
**'இன்று பெரிது' என்னும் ஆங்கணது அவையே!42**

தலைவனும், தலைவியும் மேடை அமைத்து அதில் இருத்தி வதுவை மணம் என்னும் திருமணம் செய்து வைத்தனர். பெண்ணுக்குக் கொடுக்க வேண்டிய பொருளைக் கொடுத்து, 'கற்புத் தவறா வாழ்க்கை வாழ்க. குடும்பத்திற்கு நல்ல பல காரியங்களைச் செய்வதற்கு உதவுக. உன் கணவன் உன் மேல் எப்பொழுதும் விருப்பத்துடன் இருக்கும் படி துணை நிற்க' என்றுக் கூறி வாழ்த்தி இருவருக்கும் மணம் செய்து வைத்தனர்.

**'பிறப்பே குடிமை ஆண்மையாண்டோடு**
**உருவு நிறுத்த சாம வாயில்**
**நிறையே யருளே உணர்வொடு திருவென**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே' 43**

என்ற தொல்காப்பிய நூற்பாவானது திருமணம் பத்துப் பொருத்தம் பார்த்த பிறகே செய்யப்பட்டதை உரைக்கிறது.

### 1.2.3.3.1 தாலி

சங்ககால மக்கள் களவு வாழ்க்கையை விரும்பிய போதும் அது கற்பு வாழ்க்கையில் முடிவதையே விரும்பினர். காதலானது திருமணத்தில் முடிய வேண்டி பல்வேறு முயற்சிகளைத் தலைவனும், தலைவியரும் மேற்கொண்டனர்.

திருமணத்தில் தாலி அணியும் பழக்கம் சங்ககால மக்களிடையே இருந்தது.

**'ஆரந் தாங்கிய அலர்முலை யாகத்துப்**

**பின்னமை நெடுவீழ் தாழத் துணை துறந்து'44**

என்ற பாடல் வரியினால் அறியலாம்.

### 1.2.3.4 கைம்மை நோன்பு

தற்காலத்தில் கொழுந்தன் என்னும் சொல் கணவனின் தம்பியைக் குறிப்பதாக இருக்கிறது. பண்டைய தமிழகத்தில் கொழுநன் என்ற சொல் கணவனையே குறித்தது. அப்படி கணவன் இறந்துபட்டால் உடன்கட்டை ஏறுதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இன்னும் சிலர் கைம்மை நோன்பு நோற்றிருந்தனர்.

அதாவது நீர் சோறு, எள் துவையல், புளி கூட்டி சமைத்த வேளையிலை ஆகியவை உணவாக உண்டு பாயின்றி பருக்கைக் கல் மீது படுத்துத் தூங்குவதை வழக்கமாகக் கொள்வதே கைம்மை நோன்பு ஆகும். இதனை

**'அனில் வரிக் கொடுங்காய் வாள்போழ்ந்திட்ட**

**காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது**

**அடைஇடைக் கிடந்த கைபிழி பிண்டம்**

**வெள் எள் சாந்தொடு புளிப்பெய்து அட்ட**

**வேளை வெந்தை வல்சி யாகப்**

**பரல்பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்**

**உயவல்...'45**

என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

கைம்பெண்கள் அள்ளியெடுத்து உண்டலும் புல்லரிசியை (விதை) உணவாகக் கொண்டதை,

**‘பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுது மறுத்து**
**இன்னா வைகல் உண்ணும்**
**அல்லிப் படூஉம் புல்லா யினவே்46**

என்ற ஒக்கூர் மாசாத்தியார் பாடலால் அறியலாம்.

கணவனை இழந்த பெண்கள் மயிரைக் கொய்தும், வளையல்களைக் களையும் வழக்கமும் இருந்தது என்பது

**‘கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி**47

என்ற தயங்கண்ணியர் பாடலால் தெரிய வருகிறது.

### 1.2.3.5 பரத்தை மகளிர்

பண்பாட்டிலும் நாகரீகத்திலும் மனித இனம் பல்வேறு படிம நிலைகளைக் கடந்து உயர்ந்த நிலைக்கு வந்திருக்கிறது. ‘பரத்தமை என்பது மனித இனத்தை ஊடுருவி மேலும் தொடர்ந்து கொண்டே இருக்கிறது’. சங்க இலக்கியங்களிலும், இலக்கண நூல்களிலும் வரைவின் மகளிர் பற்றிய செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

பரத்தையர் என்போர் ஆடல் பாடல்களில் சிறந்தவர்களாகவும் அழகையும், இளமையும் வெளிப்படுத்தி, இன்பத்தையும், பொருளையும் விரும்புபவர்களாகவும் இருந்திருக்கிறார்கள்.

பெரும்பாலும் தலைவன் தலைவியைப் பிரிந்திருக்கும் தருவாயில் பரத்தையிடம் சென்றான். அதாவது தலைவியுடன் உடலுறவு கொள்ள முடியாத சமயங்களில் பரத்தையை நாடுவான் என்றும் அதே சமயத்தில் பூப்பு நிகழ்ந்து நீராடிய பின்னர் வரும் பன்னிரெண்டு நாளும் கரு உருவாகும் நாள் ஆகும். ஆகையால் அக்காலத்து மனைவியைப் பிரிந்து தலைமகன் பரத்தையைத் தேடுவதில்லை என்பதைத் தொல்காப்பியத்தில் அறியலாம்.

**‘பூப்பின் புறப்பாடு ஈரறு நாளும்**
**நீத்தகன் நுரையார் என்மனார் புலவர்**
**பரத்தையில் பிரிந்த காலையான்’48**

இவர்கள் பரத்தன்மை வாய்த்திருப்பினும் இவர்களுக்கென்று ஒரு ஒழுங்கு நிலையைக் கடைபிடித்தமையும் சங்கப் பாடல்களால் அறிய முடிகிறது.

### 1.2.4 அறச்செயல்

சங்க இலக்கியங்களில் அறக்கருத்துக்களைத் தொகுத்துத் தனி நூலாக ஆக்காமல் வேண்டிய இடங்களில் இடம்பெற செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது. அரசர் முதல் குடிமக்கள் வரை அறத்தைத் தலையாய கடமையாகக் கொண்டொழு கியதை இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன.

அறம் செய விரும்பு என்பது ஔவை வாக்கு. அரசராகட்டும் சாதாரண குடிமக்களாகட்டும் தன்னால் முடிந்தளவிற்கு அறச்செயல்களைச் செய்தனர்.

**‘அறம் என்பதற்குக் கையறம், கருமம். நீர்மை, நூற்பயன், நான்கினொன்று பெரியோர் இயல்பினனொன்று’49** என்று தமிழ் அகராதி கூறுகிறது.

அறம் என்பது இல்லறம், துறவறம் என இருவகைப்படுகிறது. ‘இல்லறம் என்பது கொடுத்தலும், கோடலும், இன்மையும் ஒழுக்கமும், புணர்தல், புணர்ந்தோர் பேணல், மற்றையவுமாம். துறவறமாவது துறவும், அடக்கமும், பிறவுமாம்’ என்று வீரசோழியம் கூறுவதாக அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது. திருக்குறளின் அறத்துப் பால் இல்லறம் துறவறம் பற்றி 32 அதிகாரங்களில் குறிப்பிடுகின்றது. வருவாயில் கால் பகுதி அறத்திற்குச் செலவிட வேண்டும் எனவும் கூறுகின்றது.

### 1.2.5 இல்வாழ்க்கையின் பண்பு நலன்கள்

சங்க கால மக்கள் நிலத்தின் தன்மைக்கேற்ப தமது வாழ்க்கைமுறையை வகுத்துக் கொண்டனர்.

இயற்கையாக அமைந்த நிலங்களில் வசித்த மக்களின் வாழ்க்கை முறையும் மாறுபட்டதாகவே இருந்தது. குறிப்பாகத் தொழில், உணவு, உடை, பண்பாடு போன்றவற்றில் பெரிதும் மாற்றம் கொண்டிருந்தனர். எனினும்

இல்வாழ்க்கை குணநலன்களில் பெரும்பாலும் ஒத்திருந்ததைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது.

அரச குடும்பமாக இருந்தாலும், அந்தணர் குடும்பமாக இருப்பினும் வணிகர், கலைஞர் யாராக இருப்பினும் அவர்கள் பண்பு நலன்களில் பகலவனைப் போல் ஒளி வீசினர். பெண்கள் தங்கள் கணவர் தம்மை விட்டு நீங்கினாலும் மற்றவர்கள் குறை சொல்லாத அளவிற்குக் குடும்பம் நடத்தினர்.

### 1.2.5.1 அரசர் குல இல்வாழ்க்கை

'சங்க கால மக்கள், மன்னன் எவ்வழி மண்ணுயிர் அவ்வழி' என்ற கொள்கையில் வாழ்ந்திருந்தனர். பிள்ளைப் பெற்று வளர்ப்பது தாயின் கடமை. அவர்களைப் பேணி அறிவுடையாராக்குவது தந்தையின் கடமை. ஒழுக்க நெறியினில் அவர்களை நிறுத்துவது அரசன் கடமை என்று, சங்கப் பாடல் ஒன்று குறிப்பிடுகின்றது.

அரசன் நீதி தவறும் பட்சத்தில் பருவமழை பெய்யாது. மக்களும் கடும் பஞ்சத்திற்கு ஆளாவார்கள் என்று நம்பினர். 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்ற வரிகள் இதனை உணர்த்தும்.

நாட்டில் வாழும் உயிர்கள் அனைத்துக்கும் அரசனே உயிராகக் கருதப்பட்டான் என்பதை,

**'நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே**

**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்50**

என்று புறப்பாட்டு வரிகளால் அறியலாம்.

அரசர்கள் பெரும்பாலும் பலதார மணத்தினைக் கொண்டவர்களாக இருந்தனர் என்பதனை,

**'ஆய்தொடி மகளிர் நறுந்தோள் புணர்ந்து**

**கோதையிற் பொலிந்த சேக்கைத் துஞ்சித்51**

என்று குறிப்பிடுகிறது.

அரசர் மாதேவியர் கற்பு மேம்பட பொலிவு பெற்றவர்களாக இருந்தனர். நல்லதொரு இல்வாழ்க்கை நடத்தினர். தன் கணவர்கள் போருக்குச் சென்ற

போது தனிமையில் துயரத்துடன் வாழ்ந்தனர். இது முல்லை ஒழுக்கம் எனப் பட்டது. முல்லை ஒழுக்கம் என்பது கற்புடைய மனைவியின் ஒழுக்கமாகும். அதே போல் அரசர் இறக்கும் பட்சத்தில் அவர் மனைவி கலைநயமிக்க ஆடைகளைக் கைவிட்டு நூலாற் செய்த ஆடைகளை அணிந்தனர். நகைகளை அணியவில்லை.

போரற்ற காலங்களில் அரசர்களும் தம் மனைவி குழந்தைகளுடன் குதூகலமாகக் குடும்பம் நடத்தினர்.

கரிகாலன் மார்பின் மீது அவனுடைய பிள்ளைகள் விளையாடி அவன் மார்பில் பூசியிருந்த சந்தனத்தைக் கலைத்து விட்டதையும், அவன் மனைவியர் அவன் மார்பைத் தழுவியதனால் அவன் மார்பில் பூசிய சந்தனம் அழிந்து விட்டதையும் பட்டினப் பாலை குறிப்பிடுகின்றது.

**'பொற்றொடிப் புதல்வர் ஓடி யாடவும்**
**முற்றிழை மகளிர் முகிழ்முலை திளைப்பவும்**
**செஞ்சாந்து சிதைந்த மார்பின் ஒண்பூண்**
**அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்**
**திருமா வளவன்...'52**

### 1.2.5.2 அந்தணர் இல்வாழ்க்கை

**'.... ஒருமுகம்**
**மந்திர விதியின் மரபுளி வழாஅ**
**அந்தணர் வேள்வியோர்க் கும்மே' 53**

ஒரு முகமானது அந்தணர்கள் செய்யும் மந்திரத்தையுடைய வேதத்தில் விளங்கும் முறை தவறாதபடி அவர்கள் செய்யும் வேள்வியை நினைத்துக் கொண்டிருப்பதாகத் திருமுருகாற்றுப்படை கூறுகிறது. இதிலிருந்து தமிழ்நாட்டிலே அந்தணர்கள் வேதமுறைப்படி வேள்விகள் செய்தமை புலப்படுகிறது.

அந்தணர் வீட்டு பெண்கள் சாணத்தால் மெழுகப்பட்ட வழிபடும் தெய்வங்கள் வாழும் நல்ல இல்லங்களைத் தூய்மையாக வைத்திருந்தனர். கிளிகளுக்கு வேதத்தின் ஒளியைக் கற்றுக் கொடுத்து வேதம் கூறும் ஒழுக்கத்தைப் பாதுகாத்து அந்தணர்களுக்கும் உறுதுணையாக இருந்தனர்.

### 1.2.5.3 வணிகரின் இல்வாழ்க்கை

காவிரி பூம்பட்டினத்தில் வசித்த வணிகர்கள் பசுக்களையும், எருதுகளையும் பாதுகாத்தனர். அந்தணர்களுக்கு உண்டான புகழை நிலைபெற செய்தனர். தேவர்களை வழிபட்டனர். வேள்விகள் செய்து அதிலும் ஆவூதிகளைத் தேவர்கள் நுகரும்படி செய்தனர். அதிக புண்ணியங்களைச் செய்தனர். புண்ணியம் செய்ய மாட்டாதார்க்குத் தானம் பண்ணினர்.

**'.... நாணுக்கொள**
**ஏழ்புணர் சிறப்பின் இன்றொடைச் சீறியாழ்**
**தாழ்பயற் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து**
**வீழ்துணை தழீஇ'54**

என்ற பாடல் வணிககுல குடும்பப் பெண்களின் செயலை விவரிக்கிறது.

மாலை நேரத்தில் தங்களை அழகாக ஒப்பனை செய்து கொண்டனர் என்றும், ஏழிசைகளையும் நன்கு உணர்ந்தவர்களாக இருந்தனர் என்றும், "குளிர்ந்த அவளுடனே வாழும் இல்வாழ்க்கையை உடையவர்கள் நன்னெஞ்சினர்கள் என்று அவர்களை மாங்குடி மருதனார் பாராட்டியுள்ளார்"55

### 1.2.5.4 கலைவாணர் இல்வாழ்க்கை

இவர்கள் எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்கள். இருப்பினும் நல்லதொரு வாழ்க்கை மேற்கொண்டவர்கள். இசைக்கருவிகளை இசைத்துப் பாடுபவன் பாணர். அவர் மனைவி விறலி. ஆடல் பாடல்களில் தேர்ந்தவர். அவள் தன் கணவனுடன் காடு மலையும் கடந்து சென்று தன் திறமையால் வள்ளல்களைக் கண்டு சிறந்த பரிசுகளைப் பெற்று வாழ்க்கை நடத்தினர். பாணர், பொருநர், கூத்தர், விறலியர் கலை வாழ்க்கை வாழ்ந்தவர்கள். கணவன் மனைவி இருவருமே ஒன்றுபட்டுக் கலைத் திறனை வெளிப்படுத்தி அதனால் கிடைத்த செல்வத்தைத் தானும் நுகர்ந்து தம் சுற்றத்தார்க்கும் பகிர்ந்தளித்து மிகவும் பண்பினராக இருந்துள்ளனர்.

உணவுக்காக அவர்கள் காத்திருப்பதில்லை என்பதை,

**'அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்ச்**
**சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது**
**வேறுபுல முன்னிய விரகறி பொருந்56**

என்ற வரிகள் கூறும்.

**‘முல்லை சான்ற கற்பின் மெல்லியல்57**

என்ற வரி கலைவாணர் பெண்களின் கற்புத்திறத்தைக் கூறுகிறது.

இல்வாழ்க்கை நடத்தும் கணவனும், மனைவியும் தம் சுற்றத்தாரைக் காக்கும் கடமைக் கொண்டவர்கள். அதோடு தம்மை நாடி வருபவர்களையும் உபசரிப்பது அவர்களது கடமையாகும். இக்கடமையைக் கணவன் - மனைவி இருவருமே விரும்பி செய்ததைச் சங்க இலக்கியம் பறை சாற்றும்.

### 1.2.5.6 விருந்தோம்பல்

தற்காலத்தில் உறவினர்களை வீட்டிற்கு அழைத்து விருந்து வைக்கும் வழக்கம் படிப்படியாகக் குறைந்து வருகிறது. அதற்குக் காரணம் நவீன கால கலாச்சார முறைகளும், பணிச் சுமையும், அதனால் நேரமின்மையும் என்று கூட கூறலாம். மேலும் பொருளாதார மந்த நிலை, ஊடகங்களின் பங்களிப்பு என்ற பல்வேறு காரணிகளாலும் விருந்தோம்பல் என்பது சாத்தியமற்று போகிற நிலையிலிருக்கிறது. வரவுக்கும், செலவிற்குமான இடைவெளி விரிவடைவதும் ஒரு காரணம் எனலாம்.

ஆனால் சங்ககால சமூகம் விருந்தோம்பலில் தலைசிறந்து விளங்கி யிருக்கிறது. செல்வர், வறியவர் என்று யாராயினும் தம், தம் நிலைக்கேற்ப இருப்பதைக் கொண்டு தம்மை நாடி வந்தவர்க்கு விருந்தளித்து உபசரித்திருப்பதைச் சங்கப் பாடல்களால் அறியமுடிகிறது.

**‘மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்**
**அட்டு ஆன்று ஆனாக் கொழுந்துவை ஊன்சோறும்**
**பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுணீ58**

என்ற வரிகள் அரசர்கள் தம்மை நாடி வந்த விருந்தினர்களுக்கு ஊண்சோறு அளித்து உபசரித்ததை எடுத்துரைக்கிறது.

**‘செழுநகர் நல்விருந்து அயர்மார் ஏமுற**
**விழுநிதி எளிதினின் எய்துக தில்ல்**

என்ற வரிகளும் இதனையே கூறும்.

தம்மை நாடி வருபவர்களுக்கு எவ்வகை வேறுபாடுகளும் கொள்ளாமல் விருந்தோம்பலைச் செய்தனர். வள்ளல்கள் மட்டுமின்றி சாதாரண மக்களும் விருந்தோம்பலைச் செய்தனர். ஐவகை நிலத்திற்குரியவர்களும் அவரவர் தன்மைக்கேற்ப விருந்தோம்பல் செய்திருக்கின்றனர்.

மாமிசத்தை வேகவைத்தும், சுட்டும் உணவு சமைத்தனர். விருந்தினர் களுக்குச் செம்மறி ஆட்டு கறியினை வழங்கினர். இதனை

**'இழையணி வனப்பி னின்னகை மகளிர்**
**போக்கில் பொலங்கல நிறையப் பல்கால்**
**வாக்குபு தரத்தர வருத்தம் வீட**
**ஆர வுண்டு பேரஞர் போக்கிச்**
**செருக்கொடு நின்ற காலை' 59**

**'துராஅய் துற்றிய துருவையம் புழுக்கின்**
**பராஅரை வேவை படுகெனத் தண்டிக்**
**காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை**
**ஊழின் ஊழின் வாய்வெய் தொற்றி**
**அவையவை முனிகுவ மெனினே சுவைய**
**வேறுபல் லுரவின் விரகுதந் திரீஇ..'60**

என்ற பாடலால் அறியலாம்.

### 1.2.5.6.1 குறிஞ்சி நில மக்களின் விருந்தோம்பல்

தம்மைத் தேடிவரும் விருந்தினர்க்கு நெய்யிலே மான் இறைச்சியை வறுத்தும், திணை சோறிட்டும் உபசரித்தனர். உணவிற்குப் பிறகு தேனிலிருந்து பெறப்பட்ட மதுவையும், அரிசியிலிருந்து தயாரிக்கப்பட்ட கள்ளையும் கொடுத்தனர். மேலும் கடமானின் கறியையும், பன்றிக் கறியையும், உடும்புக் கறியும் பரிமாறினர். மூங்கில் அரிசி சாதம் கொடுக்கும் பழக்கம் குறமகளுக்கு இருந்திருக்கிறது. இதை மலைபடுகடாமினால் அறியலாம்.

**'வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனின்**
**இன்புளிக் கலந்து மாமோ ராகக்**
**கழைவளர் நெல்லின் அரியுலை ஊழ்த்து'61**

### 1.2.5.6.2 முல்லை நில மக்களின் விருந்தோம்பல்

முல்லை நில மக்கள் தம்மை நாடி வந்த விருந்தினர்க்கு முதலில் அவர்கள் நடந்து வந்த களைப்பு நீக்க பசுவின் பாலைக் கொடுத்தனர்.

தயிரைக் கடைந்து மோராக்கி அதை நெல்லுக்கு விற்று அந்நெல் கொண்டு விருந்தினர்க்கு வெள்ளாட்டுக் கறியுடன் உணவு பரிமாறினர். சைவ உணவு விரும்புவோர்களுக்குப் பால் மற்றும் பால் சாதத்தைக் கொடுத்து மகிழ்ந்தனர்.

### 1.2.5.6.3 மருத நில மக்களின் விருந்தோம்பல்

மருத நில மக்கள் தம் குடும்பத்தினருடன் விருந்தினரை வரவேற்று உபசரித்து மகிழ்ந்தனர். கைக்குத்தல் அரிசியைக் கொண்டு சோறாக்கி, பீர்க்கங்காய் கறியுடன் நண்டினையும் சமைத்து உணவளித்தனர். வரகரிசியுடன், அவரைப் பருப்பைக் கலந்து உணவுச் சமைத்தும் விருந்தினர்களுக்கு அளித்து மகிழ்ந்ததை,

**‘நெடுங்குரற் பூளைப் பூவி னன்ன**
**குறுந்தாள் வரகின் குறளவிழ்ச் சொன்றிப்**
**புகரினர் வேங்கை வீ கண் டன்ன**
**அவரை வான்புழுக் கட்டிப் பயில்வுற்**
**றின்சுவை மூரற் பெறுகுவிர்’62**

என்ற பாடலால் அறியலாம்.

வாலை மீனையும், ஆமையினையும் கரும்பினைக் கொடுத்து வாங்கிய தேனையும், தொலைதூரத்திலிருந்து வந்தவர்களுக்குக் கொடுத்து மகிழ்ந்தனர்.

### 1.2.5.6.4. நெய்தல் நில மக்களின் விருந்தோம்பல்

நெய்தல் நிலம் சார்ந்த மக்கள் வருகின்ற விருந்தினருக்கு கள்ளையும் அதற்குத் துணையாகக் கருவாட்டையும் அளித்து மகிழ்ந்தனர்.

**‘வறற்குழற் சூட்டின் வயின்வயின் பெறுகுவிர்**
**வேடற்குல பெண்கள் புலிக்கறியுடனும், ஆமான் 63**

முதலியவற்றுடன் விருந்தளித்தனர்.

**‘எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு**
**தேமா மேனிச் சில்வளை யாயமொடு**
**ஆமான் சூட்டின் அமைவரைப் பெறுகுவிர்64**

உழவர்கள் கைக்குத்தல் அரிசியுடன் வயல் நண்டுகளையும், தம் கொல்லையிலே விளைந்த பீர்க்கங்காயுடன் சேர்த்து உணவளித்து மகிழ்ந்தனர்.

**‘இருங்காழ் உலக்கை இரும்புமகந் தேய்த்த**
**அவைப்புமாண் அரிசி அமலைவென் சோறு**
**சுவைத்தாள் அலவன் கலவையொடு பெறுகுவிர்65**

நல்ல தானிய உணவுகளையும் விருந்தினர்க்குப் பாலுடன் கலந்து வழங்கி சிறப்பித்தனர்.

### 1.2.5.6.5 பாலை நில மக்களின் விருந்தோம்பல்

ஏழ்மையில் இருந்த போதும் எயிற்றிய பெண்கள் தம்மை நாடி வருபவர்களுக்கு எறும்புகள் சேர்த்து வைத்திருக்கின்ற புல்லரிசியைத் தேடிச்சன்று எடுத்து வந்து உரலில் குற்றி கொழித்தெடுத்துக் கிணற்றில் ஊறிய உப்புநீரைக் கொண்டு பழைய பானையிலிட்டுச் சமைத்து, உப்புக் கண்டத்துடன் வழங்கி உபசரித்ததை,

**‘நுண்பு லடக்கிய வெண்ப வெயிற்றியர்**
**பார்வை யாத்த பறைதான் விளவின்**
**நீழன் முன்றி நிலவுரற் பெய்து**
**குறுங்காழ் உலக்கை யோச்சி நெடுங்கிணற்று**
**வல்லூற் றுவரி தோண்டித் தொல்லை**
**முரவுவாய்க் குழிசி முரியடுப் பேற்றி**
**வாரா தட்ட வாடூன் புழுக்கல்66**

என்ற பாடல்கள் எடுத்துரைக்கிறது.

புளிக்கறியுடன் சோற்றையும் விருந்தினர்க்கு வழங்கி உபசரித்தனர். மேட்டு நிலத்தில் விளைந்த நெற்சோற்றினை நாய்களால் வேட்டையாடப்பெற்ற உடும்பு பொறியலுடன் விருந்தினர்க்கு உணவளித்தனர்.

**'கொடுவில் எயினக் குறும்பிற் சேப்பின்**
**களர்வளர் ஈந்தின் காழ்கண் டன்ன**
**சுவல்விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி**
**ஞமலி தந்த மணவுச் சூழ் உடும்பின்**
**வறைகால் யாத்தது வயின்றொறும் பெறுகுவிர்' 67**

'தெய்வீக குணங்களில் தலைசிறந்த குணமாக விளங்குவது சகிப்புத் தன்மை ஆகும். எந்தவொரு இலட்சியத்தை அடைய வேண்டும் என்றாலும் அதற்கு சகிப்புத் தன்மை அவசியமாக இருக்கிறது.'68 அத்தகைய சகிப்புத் தன்மைகளை சங்ககால மக்கள் பெற்றிருந்தனர். நிறப்பாகுபாடு, இனப் பாகுபாடின்றி தம்மை நாடி வந்தவர்களை வரவேற்றுத் தாம் உண்ணும் உணவையே விருந்தினருக்கும் வழங்கிய விருந்தோம்பல் பண்பு போற்றுதற்குரியாதாக இருக்கிறது.

### 1.2.6 மக்கட் பேறு

**'பண்ட உற்பத்தியைத் தவிர, பொருளுற்பத்தியின் இன்னொரு துறையும் இருக்கிறது, இது தான் மனிதனை உற்பத்தி செய்வது. இது குடும்பத்தின் மூலம் நடைபெறுகிறது. இதன் வடிவங்களும் வரலாற்றுப் போக்கில் மாறுதல் அடைந்தன. சமுதாயம் வளர்ச்சி அடைய அடைய வரலாற்றுப் போக்கின் மீது குடும்பம் செலுத்தும் செல்வாக்கும் குறையலாயிற்று.**

**குடும்பம் என்பது பொருள் உற்பத்தி அமைப்பின் ஒரு கண்ணி மட்டுமே எனக் கருதுவதும் தவறாகும். இது ஒழுக்க நெறி, சட்டம், மற்ற ஆன்மீக உறவுகளின் ஜீவாதாரமான பாத்திரம் வகிக்கிறது. மனிதனின் மறு உற்பத்தி மட்டும் குடும்பத்தின் வேலை அல்ல. புதிய தலைமுறையைப் பயிற்றுவிப்பதில் அது மிக முக்கியமான பங்காக வகிக்கிறது.**

**இவை எல்லாவற்றுக்கும் இடையில் மனிதனை மறு உற்பத்தி செய்வது சம்பந்தமான குடும்பத்தின் பொருளாதாரப் பணியே சமுதாயத்துக்குத் தேவையான மிக முக்கியமான குடும்பத்தின் பணியாக எப்போதும் இருந்து வந்தது. தொடர்ந்து இருக்கும். சமுதாயத்தின் உற்பத்தி சக்திகளே வரலாற்று நிகழ்ச்சிப் போக்கிற்கு அடித்தளமாக விளங்குகின்றன'.69** என்று கூறுவர்.

‘இன்றைக்கு மக்கள் தொகை என்பது பரவலான சமூக விஞ்ஞானங்கள் மற்றும் பல இயற்கை விஞ்ஞானங்களும் ஆராய்ச்சிப் பொருளாகிவிட்டன’70 என்று மேலை நாட்டு அறிஞர்கள் கூறுகின்றனர்.

நம் தமிழ் மக்களோ மக்கள் தொகை பெருக்கத்தை அதன் நிகழ்வைப் புனிதமாகப் பெரும்பேறாகக் கருதுகின்றார்கள். அகவாழ்க்கையின் ஓர் அங்கமாக மக்கட்பேறு கருதப்படுகிறது. **‘அகவாழ்க்கையானது மன உணர்வும், ஆன்ம உணர்வும், கடவுள் உணர்வென்னும் திருவருள் உணர்வும் என்னும் மூன்று உணர்வுகளைக் கருவியாகக் கொண்டு தன்னையும், தனக்கு மேற்பட்ட அறியாப் பொருட்களையும் ஆராய்ந்து, உணர்ந்து, தெளிந்து அனுபவித்தலும்’**71 என்கிறார் அடிகளார்.

இயல்பாகவே இளம் மக்களை வாழ்த்தும் பெரியோர்கள் பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க என வாழ்த்துவது நம் மரபாக இருந்து வருகிறது. அப்படி அவர்கள் அடைய வேண்டும் என சொன்ன பதினாறு பேறுகளாவன எது என்பதை,

**‘துதி வாணி வீரம் வசியம் சந்தானம் துணிவு தனம்**
**அதிதானியம் சௌபாக்கியம் போகம் அறிவு அழகு**
**புதிதாம் பெருமை அறம் குலம்நோய் இன்மை பூண்வயது**
**பதினாறு பேறும் தருவாய் மதுரை பராபரனே’72**

என்ற காளமேகப் புலவரின் பாடல்வழி அறியலாம்.

இந்தப் பதினாறு பேறுகளில் எல்லாரும் அதிகம் விரும்புவது மக்கட்பேறே. இதனைத் திருவள்ளுவரும்,

**‘பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த**
**மக்கள் பேறல்ல பிற’73**

எனக் கூறுகின்றார்.

இல்லறம், நல்லறமாக நடக்க வேண்டுமெனில் மக்கட்பேறு அவசியமான ஒன்றாகிறது. அதுவும் பழியில்லாத, பண்பான, நல்ல மக்களைப் பெற வேண்டு மென்பதே ஒவ்வொரு தாய், தந்தையரின் இலட்சியமாக இருக்கிறது. மேலும் மக்கள் பேறானது மனிதன் இந்த உலகில் புகழோடும், இன்பத்தோடும்

வாழ்வதற்கு, இறப்பிற்குப் பின் மறுபிறப்பினை அடையாமல் இருப்பதற்கும், மக்கட்பேறே முதன்மையானதாக இருக்கிறது என்பதை,

**'இம்மை உலகத்து இசையொடும் விளங்கி**
**மறுமை உலகமும் மறு இன்று எய்துப**
**செறுநரும் விழையும் செயிர் தீர் காட்சிச்**
**சிறுவர்ப் பயந்த செம்மலோர்'74**

என்ற பாடல் குறிப்பிடுகின்றது.

மக்கட்பேற்றை ஒரு பாதுகாப்பு அரணாகப் பெற்றோர் கருதுகிறார்கள். மக்கட் பேறில்லாதவர்கள் தாம் அனாதையாக்கப்பட்டதையும், பாதுகாப்பற்றோராக இருப்பதாகவும் உணர்ந்தனர்.

**'… பேணித்**
**தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன்போல் புதல்வர் பெறாஅ தீரும்'75**

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

**'மயக்குறு மக்களை இல்லோர்க்குப்**
**பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே'76**

என்ற பாடல் பலவற்றையும் படைத்துப் பலரோடு கலந்துண்ணும் உடைமை எனப்படும் பெருஞ்செல்வம் பெற்றவராயினும் என்ன? மெல்ல மெல்ல குறுகுறு நடந்து சென்று தம் சிறிய கையைநீட்டி உண்கலத்து நெய்யுடைய சோற்றிலே யிட்டும் அக்கையாலே பெற்றோரைக் கட்டிக் கொண்டும் வாயால் கவ்வியும், கையால் துழாவியும் தம் மேலெல்லாம் சிதறியும் அக்குறும்புகளால் உணவு வீணாகிறதே என்ற நினைவை மயக்கும் பெற்றோரை இன்பத்தால் மகிழ்ச்சி செய்யும் மக்கள் இல்லாதவர்க்கு வாழ்நாளெல்லாம் பயனற்ற நாட்களே என்று உரைக்கிறது.

**'யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை'77**

என மழலைச் செல்வத்தின் நிலையையும், மக்கட்பேறே குடி உயர காரணமாக இருப்பதை,

**‘கடவுட் கற்பொடு குடிக்கு விளக்கு ஆகிய**
**புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்**
**நன்ன ராட்டி’78**

என மக்கட்பேறின் சிறப்பினையும், குழந்தை பெற்ற பெண்களின் பெருமையினையும் அகநானூறு எடுத்துரைக்கின்றது.

சங்க இலக்கியங்களில் தலைவியின் தாய் நற்றாய் எனவும் தோழியின் தாய் செவிலி எனவும் அழைக்கப்பெறுதல் தொல்காப்பிய மரபாகும். இலக்கண மரபுபடி செவிலி, நற்றாய் என இரு சொற்கள் காணப்பட்டாலும் இவர்கள் அன்னை என்றே குறிக்கப்படுகிறார்கள்.

சங்ககாலத்திலிருந்து இன்றுவரை தமிழின தாய்மார்கள் நாமக்கல் கவிஞர் நெகிழ்வதுப் போல் **“தாயாகித் தரணியைத் தாங்கி தாரமாய் வந்து தளர்வைப் போக்கி இன்ப சொரூபமாய் திகழ்கிறார்கள்.”79**

## 1.2.7 கல்வி

**‘உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே’80**

என்பது ஆன்றோர் வாக்காகும்.

**‘கல்வியின் மூலச்சொல் கல் என்பது, கல்லுதல் என்பதிலிருந்து கல்வி என்ற சொல் தோன்றுவதாகக் கூறுவர். கல்லுதல் என்பதற்கு தோண்டுதல் என்று பொருள். கற்க வந்த மாணவனது உள்ளத்தில் ஆழப்புதைந்து கிடக்கும் திறன்களைத் தோண்டி எடுத்து வெளிக் கொணர்ந்து அவனைப் பயன்பாடுடைய மனிதனாக மாற்றுவதே கல்வி என்று மு. அண்ணாமலையும், ‘உடலின் இயல்புகளையும் மனித இனத்தின் அனுபவங்களையும் அல்லது சமுதாயத்தின் இயல்புகளையும், பாதுகாத்து ஒரு காலத்திலிருந்து இன்னொரு காலத்திற்கும், அதன் மூலம் ஒரு தலைமுறையிலிருந்து இன்னொரு தலைமுறைக்கும் எடுத்துச் செல்வதே கல்வியின் நோக்கமாகும்’81** என பெர்னாட்ஷாவும் கூறுகின்றனர்.

களர் நிலத்தில் உண்டான உப்பைச் சான்றோர் நல்ல நன்செய் நிலத்தில் விளைந்த நெல்லை விட மேன்மையாகக் கருதுவர். அதுபோல கீழ்குடியில்

பிறந்தவர்களானாலும் கற்றறிந்தவராயின் அவர்களை மேலான குடியினரும் உயர்ந்த இடத்தில் வைத்து மதிக்க வேண்டும் என்பதை,

**'களர்நில துப்பிறந்த உப்பினைச் சான்றோர்**
**விளைநிலத்தில் நெல்லன் விழுமிதாக் கொள்வன்**
**கடைநிலத்தோ ராயினும் கற்றறிந் தோரைத்**
**தலை நிலது வைக்கப்படும்'82**

என்ற பாடலால் கல்வியின் பெருமையை உணரலாம்.

**'எச்சம் என ஒருவன் மக்கட்குச் செய்வன**
**விச்சைமற் றல்ல பிற' 83**

எனத் தம்மக்களுக்குக் கல்வி என்ற செல்வத்தை மட்டுமே சேர்த்து வைக்க வேண்டும் என உணர்த்துகின்றது.

கல்வியின் பொற்காலமாகச் சங்ககாலம் இருந்திருக்கிறது. ஐந்திணைக் கேற்ப தம் வாழ்வின் முறைகளை அமைத்துக் கொண்ட காலமது. சாதியின் கொடுமைக் குறைந்து அனைவருக்கும் கல்வி கற்கும் வாய்ப்பு கிடைத்த காலமாக இருந்துள்ளது.

### 1.2.7.1 பெண் கல்வி

"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும் அறிவும் அருமையும் பெண்பா லான" என்று பெண்மையை உயர்த்திக் கூறுகிறார் தொல்காப்பியர். மேலும் அவர் வீடுபேறு அடைவதற்காகப் பெண்ணுக்குச் சமபங்கு உண்டு என்பதைக் "கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிறல் இறந்தன் பயனே" என்று எடுத்துரைக்கிறார்.

'அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு என்று பழமொழி வழங்கும் நாட்டில் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே,

பெருந்தடங்கண் பிறை நுதலார்க்கு எலாம்
பொருத்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யானவே

என்று கம்பன் பாடுகிறான், என்றால் அது சாதாரண புரட்சியல்ல. அதிலும் பெண்கள் அவர்களுடைய இயல்புக்குப் பொருந்திய கல்வியைக் கற்றனர் என்ற கருத்து. இந்த நவீன காலத்திலும் சரியாகப் புரிந்து கொள்ளப்படாத உயர்ந்த கல்விக் கோட்பாடாகும். கம்பனுடைய நாட்டில் இலட்சிய பெண்களே கல்வி கற்றிருந்தனர் எனில் ஆடவர்களைப் பற்றிக் கூற வேண்டாமோ. அங்கே 'வெண்மையில்லை, பல் கேள்வி மேவலாள்' 'கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் கல்வி முற்ற வல்லாரும் இல்லை, அவை வல்லர் அல்லாரும் இல்லை'. அங்கே கல்வி என்ற விதையிலிருந்து முளைத்த மரத்தில் கேள்விகள் என்ற கிளைகள் பிறந்து தவம் என்ற இலைகள் விரிந்து அன்பாகிய அரும்பு தோன்றி தருமம் மலர்ந்து இன்பம் என்ற கனி பழுத்தது.

**ஏகம் முதல் கல்வி முளைத்து**
**எழுந்து எண்ணில் கேள்வி**
**ஆகும் முதல் திண்பனை**
**போக்கி அருந்தவத்தின்**
**காமம் தழைத்து அன்பு**
**அரும்பி தருமம் மலர்ந்து**
**போகங்கனி ஒன்று பழுத்தது!84**

என்று இராமாயண காலத்தில் பெண் கல்விமுறை தழைத்தோங்கி இருந்ததை கம்பனைக் கொண்டு அப்துல் ரகுமான் விளக்குகிறார்.

**பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்**
**பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்**
**எட்டு மறிவினில் ஆணுக்கிங்கே பெண்**
**இளைப்பில்லை...'85**

என்ற பாரதியின் கூற்றுப் பழங்காலத்திலேயே கடைபிடித்து வந்ததைச் சங்ககால பெண் புலவர்களைக் கொண்டு அறியலாம்.

ஒத்த கல்வி என்ற குறிப்பு, அக்காலப் பெண்கல்வி என்ற சிறப்பை உணர்த்துகிறது. பழந்தமிழ்நாடு ஆண்புலவரோடு, பெண் புலவரையும் அணிந்திருந்தது. வெள்ளி வீதியார், ஔவையார், பெருங்கோப்பெண்டு, பாரிமகளிர், எயினிமார், காக்கைப் பாடினியார், நச்செல்லையார், நக்கண்ணையார், கழார்க்கீரன்

எயிற்றியார், முள்ளியூர் பூதியார். பொதும்பில் புல்லாங் கண்ணியார், முதலியோர் அந்த நாளில் தமிழ்வளர்த்த பெண்மணிகள்'.

சங்ககால பெண் புலவர்கள் அனைவரையும் செல்வக் குடிகளைச் சேர்ந்தோர் எனக் கூறுவதற்கில்லை. மிகச் சாதாரண குடிமக்களாகவே இருந்திருக்க வேண்டும்.

ஔவையார், ஒக்கூர் மாசாத்தியார், குயவர் குலத்திலே பிறந்த குயத்தியார், காக்கைப் பாடினியார், குறமகள் இளவெயினியார், தென்பாண்டி நாட்டின் கொற்கை மூதூரைச் சூழ்ந்த மாநோக்கம் என்னும் ஊரிலே பிறந்த நப்பசலையார் என்ற அவர்கள் பெயரே அதனை உணர்த்தும்.

குறிப்பாகப் பொன்முடியார் 312 பாடல்களையும், ஔவையார் 95 பாடல்களையும் பாடியிருப்பது பெண்களின் கல்வி, அதனால் ஏற்பட்ட அறிய துணிவு போன்றவற்றை எடுத்துக் காட்டுகின்றது.

> **'தன் தலைவன் இறந்த நிலையில் தீ வளர்த்துத் தானும் மடிய நினைத்த ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு பாடிய பாடல் தமிழக வரலாற்றில் உடன்கட்டை ஏறும் வழக்கத்திற்குச் சான்று தருவது. ஆதிமந்தியின் பாடல் சோகத்தின் சாயல் மிக்கது. வாரி வழங்கிய பாரி மறைய பாரி மகள் பாடிய பாடல் சோக குயில்களின் துன்ப ராகம்'86**

## 1.3. சங்க கால சமய நிலை

**'பைத்தியன் பிடித்தவன் உளறினாலும், குழந்தை பிதற்றினாலும் அவற்றுள் ஏதாவது சாரமிருந்தால் அதனைப் பல கற்களின் நடுவிலுள்ள பொன்னைப் பொறுக்கி எடுப்பது போல ஏற்றுக் கொள்ள வேண்டும்'87** என்கிறது விதுரநீதி, மதம், சமயம், கடவுள்கள் பற்றிய மூதாதையர்களின் கருந்தோட்டங்களையும் அப்படி தான் கடைப்பிடிக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம்.

சங்ககாலத்திற்கு முற்பட்ட காலத்தில் தமிழகத்தில் மதம் இருந்ததற்கான ஆதாரம் குறைவே. இருப்பினும் இந்து என்ற ஒரே மதமே இருந்திருக்கக் கூடும் என்பது சான்றோரின் கருத்து.

**'Religio'** (பக்தி) மற்றும் **'Religare'** (கட்டிப் பாடுதல்) என்ற லத்தீன் வார்த்தைகளிலிருந்து தான் **'Religion'** (மதம்) என்ற வார்த்தையைப் பெரும்பாலான கிறித்தவ இறைமை இயல்வாதிகள் எடுத்துக் கொள்கிறார்கள். **இறைமை இயல்வாதக் கண்ணோட்டத்தில் மதம் என்பது மனிதனையும் கடவுளையும் இணைக்கிற கண்ணி. கடவுளால் விதிக்கப்பட்டு, கடவுள் நம்பிக்கை உள்ளவனைக் கட்டுப்படுத்துகிற நடத்தைப் பற்றிய விதிகள். சூத்திரங்கள், வழிபாடுகள், சடங்குகள், கோட்பாடுகள், ஆகியவற்றின் கூட்டுத் தொகுதிதான் மதம்'88** என்கின்றனர்.

> **மதச் செயல்கள் என்பது கடவுளைத் தொழுவது மட்டுமல்ல. பக்தர்களின் குழுக்கள், அமைப்புகள், சங்கங்கள், திருச்சபைகள் ஆகியவை சமுதாயம். சமுதாயப் பிரச்சினைகள் முதலியவற்றைக் குறித்து ஒரு குறிப்பிட்ட அணுகல் முறையைக் கடைப்பிடிக்கின்றன. இவை சமுதாய வாழ்வு, சமுதாய சச்சரவுகள், வர்க்கப் போராட்டம் போன்றவற்றில் பங்கெடுத்துக் கொள்கின்றன. இந்த நடவடிக்கைகளில் உலகம் பற்றிய சமயக் கருத்தோட்டமும் புலனுணர்வும் தமது முத்தியைப் பதிக்கின்றன. இவ்வாறாகப் பல மட்டங்களைக் கொண்ட மிகவும் சிக்கலான ஒரு சமூகப் புலப்பாடுதான் மதம்'89**

**'மக்களின் அபினியே மதம் என்று மார்க்ஸ்90 கூறுகிறார்.**

சமயம் என்ற சொல்லுக்குப் பக்குவப்படுத்துதல் (சமைத்தல்) என்ற பொருளிலேயே அறியப்படுகிறது. **'சமயம் என்பதை அதன் விரிவான கருத்தில் தன்னைத்தானே அறிதல், அல்லது ஆன்ம ஞானம் என்ற பொருளிலேயே நான் உபயோகிக்கிறேன்'91** என்கிறார் காந்தியடிகள்.

சங்க இலக்கியங்களில் சமயம் என்ற சொல்லே இருப்பதாகத் தெரிய வில்லை. சங்க காலத்திற்குப் பின் வந்த இலக்கியங்களில் தான் சமயம் என்ற வார்த்தையே காணப்படுகிறது எனலாம். இருப்பினும் சங்ககால மக்களுக்குக் கடவுள் நம்பிக்கையிருந்ததை மறுக்கவோ அல்லது மறைக்கவோ முடியாது.

இவர்கள் சிவன், திருமால் போன்ற உருவ வழிபாடுகள் வழிபட்டாலும் சைவம், வைணவம் என்ற பாகுபாடு இருந்தது என்று கூறுவதற்கில்லை. சங்க

இலக்கியங்களில் சமயம் சார்ந்த கருத்துக்கள் இடம் பெற்றிருப்பினும் சமய சார்பற்ற இலக்கியங்களாகவே கருதப்படுகிறது.

அகநானூற்றில் பல தெய்வ வழிபாடுகளே அறியமுடிகிறது. இறைவழிபாடு என்பது இறைவனை இதயத்தால் நினைத்து கைகூப்பி தொழுதல், என்ற பொருளிலேயே பெரும்பாலும் கூறப்படுகிறது. கடவுள் வழிபாடு என்பது மனிதனின் அடிப்படை கடமைகளில் ஒன்றாகவே இதுவரை தமிழர்கள் பேணிக்காத்து வருகின்றனர்.

**'சங்க காலத்தில் இந்து சமண பௌத்த சமயங்களிடையே இணக்கமுள்ள உறவு இருந்தது'92** என்கின்றனர்.

'பயிர் தொழிற் செய்யும் வேளாளரும், வாணிபம் செய்யும் வணிகரும், ஏனைய தொழிலாளருமே சமண, பௌத்த மதத்தை மேற்கொண்டிருந்தனர் என்பர்.

பட்டினப் பாலையில் புகாரின் வணிகர் பற்றி கூறும் போது

**'விலைஞர் குரம்பை மாவீண்டவும்**
**கொலை கடிந்தும் களவு நீக்கியும்' 93**

என்கிறது. அதாவது உயிர்க்கொலை செய்யாமையினைக் குறிப்பிடுவதால் பௌத்த சமணர் செல்வாக்கு பெற்றிருந்ததை அறிய முடிகிறது.

### 1.3.1 இறை வழிபாடு

இந்த இறைவழிபாடானது நமக்கு மகிழ்ச்சியான தருணங்களை விட, துயரமான தருணங்களில் மிகுதியாக காணப்படுகின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது. அனைத்து மதங்களும் உலக இயக்கத்தின் முதன்மை பொருள் தெய்வம் என்பதை ஒத்துக் கொள்கின்றன. அத்தகைய தெய்வத்தை கடவுள், இறைவன், ஆண்டவன், எனப் பல பெயரிட்டும் பல வடிவங்களை உருவாக்கியும் வழிபடுவது நமது மரபாகவே இருக்கிறது. இருப்பினும் தெய்வம் என்பது **'ஊழ், எண் வகை மணத்திலொன்று, ஐவகை யாகத்திலொன்று, கடவுள், வருடம்'94** என்ற பொருள்படுவதுமாம் என்று தமிழ் மொழி அகராதி கூறுவது சிந்திக்கத்தக்கதே.

சங்க கால மக்கள் இயற்கையோடு இணைந்து வாழ்ந்தவர்கள். இவர்கள் முதன்மை இடத்தை தெய்வத்திற்கு வழங்கினர். முதற்பொருள்களில் ஒன்றான

நிலத்தைக் காட்டும் பொழுது கருப்பொருளில் ஒன்றான தெய்வத்தையும் சேர்த்தே காட்டுகிறார் தொல்காப்பியர்.

'தொல்லூழிக் காலத்தே எல்லா உயிர்களும் தத்தம் நிலைத் தடுமாறி மீண்டும் இறைவனிடம் சென்று தொகையாக ஒடுங்கும். அந்தப் பருவத்திலே பல்வகை உயிர்களும் படைத்தவனிடத்தே சென்று மீண்டும் ஒடுங்க அவன் அவற்றை அழித்தும் விளங்கும். அதன் பின் எங்கும் பேரிருளே சூழும்' என நம்பினர், என்பதை

**'தொல் ஊழி தடுமாறி, தொகல் வேண்டும் பருவத்தால்**

**பல்வயின் உயிர் எல்லாம் படைத்தான்கண் பெயர்ப்பான் போல்'95**

என்று கலித்தொகை சுட்டுகிறது. இந்த நம்பிக்கை இன்று வரை மக்களிடம் கூடவே வருகிறது.

'எங்கே ஆசைகள் உலாவுகின்றனவோ அங்கே தெய்வங்கள் உலாவு கின்றன. எங்கே மனது தெளிவாக இருக்கின்றதோ அங்கே தெய்வத்திற்கு கோயில் எழுந்து விடுகின்றது.'

'நம்பி நட்டகல் நம்பாமற் கட்டப்பட்ட மாளிகையை விட உன்னதமானது'

'நம்பிக்கையில் உச்சியிலே தான் தெய்வதரிசனம் பூர்த்தியாகின்றது'.

**'உணர்ச்சி பூர்வமான நம்பிக்கையில் தான் அறிவு பிரகாசிக்கிறது. கண்கள் ஒளிமயமாகின்றன. மூடன் ஞானியாகின்றான். அறிவாளிக்கெட்டாத உண்மைகளெல்லாம் இவனுக்கு எட்டுகிறது'96** என கண்ணதாசன் கூறுகிறார்.

### 1.3.2 இரு பெருந்தெய்வ வழிபாடு

சிவனும், திருமாலும் சங்ககால மக்களின் இரு பெருந்தெய்வங்களாக வணங்கப்பட்டதை

வெருவரு கடுந்திறல் இரும்பெருந் தெய்வத்து
உருவுடன் இயைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடலனி கொளாஅ
வந்த மாலை

என்ற சங்கப்பாடலால் அறியலாம்.

இவற்றுடன் முருகன், கொற்றவையும், அவற்றிற்குரிய வழிபாட்டு தலங்கள் இருந்தமையும் சங்கநூல்கள் வெளிப்படுத்துகின்றன. சிலப்பதிகாரம் எழுதப்பட்ட காலத்தில் சிவன், முருகன் இவர்களுடன் பலதேவன், இந்திரன், சாத்தன் முதலிய கடவுள்களும் காணப்படுகின்றன.

முருகன் கார்த்திகேயனுடன் இணைந்து ஆறுமுகமும் இணைந்து ஆரியர் கடவுளாகியதையும், தமிழர்களின் போர் தெய்வமாகிய கொற்றவை, துர்க்கையம்மனுடன் கலந்ததையும், விஷ்ணுவும், இலக்குமியும், இந்திரன், பிரம்மனும் ஆகிய தெய்வங்களும் சுட்டப் பெறுகின்றன.

### 1.3.2.1 சைவமும் சிவனும்

எல்லா மதங்களும் ஒரு குறிப்பிட்ட காலத்தில், குறிப்பிட்ட ஒருவரால் தோற்றுவித்ததாகத் தெரிகிறது. ஆனால் சைவ சமயம் யாரால் எந்தக் காலத்தில் தோற்றுவிக்கப்பட்டது என வரையறுக்க முடியாத பெருமையினைக் கொண்டது. யாரால் தோற்றுவிக்கப்படுகிறதோ அந்த மதம் அவர் பெயராலே விளங்குவதைக் காணலாம். ஆனால் சைவ சமயம் இறைவன் பெயரைக் கொண்டு விளங்குகின்றது.

சங்கத் தமிழர் சிவனை முதன் முழுக் கடவுளாக வழிபட்டு இருக்கின்றனர். இவர் தமிழ்நாட்டுக்குரிய தெய்வமாகக் கருதியதைத் 'தென்னாடுடைய சிவனே போற்றி. எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்பதன் மூலம் அறியலாம். சிவனை 'மழுவால் நெடியோன்', 'கணிச்சியோன்' என்றும் பிற்காலத்தில் அழைத்தனர்.

**'ஞாலம் நாறும் நலம்கெழு நல்இசை**
**நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்**
**ஆல முற்றம் கவின்பெறத் தைஇய்97**

என்ற அகநானூறு முத்தொழில் ஆற்றிய சிவன் என்று குறிப்பிடுகின்றது.

**''நீரு நிலனுந் தீயும் வளியும்**
**மாக விசும்போ டைந்துட னியற்றிய**
**மழுவா ணெடியோன்'98**

**‘பேரிசை நவிர மேஎ யுறையும்**

**காரி உண்டிக் கடவுள்’99**

**‘நுதல் விழி நாட்டத் திறையோன் முதலா**

**பீதிவால் சதுக்கப் பூதமீறாக’100**

என்ற மணிமேகலையும் இக்கருத்தையே குறிப்பிடுகிறது.

**‘அயந்திகழ் நறுகொன்றை அலங்கன் அம் தெரியலான்’**

**‘பிறங்கு நீர் சடைக்கரந்தான்’**

**‘உருவ ஏற்று ஊர்தியான்’**

**‘புது திங்கள் கண்ணியான்’101**

என்று சிவனைப் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றிருக்கிறது.

**‘இமைய வில் வாங்கிய ஈரஞ்சடை அந்தணன்**

**உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக’102**

என்று கையிலே சிவ தனுசும், சடையிலே கங்கையும், ஒரு பாதியிலே உமையம்மையும் கொண்டவனாக இமயத்தின் உச்சியிலே சிவபெருமான் வீற்றிருந்ததாகக் கலித்தொகை குறிப்பிடுகின்றது.

### 1.3.2.2 வைணவமும் திருமாலும்

**‘வைணவ சமயம் விசிஷ்டாத்வைதம் எனப்படுவது. இது விசிஷ்டமாகிய அத்வைதம் என விரியும். அத்வைதம் என்றால் இரண்டல்ல ஒன்று. விசிஷ்டம் என்றால் விசேஷனத்தோடு கூடியது. உயிர் உடலுக்குள் கலந்து நின்று அதனை இயக்குதல் போன்று இறைவன் உடல் உயிர் என்னும் இரு பொருள்களுக்கு உள்ளும் மறைந்து நின்று அவற்றை ஏவி நடத்துகிறான்’103** எனவும் ‘வைணவ மதம் கடவுள் வழிபாடு தோன்றிய காலம் முதல் உள்ளது. தமிழ் பெரு முனிவர் அகத்தியரின் மாணாக்கரான தொல்காப்பியனார் திருமாலை ‘மேயோன் மேய காடுறை உலகமும்’ எனக் குறிப்பிடுகிறார். இதனால் **‘மாயோன் ஆகிய திருமால் முல்லை என்ற காட்டுப் பிரதேசத்திற்குரிய தெய்வம் என்பதும் அத்தெய்வ வழிபாடு தொல்காப்பியனாருக்கு முற்பட்ட காலமிருந்தே நடந்து வருகிறதென்பதும் விளங்கும்’104** என்கிறார் ஜெ.தேவி.

வைணவத்தின் சிறப்புப் பிரபத்தி மார்க்கம் என்னும் சரணாகதி தத்துவம் ஆகும். வைணவமும் அதனைப் படைத்தளித்த ஆழ்வார்களும் கடமையைச் செய் பலனை எதிர்பார்க்காதே என்ற உயரிய நோக்கத்தை முன் வைக்கின்றன.

பெருமாள் என்ற சொல் பெருமையை உடையவர் என்னும் பொருளைத் தரும். இதில் பெருமை என்னும் பகுதி ஈற்று ஐகாரம் மாத்திரம் கெட்டு பெரும என நின்றது. ஆள் என்ற பெண்பால் விகுதியே சிறுபான்மை ஆண்பாலுக்கு வந்தது என்றாலும் ஒன்று அன்றிப் பெருமையை ஆளுபவன் எனக் கொண்டால் ஆள் என்ற வினைப்பகுதி கருத்தாகப் பொருள் விகுதி கெட்டதனால் வேண்டும். திருமாலே பரம்பொருள் என்பதை விளக்கும் சொல்லே பெருமாள் என்பதாகும். பரம்பொருளை வடமொழியில் பிரம்மம் என்பர்.

**‘பிரு என்ற அடிச்சொல்லிற்குப் பெரிய என்பது பொருளாகும். சிவபரம் பொருளைச் சிவபெருமான் என்று சைவர்கள் அழைப்பதைப் போல திருமாலை பெருமாள் என்கின்றனர்’105** என்கிறார் க. சண்முக சுந்தரம்.

பெருமாளை வண்ணவன், நெடியோன் எனப் பல பெயர்களில் அழைத்தனர்.

**‘மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்106**

என்ற வரி திருமாலின் பரசுராம அவதாரத்தைக் குறிப்பிடுகின்றது.

**‘வண் புனல் தொழுநை வார் மணல் அகன் துறை**
**அண்டர் மகளிர் தண் தழை உடீஇயர்**
**மரம் செல மிதித்த மா அல் போல் 107**

என்ற பாடல் வரிகள் யமுனையில் நீராடிய மகளிர் தழை ஆடையை உடுத்திக் கொள்ளுமாறு திருமாலான கண்ணனைப் போல என்ற உதாரண வார்த்தைகள் மூலம் மால் வழிபாட்டு முறை நிகழ்ந்ததை உணர்த்துகிறது.

சங்க காலத்தில் திராவிடக் கடவுள்கள் வழிபாடு சிறப்புற்றிருந்த போதிலும், ஆரியர் வருகைக்குப் பிறகு வைதீக வழிபாடு முறைகளும் சிறக்கத் தொடங்கின. கோயில்களில் வேதங்கள் ஓதப்பட்டன. வேத ஓசையானது,

**‘தாதுவின் தும்பி போதைச் சுற்றி செய்யும் ரீங்காரத்தை**
**ஒத்திருக்கும்’108**

என்றும் இவர்கள் வேதங்கள் ஓதினர்.

**‘மந்திர விதியின் மரபுளி வழாஅ**

**அந்தணர் வேள்வியோர்க் கும்மே’**109

**‘செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்**

**களிறுதரு விறகின் கேட்கும்’**110

எனத் தீ வளர்த்து வேள்வி செய்த முனிவரைக் குறிப்பிடுகிறது.

உலகம் முழுவதையுமே தன் மூன்றடிக்குள்ளே அடக்கிய முதல்வன் திருமால் என்று கலித்தொகை குறிப்பிடுகிறது.

**‘ஞாலம் மூன்று அழத் தாய முதல்வதற்கு’**111

திருமாலை, **‘ஒரு குழை ஒருவனை’ ‘அருமறைப் பொருளே’ ‘இலங்கு பூண்மா அல்’ ‘ஆதி முதல்வர் மணிதிகழ் உருவின் மா அயோயே’**112 என்ற பரிபாடலும் குறிப்பிடுகிறது.

### 1.3.3 முருகன் வழிபாடு

சங்க காலத்தில் பல தெய்வ வணக்கம் இருந்த போதிலும் முருகனுக்கே முதலிடம் அளித்ததை அறிய முடிகிறது. குறிப்பாகக் குறிஞ்சி நிலக் கடவுளாகக் கருதப்பட்டார். பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை கடவுள் வாழ்த்து போல முதலில் அமைந்திருக்கிறது. இந்நூலில் முருகனைப் பற்றிய அனைத்துச் செய்திகளும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

**‘கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்**

**குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்**

**தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்**

**கொடியன் நெடியன் தொடியணி தோளன்’**113

என்று முருகனைக் கண் முன்னே கொண்டு வருகிறார் நக்கீரர். மேலும் இவர் முருகனின் இயல்புகளாக,

**‘ஆல்கெழு கடவுள் புதல்வ மால்வரை**

**மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே**

**வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ**

**இழை அணி சிறப்பிற் பழையோள் குழவி**

**வானோர் வணங்குவில் தானைத் தலைவ**

**மாலை மார்ப நூலறி புலவ' 114**

எனச் சுட்டிக் காட்டுகிறார்.

தமிழகத்தில் சேயோன் என அழைக்கப்பட்டான். வடவற் முருகனுக்குக் கார்த்திகேயன், சுப்ரமணியன் என்ற பெயரால் அழைத்ததை அறிய முடிகிறது. **'தென்னாட்டவர் தம் பழைய கடவுளான முருகனை வடநாட்டு சுப்ரமணியனோடு ஒன்றுபடுத்தி அவனை இந்திரனுக்கும் வருணனுக்கும் ஒப்பாகக் கருதலாயினர்'115**

**'வேலும், சேவலும் முருகனுக்குரியவை. இவை இரண்டும் வரலாற்றுக்கு முற்பட்ட ஆதிச்சநல்லூர் புதைபொருளுக்கிடையே கிடைத்திருக்கும் சேவல்கள் பித்தளையால் செய்யப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. இதனால் முருக வழிபாடு மிகப் பழைய காலத்திலிருந்தே தமிழரிடம் இருந்து வருவது தெளிவாகும் என சாஸ்திரி கூறுகிறார்'116**

இதிகாச காலத்தில் முருகன் உருத்திரன் அல்லது அக்னியின் மகனாகக் குறிப்பிடப்படுகிறான். காலப் போக்கில் கொற்றவை உமையாக்கப்பட்டாள். அதனால் அவன் மகனான முருகன் உமையின் மகனாகவும், சிவனின் மகனாகவும் கருதப்பட்டான் என்பர்.

**'... ஒருமுகம்**

**ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக்**

**காதலின் உவந்து வரங்கொடுத் தன்றே'117**

**கடவுள் ஆயினும் ஆக**

**மடவை மன்ற வாழிய முருகே'118**

என்று முருகனைத் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது.

முருகனை வீரத்தின் வித்தாகவும் தம்மைக் காக்கும் காவலனாகவும் கருதியதை,

**'சூர் மருங்கு அறுத்த சுடர் இலை நெடுவேல்**

**சினம் மிகு முருகன் தண் பரங்குன்றத்து'119**

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

### 1.3.4 கொற்றவை வழிபாடு

பாலைக் கடவுளாகக் கொற்றவை வணங்கப்பட்ட போதிலும் போர்க்குரிய கடவுளாகவும் கொற்றவையை வழிபட்டனர்.

**‘தோற்றோர்க்குக் கொற்றம் வேண்டியும்**
**வென்றோர்க்கும் மேல் செல்லுங்கால்**
**கொற்றம் வேண்டியும் வழிபடுவராதலின்**
**வருகின்ற வஞ்சித் திணைக்கும் கொற்றவை**
**நிலை காரணமாயிற்று’** 120

எனத் தொல்காப்பியம் இதனைக் கூறும்.

போர்க்குச் செல்லும் முன் கொற்றவையை முதலில் வழிபடுவர். அது பூந்தொடை விழா எனப்பட்டதை

**‘வார்கழற் பொலிந்த வண்கண் மழவர்**
**பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன’**121

என்பதனால் அறியலாம்.

போரில் வெற்றிவாகை சூட கொற்றவை வழிபாட்டைப் பெரிதும் நிகழ்த்தினர்.

உயர்ந்த புகழ் உடையவள் கானமற் செல்வியாகிய கொற்றவை. அவள் அருள் செய்வதாலேயே குதிரை படைகள் வெற்றியினைப் பெற்று புகழடைந்தன என்பதை கான் அமர் செல்வி அருளலின், வெண்கால் பல்படைப் புரவி எய்திய தொல் இசை என அகநானூறு கூறும்.

**‘வெற்று வெல்போர்க் கொற்றவை சிறுவ’** 122

என்று கொற்றவையை முருகனின் தாயாக உரைக்கிறது திருமுருகாற்றுப்படை.

### 1.3.5. இந்திரன் வழிபாடு

மருதத்தின் கடவுள் இந்திரன்.

**'நூற்றப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்**
**வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து**
**ஈரிரண் டேந்திய மருப்பின் எழினடைத்**
**தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை**
**எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்**123

என்ற பாடல் ஆயிரம் கண்களையும் நூறு வேள்விகளையும் நடத்தி வெற்றிக் கொண்டவனும், நன்றாக ஏந்தியிருக்கும் கொம்புகளையும் நீண்ட தும்பிக்கை யினையும், உடைய புகழ்பெற்ற யானையின் பிடரியில் ஏறியவனும், திருமகளின் பார்வையை உடைய இந்திரன் என்று குறிப்பிடுகின்றது. இவை இந்திரனை வணங்கியதைச் சுட்டுகிறது.

### 1.3.6 வருணன் மற்றும் கடல் தெய்வ வழிபாடு

நெய்தல் நிலத்திற்கு வருணனே கடவுள். கடல் தெய்வமாகவும் கருதப்பட்டான்.

**'சினைக் சுறவின் கோடுநட்டு**
**மனைச்சேர்த்திய வல்லணங்கினான்**124

என்ற வரியானது பரதவர் அமாவாசை நாட்களிலும், பௌர்ணமி நாட்களிலும் கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லாமல் பெரிய சுறாமீனின் கொம்பினை மணற் பரப்பில் ஊன்றி அதில் வலிமைப் பொருந்திய தெய்வத்தை (இந்திரன் நெய்தல் கடவுள்) நினைத்து வழிபட்டதைக் குறிப்பிடுகின்றது.

நெய்தல் நிலம் மக்களுக்கு வாழ்வளிப்பது கடலும், அதிலுள்ள பொருள்களுமே ஆகும். எனவே கடலுக்கு நன்றி செலுத்தும் விதமாகக் கடல் தெய்வ வழிபாட்டு முறையை மேற்கொண்டனர்.

பரதவ பெண்கள் அனைவரும் கடற்கரையில் ஒன்று கூடி கடல் தெய்வத்தை வழிபட்டனர் என்பதை

**‘பழையர் மகளிர் பனித்துறைப் பரவ**

**பகலோன் மறைந்த அந்தி ஆர் இடை**

**உருகெழு பெருங்கடல் உலவக் கிளர்ந்தாங்கு’125**

என்பதனால் அறியலாம்.

**‘கடல்கெழு செல்வி கரைநின் றாங்கு’126**

எனக் கடலில் கடல்கன்னி இருப்பதாக மக்கள் நம்பிக்கை கொண்டிருந்ததையும், அதை வழிபட்டதையும் மறுப்பதற்கில்லை.

## 1.3.7 இலக்குமி வழிபாடு

இலக்குமியைச் செல்வத்தின் தெய்வம் என்பர். இதனைத் திருவை என்றும், மா என்றும், திரு என்றும் அழைப்பர். இவற்றின் குறிப்பைக் கொண்டு சங்க காலத்தில் இலக்குமி வழிபாடு இருந்ததை அறியலாம். முல்லைப் பாட்டில்

‘மார்பிலே திருவைத் தாங்கும் மாயோன்’ எனக் கூறுவதிலிருந்தும் பட்டினப்பாலையில்

**‘திருந்துஞ்சுந் திண்காப்பிற்’127**

**‘திருநிலைஇய பெருமன்னெயில்’128**

என்றும்

**‘திருவார் மார்ப’129**

என்ற மலைபடுகடாம் கொண்டு அறியலாம்.

## 1.3.8 தீபவழிபாடும் கார்த்திகை திருவிழாவும்

மாலை நேரத்தில் வளையணிந்த மகளிர் வீடுகளில் விளக்கேற்றி வழிபடும் வழக்கம் இருந்ததை,

**‘அகன் சுடர் கல் சேர்பு மறைய மனைவயின்**

**ஒண்தொடி மகளிர் வெண்திரிக் கொளாஅலின்’130**

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

முருகனை வளர்த்த ஆறு பெண்களைக் கார்த்திகை பெண்கள் என்பதனாலும் அவர்களுக்குத் தீபம் ஏற்றி ஆண்டுக்கொரு திருவிழா நடைபெறும் வழக்கம் இருந்ததைப் புராண நூல்கள் கூறுகின்றன.

**'கலி கொள் ஆயம் மலிபு தொகுபு எடுத்த**

**அம் சுடர் நெடுங் கொடி பொற்பத் தோன்றி131**

என்று கார்த்திகை விழாவினைப் பெண்கள் விளக்கேற்றி வழிபட்டதை எடுத்துரைக்கிறது.

இத்தகைய கார்த்திகை வழிபாடானது சங்க காலத்தில் மட்டுமல்லாது இன்று வரை தெடர்ந்து வருவது குறிப்பிடத் தக்கது.

### 1.3.9 பிறை வழிபாடு

பண்டைய காலத்தில் மணமாகாத பெண்கள் தமக்கு விரைவில் திருமணம் நடக்க வேண்டி பிறை தொழுதனர். இதனை,

**'ஒள் இழை மகளிர் உயிர்பிறை தொழூஉம்**

**புல்லென் மாலை, யாம் இவண் ஒழிய132**

என்ற பாடல் வரி கொண்டு அறிய முடிகிறது.

### 1.3.10 மலையைத் தெய்வமாக வழிபடுதல்

**'பாப்புக் கடுப்பு அன்ன தோப்பி வான் கோட்டுக்**

**கடவுள் ஓங்குவரைக்கு ஓக்கி, குறவர் 133**

என்ற பாடல் அடியானது சங்கத் தமிழர் கள்ளினை மலைக்குப் படைத்து வழிபட்ட பிறகு தாம் உண்டதை விளக்குகிறது. கடவுள் உறைந்துயிருக்கும் இடமாக இன்றளவும் மலை கருதப்படுகிறது.

### 1.3.11. மரத்தினைத் தெய்வமாக வழிபடுதல்

பண்டைய காலம் தொட்டும் மக்கள் மரத்தினைக் கடவுளாக நினைத்து வழிபடும் முறை தொடர்ந்து வந்து கொண்டு தான் இருக்கிறது.

**'கடவுள் மரத்த முள்மிடை குடம்பை134**

என்ற வரி இதனைக் கூறும்

**‘தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்**

**கொழுப்பு ஆ எறிந்து குருதி தூஉய்135**

தெய்வம் குடிகொண்டிருக்கும் பருத்த அடியுடைய வேப்ப மரத்திற்குக் கொழுத்த ஒரு பசுவினைப் பலியிட்டு அதன் குருதியைத் தூவி தெய்வத்தை வழிபட்டதை எடுத்துரைக்கிறது.

**‘நெடுவீழ் இட்ட கடவுள் ஆலம்து136**

என்ற வரியானது நீண்ட விழுதுடைய ஆலமரத்தில் கடவுள் உறைந்திருப்பதாக குறிப்பிடுகிறது. இன்றும் இத்தகைய வழிபாடு நடைபெறுவதை தமிழக கிராம கோயில்களில் காணலாம்.

குறிப்பாகத் திருச்சியில் சமயபுரம் மாரியம்மன் திருக்கோயில் உட்புறம் உள்ள மரத்திற்கும், வயலூர் முருகன் கோயிலில் உட்புறம் மற்றும் வெளிப்புறம் உள்ள மரத்திற்கும் தனியாக மேற்கூரையில் இடம் விட்டு கட்டி பழைய மரத்தைப் பாதுகாத்து வழிபடுவதை இன்றும் காணலாம். அனைத்துக் கோயில்களுக்கும் தல விருட்சம் என்று ஒன்று உண்டு என்பதும் தமிழர்கள் மர வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது.

### 1.3.12. நடுகல் வழிபாடு

**‘காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**

**சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்று**

**இருமூன்று வகையிற் கல்லொடு புனர் 137**

எனத் தொல்காப்பியம் நடுகல்லைச் சுட்டுகிறது.

வீரத்தின் விளைநிலம் தமிழகம் சங்க கால மக்கள் மார்பில் விழுப்புண் பட்டு மாய்வதையே விரும்பினர். பிறக்கும் குழந்தை இறக்க நேரிட்டால் கூட ஆண் மகவாயின் அதன் மார்பைக் கீறி அதன் பின் புதைக்கும் மரபினைக் கொண்டவர்கள். வீரத்தைப் பெரு வரமாகக் கருதியவர்கள்.

போரில் வீரமரணம் தழுவியவர் நினைவாகக் கல்நட்டு அவன் பெயரையும், புகழையும் அக்கல்லில் பொறித்து வணங்குவது வழக்கமாக இருந்திருக்கிறது. தற்கால சூழலில் கூட இறந்தவர்களுக்குக் கருமாதி செய்ய பத்திரிக்கை அடிக்கும் போது ‘முதல் நாள் இரவு கல்நட்டு, அடுத்த நாள் காலை கருமாதி

நடைபெறும், என்று குறிப்பிடுவதிலிருந்து நம் மூதாதையரின் இத்தகைய பழக்கம் பட்டும் படாமலும் இன்று வரை தொடர்வதைப் புரிந்து கொள்ளலாம்.

போரில் வீரமரணம் அடைந்தவனின் நினைவாக வீரக்கல்லை நட்டு அதைச் சுற்றிலும் வண்ணப்பந்து அமைக்கப்பட்ட செயலை,

**'பெயரும் பீடும் எழுதி, அதர்தொறும்**
**பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்**

**'வில் ஏறர் வாழ்க்கை விழத் தொடைமறவர்**
**வுல் ஆண் பதுக்கைக் கடவுட் பெண்மார்**
**நடுகல் பீலி சூட்டித் துடிப்படுத்து**
**தோப்பி கள்ளொடு துருஉப் பலிகொடுக்கும் 138**

என்று நடுகல் பற்றிய செய்தியையும் அதை வழிபட்டு வந்ததையும் எடுத்துரைக்கிறது.

### 1.3.13 முன்னோர் மற்றும் குலதெய்வ வழிபாடு

நடுக்கல்லின் வழிபாட்டுச் சாரமே முன்னோர் வழிபாடாகவும், குலதெய்வ வழிபாடாகவும் ஆயிற்று. உதயஞ்சேரலாதன் தம் முன்னோர்களுக்குத் தென்புலக் கடன் ஆற்றியதையும், அவர்களுக்குப் பலியாக அவன் பெருஞ்சோறு அளித்ததையும்

**'துறக்கம் எய்திய தொய்யா நல்இசை**
**முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்**
**பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை, இரும்பல்**
**கூளிச் சுற்றம் குழீஇயிருந் தாங்கு' 139**

என்ற மாமூலனார் பாடல்வழி அறியலாம்.

பல தெய்வ வழிபாட்டு முறை தமிழகத்தில் இருப்பினும் இங்குள்ள ஒவ்வொரு குடும்பமும், தனக்கென்று ஒரு தெய்வத்தைக் குலதெய்வமாக வரையறை செய்து கொண்டு அதை வழிபடுவது சங்ககாலம் தொட்டே வழக்கத்தில் இருந்து வருகிறது.

**‘வல்லே வருக, வரைந்த நாள் என**

**நல் இறை மெய்விரல் கூப்பி**

**இல் உறை கடவுட்கு ஆக்குதும், பலியே’140**

என்ற இந்த அகப்பாடலானது தமக்குத் திருமணம் நிச்சயிக்கக் கூடிய அந்த நல்ல நாள் விரைந்து வரவேண்டும் எனத் தன் குலத் தெய்வத்தினைத் தலைவியும், தோழியும் வேண்டுவதைக் குறிப்பிடுகிறது.

### 1.3.14 நாக வழிபாடு

நாகத்தினைத் தெய்வமாக வழிபட்ட நாகர்கள் வாழ்ந்த நாடு தமிழ்நாடு. அவர்கள் நினைவாக நாகர்கோவில், நாகப்பட்டினம் போன்றவை இன்றளவும் இருக்கிற ஊர்கள். இவர்களிடம் இருந்த இவ்வழிபாட்டு முறை தமிழர்களில் வேர்பரப்பி நின்றது.

மலைபடுகடாமில் இச்செய்தியைப் பரவலாகக் காணலாம்.

**‘கரந்துபாம் பொடுங்கும் பயம்புமா ருளவே**

**குறிக்கொண்டு மரங் கொட்டி நோக்கிச்**

**செறிதொடி விறலியர் கைதொழூஉம் பழிச்ச**

**வறிதுநெறி ஒரீஇ வலஞ்செயாக் கழிமின்’141**

நீங்கள் போகும் வழியில் பாம்புகள் பதுங்கிக் கிடக்கும் பள்ளங்கள் உண்டு. அவற்றைக் கவனித்து மரத்தில் ஏறிப் பாருங்கள். விறலியர் அந்தப் பாம்பினைக் கைகூப்பிக் கொண்டு வெறுவழியிலே நடந்து வலப்பக்கத்து வழியிலே போங்கள் எனக் கூறுவதிலிருந்து நாகவழிபாட்டு முறை இருந்ததை அறியலாம்.

### 1.3.15 பாவை நோன்பு

தைத்திங்களில் கன்னியர் நீர்த்துறையிலே பாவையைப் புனைந்து வைத்து நீர் தெய்வத்தை வழிபடும் மரபுடையவர். இதுவே பின்னாளில் பாவை நோன்பாயிற்று எனலாம்.

**‘தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்**

**பொலங்காசு நிரைத்த கோடுஏந்து அல்குல்**

**நலம்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வர**

**பாடு ஊர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து**

**வயிர் இடைப் பட்ட தெள்விளி இயம்ப**

**வண்டற் பாவை உண்துறைத் தரீஇ**

**திருநுதல் மகளிர் குரவை அயரும்142**

என்று பாடல்வழி அறியலாம்.

### 1.4 கலைகளும் நுட்பத் திறனும்

சங்க இலக்கியங்கள் இறவா இலக்கியங்களாக வாழ்ந்து கொண்டிருக்கிறது. இதன் வாயிலாகப் பழந்தமிழர் கவின் கலைகளிலும், நுண் கலைகளிலும் சிறந்து இருந்ததை அறிய முடிகிறது.

குறிப்பாகச் சித்திரக்கலை, சிற்பக்கலை, கட்டிடக் கலை, இசைக்கலை, ஆடல்கலை, விளையாட்டுக் கலை, வானிலை, ஆகியவற்றில் தலைச்சிறந்து விளங்கின.

### 1.4.1. கட்டிடக் கலை

சிற்பம், ஓவியம், மற்றும் மர வேலைப்பாடுகள் அனைத்திற்கும் அடித் தளமானதும், கற்பனை, தொழில்நுட்பம், அழகு என ஒருசேரப்பட்டதுமே கட்டிட கலையாகும்.

**'கட்டிட கலை எல்லாக் கலைகளிலும் அது ஒன்று தான் மெதுவாக வேலை செய்யும். ஆனால் மிக நிச்சயமாக ஆத்மாவுடன் சேரும் என்கிறார். பிரெஞ்சு எழுத்தாளன் ஏனஸ்ட் டிம்ஜெட், பொதுவாகக் கட்டிட கலை உறைந்து போன இசை என்கிறார் ஜெர்மன் தத்துவஞானி பிரடிரிகா வென்ஜ்லீவிங்143**

மலைக் குகைகளில் வாழ்ந்த மனிதன் மரக்கிளைகளில் தன் உறைவிடத்தை அமைத்துக் கொண்ட போது அவன் கட்டிடக் கலையில் தேர்ச்சிப் பெற ஆரம்பித்துவிட்டான்.

**'சுடும ணோங்கிய நெடுநகர் வரைப்பின்144**

இந்தப் பாடலின் வரியானது சுட்ட செங்கற்களை வைத்துக் கட்டடம் கட்டியதை உணர்த்துகிறது. மேலும் விண்ணைத் தொடும் அழகிய கோபுரங்கள், அடுக்குமாடி குடியிருப்புகள் இருந்ததை

**‘வான மூன்றிய மதலை போல**

**ஏணி சாத்திய ஏற்றருஞ் சென்னி**

**விண்பொர நிவந்த வேயா மாடத்து’145**

என்ற வரிகள் எடுத்துரைக்கின்றது.

**‘இடஞ்சிறந் துயரிய எழுநிலை மாடத்து’146**

என்று ஏழு அடுக்குகளையுடைய மாளிகைகள் இருந்ததை முல்லைப்பாட்டுச் சுட்டுகிறது.

பழந்தமிழர்கள் மரங்களினாலும், செங்கற்களினாலும் கோயில்களையும், மதில்களையும், மண்டபங்களையும் கட்டினர் என்பதை,

**‘இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென**

**மணிப்புறாத் துறந்த மரம்சோர் மாடத்து**

**எழுது அணி கடவுள் போகலின், புல்லென்று’147**

என்ற அகநானூறு பாடல் கூறுகிறது. மேலும் செங்கற்களால் கட்டப்பட்ட கோயிலை அவ்வப்போது பராமரிக்காமல் போனால் பழுதாகி விடும் என சுட்டிக்காட்டுகிறது.

### 1.4.2 ஓவியக் கலை

புகைப்படம் அறியாத காலகட்டம் அது. ஆனால் பார்த்த ஒன்றை அப்படியே படம்பிடித்தது போல் காட்டுவதற்குத் தன் முழு திறமையையும் பயன்படுத்தி ஓவியம் வரைந்து நேரில் பார்ப்பது போன்ற ஒரு உணர்வினை, தூரிகையில் கொண்டு வந்து நிறுத்தினர் ஓவியர்கள். தாம் கண்டதைக் கரித்துண்டுகளாலும். கற்களை அழுத்தி அதன் கோடுகளாலும், வேலின் கூரிய முனைகொண்டும் ஆதிகால மனிதன் தன் ஒவியத் திறமையைக் குகைகளிலும் கற்களிலும் தான் காணும் இடமெங்கும் காட்டினர்.

தொல்காப்பியத்தில் கூட ஓவியக்கலை இடம்பெற்றிருப்பது இக்கலையின் சிறப்பாகும். **‘தலைவன் தலைவி மீது கொண்ட காதலை வெளிப்படும் நிகழ்வான மடலேறுதலின் போது ஒரு துணியில் உருவத்தினை வரைந்து மடலேறுதல் நிலையினைக் குறித்துள்ள முறை ஓவியக் கலையின் வெளிப்பாடாகும்’148**

**‘ஓவுக்கண் டன்ன இருபெரு நியமத்துச்’149**

மதுரை நகரில் இருந்த நாளங்காடி, அல்லங்காடி ஓவியம் போல கண்ணுக்கு இனிமை தருகிறது, எனும் பொருள்பட உள்ள பாடல்வரி ஓவியச் சிறப்பினை எடுத்துரைக்கிறது.

**‘சித்திர ரூபமாய் கண்களின் மூலமாக ஞானத்தைப் புகட்டுவது சித்திரக் கலை’150**

நம் முன்னோர்கள் முதன் முதலில் நேரில் கண்டவற்றை வரைந்தனர். அறிவின் வளர்ச்சியில் மனதால் பல காட்சிகளையும் உருவங்களைத் தன் கற்பனா சக்தி கொண்டு வரைந்தனர். பல குகை ஓவியங்கள் இன்றளவும் தமிழகத்தில் இருக்கின்றது. இவற்றைப் பார்க்கும் போது கட்டிடக் கலைக்கு முன்பே வீடு வாசலில்லா காலத்திலேயே சித்திரக் கலையை அறிந்திருந்தது விளங்கும்.

**‘வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச்**
**சித்திரச் செய்கைப் பாடம் போர்த்ததுவே**
**ஒப்பத் தோன்றிய உவமை’151**

என்று மணிமேகலை குறிப்பிடுகின்றது.

**‘வம்பமாக்கள் கம்பலை மூதூர்ச்**
**சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனை தொறும்**
**மையறு படிவத்து வானவர் முதலா**
**எவ்வகையுயிர்களும் உவமங் காட்டி**
**வெண் சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய**
**கண்கவர் ஓவியம் கண்டுநிற்குநரும்’152**

என்ற பாடல் செல்வர்கள் வசிக்கும் வீட்டுச்சுவர் மீதும் மாடங்கள் மீதும் அனைத்து உயிர்களையும் குறிக்கும் வகையான ஓவியங்கள் தீட்டப் பட்டிருந்தமையை உரைக்கிறது.

பெண்கள் விரும்பிக் கற்ற கற்றலில் ஓவியக்கலையும் உண்டு. இதனை,

**'நாடக மகளிர்க்கு நன் கணம் வகுத்த**
**ஓவியச் செந்நூல்உரைநூற் கிடக்கையும்**
**கற்றுத்துறை போகிய பொற்றொடி நங்கை'153**

என்ற வரிகள் மூலம் அறிய முடிகிறது.

சித்திரம் என்ற பொருள்படும் வகையில் 'ஓவு' என்றும் 'ஓவம்' என்ற சொற்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது.

**'ஓவக்கண் டன்ன இருபெரு நியமம்' 154**

**'ஓவத் தன்ன உண்டுறை' 155**

ஓவியத்தில் வல்லவர்கள் 'கண்ணுள் வினைஞர்' எனப்பட்டனர். இதனை,

**'எவ்வகைச் செய்தியும் உவமங் காட்டி**
**நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கிற்**
**கண்ணுள் வினைஞரும் பிறகும் கூடி'156**

மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது.

இவ்வகை ஓவியர்கள் தீட்டும் பாவை ஓவியத்தில் தெய்வத்தன்மை இருக்கும் என்றனர்.

**'வல்லோன் தைஇய வரிப்புனை பாவை**
**முருகியன் றன்ன உருவினை யாகி'157**

வண்ணம் தீட்டப்படா ஓவியம் புனையா ஓவியம் எனப்பட்டது.

**'பூந்துகில் மரீஇய ஏந்துகோட் டல்குல்**
**அம்மா சூர்ந்த அவிர்நூற் கலிங்கமொடு**
**புனையா ஓவியங் கடுப்பப் புனைவில்'158**

எனப் பாண்டியன் மாதேவி புனையா ஓவியம் போல அலங்காரமின்றி காணப் பட்டதைக் குறிப்பிடுகின்றது.

வண்ணமயமான ஓவியம் நீர்த்துறை ஓவியம் எனப்பட்டது.

**'ஓவத் தன்ன உண்டுறை மருங்கிற்'159**

என்ற வரியானது கடம்ப மலரின் மகரந்தம் உதிர்ந்து நீரில் இருந்த போது காணப்பட்ட காட்சிமைக்கு உதாரணம் கூறுகிறது. பெண்கள் தங்கள் மார்பின் மேல் அழகிய ஓவியங்களை வரைந்து கொள்வது சங்ககால பெண்களின் வழக்கமாக இருந்திருக்கிறது. இதனை,

**'பூவொடு துயல்வரும் மால்வரை நாடனை**
**இரந்தோர் உளர்கொல் தோழி திருந்திழைத்**
**தொய்யில் வனமுலை வரிவனப்பு இழப்ப'160**

**'ஓலைக் கணக்கர் ஒலியடங்கு புன்செக்கர்**
**மாலைப் பொழுதில் பிரிவு உள்ளி**
**மாலை பரிந்திட்டு அழுதாள் வனமுலைமேல்**
**கோலம் செய் சாந்தம் நிமிர்ந்து' 161**

என்ற சங்கப்பாடலால் அறியலாம்.

பெண்களால் வாசல் முன் வரையப்பட்ட சித்திரங்களே பின்பு கோலம் என பெயரிட்டு அழைக்கப்பட்டன.

**'ஊறுகளி யானை ஒருங்குடன் ஏற்றி**
**வீறுபடு கோலமொடு வியனகர் விழவணி'162**

என்று பெருங்கதை கோலத்தைக் குறிப்பிடுகிறது.

**'நீர் மேலை கோலமெனும் நிலைமைத்தே' 163**

என்று கம்பரும்

**'வெள்ளை நுண்மணல் கொன்ற சிற்றில்**
**விசித்திரப்பட வீதி வாய்த்**
**தெள்ளி நாங்கள் இழைத்த கோலம்'164**

என்று நாச்சியார் திருமொழியில் பெரியாழ்வாரும் கோலத்தைக் குறிப்பிடுகின்றார்.

### 1.4.3 சிற்பக் கலை

சங்க காலத்தில் சிற்பமானது கல், உலோகம், தந்தம், மெழுகு, செங்கல், மரம், மண், அரக்கு முதலியவைகளால் உருவாக்கப்பட்டதை

**‘மண்ணினும் கல்லினும் மரத்தினும் சுவரினும்**
**கண்ணிய தெய்வதம் காட்டுநர் வகுக்க’165**

என்று மணிமேகலை குறிப்பிடுகின்றது.

**‘கட்டிடக் கலை உலகில் பயன்மிகு கொண்டுள்ள அதே வேளையில் சிற்பக்கலை அழகுணர்வு, ஆன்மநலம் முதலியவற்றுக்கு ஆக்கம் தரும் இயல்பினதாக இருந்திருக்கிறது.166**

திருமுருகாற்றுப்படையில் முருகனுக்குத் திருப்பரங்குன்றம், திருச்சிரலை வாய், திருவாவின்குடி, திருவேரம், ஆகிய இடங்களில் ஆலயம் இருந்ததை எடுத்துரைக்கிறது. அவ்வாறு எனில் அவ்வாலயங்களில் கடவுளின் திருவுருவசிலை இருந்திருக்க வேண்டும். ஆக கடவுள் சிற்பங்கள் கவின்முறையில் வடிவமைக்கப் பட்டிருந்தது தெளிவாகிறது.

சதுக்கபூதம் சிலை, காவிரிபூம்பட்டினத்தில் நான்கு தெருக்கள் சந்திக்கு மிடத்தில் அமைக்கப்பட்டிருந்ததையும் இலக்கியங்கள் உணர்த்தும்.

தூணில் செதுக்கப்பட்ட பாவை சிற்பம் வருவது உறைக்கும் ஆற்றல் உடையது என மணிமேகலை கூறுகிறது. இதற்குக் ‘கத்திப்பாவை’ எனப்பெயர்.

**‘ஆங்க அணிநிலை மாடத்து அணிநின்ற பாங்காம்**
**மடப்பிடி கண்டு, வயக் கரி மால் உற்று**
**நடத்த நடவாது நிற்ப, மடப்பிடி**
**அன்னம் அனையாரோடு ஆயா நடை, கரிமேல்**
**செல் மணம் மால் உறுப்ப சென்று, எழில் மாடத்துக்**
**கைபுனை கிளர் வேங்கை கானிய வெருவுற்று’167**

என்ற பரிபாடல் மதுரை தெரு ஒன்றில் அணிநிலை மாடம் ஒன்று இருந்ததையும், அதில் பல உருவங்கள் சுதை சிற்பங்களாக வடிவமைக்கப்பட்டிருந்ததையும், அவற்றுள் வேங்கையின் உருவ சிற்பமும் இருந்ததையும் அது ‘கைபுனை

வேங்கை' எனப்பட்டதையும், அந்த வழியாகச் சென்ற பெண் யானை அதனை உண்மை வேங்கை என எண்ணி அச்சமுற்று அலைந்ததையும் தெரிவிக்கிறது.

கொல்லிமலையில் கொல்லிப்பாவை இருந்ததையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. வண்டல் மண் கொண்டும், மணலாலும், மரத்தினாலும் பாவை சிற்பங்கள் வடிவமைக்கப்பட்டதை

**'வண்டற் பாவை வௌவலீ168**

**'வண்டற் பாவை சிதைய வந்து நீ169**

**'வண்டற் பாவை வன முலை முற்றத்து' 170**

எனச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

### 1.4.4. இசைக்கலை

இசைக்கலை சங்க காலத்தில் முக்கியமான கலையாகத் திகழ்ந்தது. இசை ஒரு மனிதனின் மனதையே மாற்றிவிடும் வல்லமை படைத்தது. மகிழ்ச்சி யாக இருக்கும் போது ஒரு மனிதன் எதையாவது தன் கை விரல்களால் தட்டி ஓசை எழுப்பி அதை அவனே ரசிப்பதை யாவரும் அறிவர்.

பிறப்பு முதல் இறப்பு வரை மனிதனுடன் தொடர்ந்து வருவது இசைக் கலையே இசையானது அனைத்து உயிரினங்களையும் இசைய வைக்கும் என்பது மிகையாகாது. அத்தகைய இசையைக் கொடூர மனம் படைத்த ஆறலைக் கள்வர்களைக் கூட ஆடிப்பாடி மகிழவைத்து மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியதை ஆறலை கள்வர் படைவிட வருளின் மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை என்பதனால் அறியலாம். இத்தகைய இசைக்கலை பழங்காலத்தில் பாணர்கள் மூலம் சிறப்புற்றிருந்தது.

மனிதன் பேசுவதற்குத் துவங்கிய காலத்திலேயே இசைப் பிறந்துவிட்டது. ஆரம்பக் காலத்தில் மனிதனின் பேச்சு வழக்கே இசைத் தமிழில் இருந்திருக்க வேண்டும். அதனால் தான் பழைய இலக்கிய, இலக்கணங்கள் யாவும் செய்யுள் வடிவிலேயே இருக்கிறது. பழங்கால கல்வெட்டுக்களும். செப்பேடுகளும் செய்யுள் வடிவிலேயே செய்திகளை அறிவிக்கிறது. ஏறத்தாழ பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலுமே இசைத்தமிழ் நூல்களே மிகுந்திருந்தன என ஆன்றோர்கள் கூறுகின்றார்கள்.

**‘ஆடு அமைக் குயின்ற அவிர் துளை மருங்கின்**

**கோடை அவ்வளி குழலிசை ஆக்’**171

வண்டுகளால் துளைக்கப்பட்ட மூங்கில்களின் வழியே வெளிவரும் காற்றின் ஓசையே முதன் முதலாகக் கேட்டு மகிழ்ந்த இசை என்பதை உணர்த்துகிறது.

**‘ஆடல் பாடல் இசையே தமிழே**

**பண்ணே பாணி தூக்க முடமே’**172

என்ற சிலம்பின் வரிகள் ஆட்டம், பாட்டு, இசை, தமிழ்ப்பண், தாளம், கர வரிசை, குறைநிரை, பண்ணடைவு, திசைச்சொல், வழக்கு என்னும் அனைத்திலும் ஞானமுடையவன் மாதவிக்கு ஆசிரியனாக இருந்ததைக் குறிப்பிடுகிறது. இதனால் தமிழிசை தலை சிறந்ததொரு இடத்தை அக்காலத்தில் பிடித்திருந்திருக்கிறது.

**இசையைப் பற்றி**

**‘அளவு இறந்து இசைத்தலும் ஒற்று இசை நீடலும்**

**உளஏன மொழிப இசையொடு சிவனிய**

**நரம்பின் மறைய என் மனார் புலவர்’**173

எனத் தொல்காப்பியம் கூறுகிறது.

**‘ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எனும்**

**இவ்வே ழெழுத்தும் ஏழிசைக்குரிய’**174

என்று திவாகரமும்

**‘ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்றேழும்**

**ஏழிசைத் தெய்தும் அக்கரங்கள்’**175

என்று பிங்கல நிகண்டும், இயற்றமிழில் நீண்டு ஒலிக்கும் நெடில், உயிரெழுத்துக் களை ஏழிசைக்கும் குறியீடுகளாகத் தமிழர்கள் அமைத்ததை உறுதிபடுத்திகிறது.

சங்கத் தமிழர் ஏழிசை ஒலிகளுக்கும் தமிழில் பெயர்களை சூட்டினர். அவை முறையே குறல், துத்தம். கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப் பட்டது. இவற்றிலிருந்து பிறப்பன ‘திறங்கள்’ எனப்பட்டன.

குறிஞ்சிப்பண், முல்லைப்பண், பாலைப்பண், மருதப்பண், நெய்தற்ப்பண் என்னும் ஐவகை பண்களிலிருந்து பலப் பண்கள் பிறந்தன. அவற்றுள் பகற் பண்கள், இரவுப் பண்கள், காலை மாலைப் பண்கள் என அவ்வப்பொழுதிற்கேற்ப அமைந்த பண்களும் இருந்திருக்கின்றன.

**'பாணர் முல்லை பாடச் சுடரிழை'176**

**'முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே'177**

என்று முல்லை பண்ணைப் பதிவு செய்திருக்கிறது.

**'வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினு**
**மாரிடைச் செல்வோ ராறுநனி வெரூஉங்**
**காடிறந் தனரே காதலர்'178**

என்ற பாடல் குறிஞ்சி நிலப் பெண்கள் பஞ்சுரம் என்னும் பண்ணை இசைத்ததைக் காட்டுகிறது.

### 1.4.4.1 இசைக் கருவிகள்

இசைகள் 'இயக்கங்கள்' என அழைக்கப்பட்டன. பெரிய இசைக் கருவிகளுக்கு 'நெடும் பல்லியங்கள்' எனவும் சிறிய இசைக்கருவிகளுக்குக் 'குறும் பல்லியங்கள்' எனவும் பெயர். இவை தோற்கருவி, துளைக் கருவி, கஞ்சக் கருவி, நரம்புக் கருவி என நான்கு வகைகளாகும்.

### 1.4.4.2 பாட்டு

இசையுடன் இணைந்த செய்யுள் பாட்டானது, வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் பா வகைகள் பாட்டென்றும் கூறுவர். பரிந்து வரும் இயல்பினதாக இருப்பதால் பரிபாடல் எனப்பட்டது.

சங்ககால இலக்கியங்களில் அகவன் மகளிர்பாட்டு, உழிஞைப் பாட்டு, மறையோர் பாடல், தழிஞ்சிப் பாடல், விறற்கலிப்பாடல், வெறியாட்டுப் பாடல், ஆடல் மகளிர் பாடல், வள்ளைப் பாடல், துணங்கை பாடல், வேதப்பாடல், என பலப்பாடல்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றது.

சங்ககாலப் பாடல்கள் மக்களையும், அரசர்களையும், மகிழ்வித்தது. அதோடு பாடுநர்களுக்குப் பொருள் வளத்தினைக் கொடுத்தது. பிற்காலங்களில்

பாட்டுக்களையே சமூக முன்னேற்றத்திற்கான ஆயுதங்களாகப் பயன்படுத்தப் பட்டது.

**‘பாடுகம், வா வாழி, தோழி வயக் களிற்றுக்**
**கோடு உலக்கையாக, நல்சேம்பின் இலைசுனகா**
**ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து, இருவாம்**
**பாடுகம் வா வாழி, தோழி நல்தோழி பாடுற்று’179**

என்ற கலித்தொகை பாடல் தலைவி தோழியைப் பார்த்து உரலில் திணை இடித்துக் கொண்டே பாட்டுப் பாட அழைத்ததைக் கூறுகிறது.

**‘என்று யாம்பாட மறைநின்று கேட்டனன்’180**

**‘தையலாய் பாடுவாம் நாம்**
**…..**
**…..**
**கூடி அவர் திறம் பாட என் தோழிக்கு**
**வாடிய மென்தோளும் வீங்கின**
**ஆடுஅமை வெற்பன் அளித்தக்கால் போன்றே’181**

என்ற வரிகள் மனம் விட்டுப் பாடியதால் தலைவன் துயர் நீங்கியதைக் குறிப்பிடுகின்றது.

பிற்கால தமிழகத்தில் சுதந்திர உணர்வினைப் பாட்டுக்களே உண்டாக்கின. நாட்டுப்புறத்தில் பிறந்த பாடல்கள் போராட்ட உணர்வுகளைத் தட்டி எழுப்புவதாக இருந்தது.

### 1.4.5. ஆடல்கலை

நடனக் கலை என்பது இசை, கூத்து, தாளம், சேர்ந்த தொகுப்பு. இத்தகைய ஆடல் கலையானது மக்களுக்கு அறத்தையும், பொருளையும், இன்பத்தையும், வீடு பேறையும் தரவல்லது. நடனம், மனஉறுதியும், உடல் உறுதியும், இன்பத்தினையும் அளிக்கக் கூடியது.

### 1.4.5.1. கூத்துக் கலை

பொழுது போக்கு சாதனங்கள் இல்லாத காலகட்டம். நாடகங்கள் கூட மிக அரிதாக நடத்திய காலம். மக்கள் அனைவரையும் மகிழ்விக்க அவர்கள் பொழுது கழிய உதவியது கூத்துக்கலை ஒன்றே. இது கவின் கலைகளில் ஒன்று. இசையுடன் இணைந்து நடத்தப்படுவது. உடல் மொழியே இதன் சிறப்பம்சம். இது சங்ககால மக்களின் மன எண்ணங்களைப் பிரதிபலித்தது. அவர்களுடைய மனமகிழ்ச்சியை ஏற்படுத்தும் விதமாக நடத்தப்பட்டது. தாம் கண்ட காட்சிகளை, தாம் சொல்ல வரும் செய்திகளைத் தம் முகபாவம் உடல் அசைவுகள் மூலம் வெளியிடும் கலை கூத்தாகும்.

மேலும் கூத்து, அக கூத்து, புறக்கூத்து என இருபெரும் பிரிவாக நிகழ்த்தப்பட்டது.

> **'கூத்துப் பாவராகத் தாளவகை கொண்டு பதத்தால் பாட்டிற்கு இடையே நடிப்பதாம். அகக்கூத்து, சாந்திக் கூத்து, விநோத கூத்து எனப்பட்டது. குரவை, கலிநடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை என்பது விநோத கூத்தாகும்'182**

சங்க இலக்கியங்களில் பெரும்பாலும் குறிப்பிடப்படுபவை வேலன் ஆட்டம் (காந்தள்), வெறிக் கூத்து, கருங்கூத்து, வள்ளிக் கூத்து, கடிநிலைக் கூத்து, ஆச்சியர் குரவை, வேட்டுவ வரி, குன்றக் குரவை, துணங்கை முதலியவை ஆகும்.

### 1.4.6 விளையாட்டம்

குழந்தைப் பருவத்திலிருந்து விளையாட்டுக்கு முக்கிய இடம் கொடுப்பவர்கள் தமிழர்கள். ஐவகை நிலத்தாரும் அவரவர் சூழ்நிலைக்கேற்ப விளையாட்டு முறைகளை அமைத்துக் கொள்வர்.

முல்லை நில மக்கள் புனலாடுதலையும், பொழிலாடுதலையும், நெய்தல் நில மக்கள் கடலாடுதலையும், பொங்கல் விளையாட்டினையும், மருத நில மக்கள் அளவனாட்டல் என்ற விளையாட்டையும், பாலை நில மக்கள் பைஞ்சாய் விளையாட்டையும் விளையாடினார்கள். இவையொடு பல பொதுவான

விளையாட்டுக்களையும் விளையாடியதையும் சங்க இலக்கியங்கள் தெளிவு படுத்துகின்றன.

**‘செல்வம் புலனே புணர்வு விளையாட்டு என்று**
**அல்லல் நீத்த நான்கே’**183

துன்பம் நீக்கி மகிழ்ச்சி தரக் கூடியது விளையாட்டு என தொல்காப்பியம் கூறுகிறது. அகப்பொருள் நூல்கள் ஆண், பெண் விளையாட்டுகள் பலவற்றைச் சுட்டிக்காட்டியிருக்கின்றன.

**‘விளையாடு ஆயமொடு ஓரை ஆடாது**
**இளையோர் இல்லிடத்து இற்செறிந்திருத்தல்**
**அறனும் அன்றே, ஆக்கமும் தேய்ம்’**184

என்ற நற்றிணை பாடல் விளையாட்டினை அறத்தோடு இணைத்துக் கூறுகிறது. நன்கு விளையாடாவிடில் உடல் திறன் அழியும். அதனால் தேடிய செல்வமும் அழியும் என உணர்த்துகிறது.

‘விளையாட்டு வினையாகும்’ என்ற சொற்றொடர் தமிழில் உண்டு. நன்கு விளையாடுபவர்களே ஒரு செயலை (வினையை) செவ்வனே முடிப்பார்கள் என்பதனைக் குறிக்கவே பயன்பட்டது.

சங்க இலக்கியத்தில் ஊசலாடுதல், ஓரையாடல், ஏறு தழுவுதல், குதிரை ஏற்றம், யானை ஏற்றம், சிறுதேர் உருட்டி விளையாடுதல், ஆட்டுச் சண்டை, கௌதாரி சண்டை, பந்து விளையாடுதல், மற்போர், கழங்காடுதல், கிலியாடல், கோழிச்சண்டை, சடுகுடு, கிட்டிபுல், சிலம்பம், நீர் விளையாட்டு முதலியவற்றைக் குறிப்பிடுகின்றது.

**‘பெருங் கயிறு நாலும் இரும் பணம் பிணையல்**
**பூங் கண் ஆயம் ஊக்க, ஊங்காள்’**185

என்ற வரிகள் ஊசல் விளையாட்டினையும்,

சுடர் தொடீஇ! கேளாய் - தெருவில் நாம் ஆடும் மணற் சிற்றில் காலின் சிதையா அடைய கோதை பரிந்து, வரிபந்து கொண்டு ஓடி நோதக்க செய்யும் சிறுபட்டி என்று மணற்வீடு கட்டி விளையாடும் போது மற்ற சிறுவர்கள் காலால் உதைத்து அழித்து விட்டதைக் குறிப்பிடுகிறது.

**‘ஓரை மகளிர் அஞ்சி, ஈர்ஞெண்டு**

**கடலில் பரிக்கும்’186**

**‘ஓரை ஆயத்து ஒண்தொடி மகளிர்’**

என்பன ஓரை விளையாட்டு விளையாடியதைக் குறிக்கிறது. நண்டு, ஆமை முதலியவற்றைச் சிறு குச்சி கொண்டு அலைத்து விளையாடும் விளையாட்டாகும். இதைப் பெண்களே விளையாடி இருக்கின்றனர். இதனை அளவனாட்டல் என்று ஐங்குறுநூறு குறிக்கின்றது.

**‘முள்ளி வேரளைக் கள்வ னாட்டிப்**

**பூக்குற் றெய்திய புனலணி யூரன்187**

கால் சிலம்பு ஒலிக்க பெண்கள் பந்து விளையாடியதை,

**‘பைங்கா ழல்கல் நுண்டுகி னுடங்க**

**மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந் தாலும்**

**பீலி மஞ்ஞையி னியலிக் கால**

**தமனியப் பொற்சிலம் பொலிப்ப வுயர்நிலை**

**வான்றோய் மாடத்து வரிப்பந் தசைஇக்’188**

என்று பெரும்பாணாற்றுப் படையும், சீவகன் மனைவியோடு பந்தாடியதை, சீவக சிந்தாமணியும் குறிப்பிடுகின்றது.

நூலால் வரிந்து புனையப்பட்ட பந்தினை விளையாடப் பயன்படுத்தினர் என்று திருமுருகாற்றுப் படையும், பெரும்பாணாற்றுப் படையும் குறிப்பிடுகின்றது.

**‘வரிப்புனை பந்தொடு பாவை தூங்க’189**

பந்தாடி இளைத்துப் போன பின்பு கழங்கு விளையாடியதை,

**‘கைபுனை குறுந்தொடி தத்தப் பைபய**

**முத்த வார்மணற் பொற்கழங் காடும்’190**

**‘வணங்கு இறை மகளிர் அயர்ந்தனர் ஆடும்**

**கழங்கு உறழ் ஆலியொடு’191**

என்ற வரிகள் பெண்கள் தங்கள் கைகளில் ஒன்றை வளைத்து ஊன்றிக் கொண்டு மற்றொரு கையால் கழங்கு (கல்லாங்காய் என கிராமங்களில் கூறப்படும்) விருப்பமுடன் விளையாடியதைக் குறிப்பிடுகின்றது.

வீட்டுத் திண்ணையில் பெண்கள் கழங்கு ஆடி பொழுது போக்கியதைப் புறநானூறும் சுட்டுகிறது.

**செறியரிச் சிலம்பின் குறுந்தொடி மகளிர்**
**பொலஞ்செய் கழங்கிற் றொற்றியாடும்**

வட்டமென்பது வட்டை உருட்டி விளையாடும் ஒரு சூதாட்டம் சிறுவர்கள் வேப்ப மரத்தின் நிழலில் வட்டம் இழைத்து நெல்லிக்காயை வட்டாகக் கொண்டு விளையாடினர்.

**'பொரி அரை வேம்பின் புள்ளி நீழல்**
**கட்டளை அன்ன இட்டு அரங்கு இழைத்து**
**கல்லாச் சிறாஅர் நெல்லி வட்டு ஆடும்**
**வில் ஏர் உழவர் வெம் முனைச் சீறூர்192**

என்ற பாடல் பாலை நிலச் சிறுவர்கள் வட்டாடியதைச் சுட்டிக்காட்டுகிறது.

**'அறங்கின்றி வட்டாடி அற்றே நிரம்பிய**
**நூல் இன்றிக் கோட்டி கொளல்193**

என வட்டு விளையாட்டைத் திருவள்ளுவரும் சுட்டிக் காட்டுகிறார்.

புனலாடுதல், பொழிலாடுதல், கடலாடுதல், இவை நீர் விளையாட்டாகும். மகளிர் நீர் விளையாட்டில் விருப்பத்துடன் ஈடுபட்டதை,

**'பண்ணை பாய்வோ டண்ணறுங் கதுப்பே194**

**'இனி நினைந்து இரக்கம் ஆகின்று திணிமணல்**
**செய்யுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்**
**தண்கயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து195**

என்ற பாடலானது மணலில் உருவம் செய்து அலங்கரித்துக் குளிர்ந்த நீரில் ஆடும் பெண்களுடன் கைகோர்த்து விளையாடிய பிறகு குளக்கரையில் நீருக்கு அருகேயுள்ள வளைந்த மரக்கிளைகள் உள்ள மருத மரத்தில் உயரமாக ஏறி

கரையிலிருப்பவர்கள் வியக்கும் வண்ணம் திடுமென குளத்தில் விழுந்து அடிவரை சென்று மணலை அள்ளி வந்து கரையில் இருப்பவர்களுக்குக் காட்டி மகிழ்ந்ததைக் குறிப்பிடுகிறது. இதனையே பெரும்பாணாற்றுப் படையும்

**'கோடை நீடினும் குறைபட லறியாத்**

**தோடாழ் குளத்த கோடுகாத் திருக்கும்196**

குறிப்பிடும்.

கார்காலத் தொடக்கத்தில் தலைவனும், தலைவியும் நீர் விளையாட்டை விளையாடி மகிழ்ந்திருந்தனர். இதனைப் புலனாடுதல் என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**'தலைப் பெயற் செம்புன லாடித்**

**தவநனி சிவந்தன மகிழ்நநின் கண்ணே197**

பொழிலாடுதல் என்னும் விளையாட்டைத் தலைவனும், தலைவியும் மலர் நிறைந்த சோலையில் தனியே சந்தித்து விளையாடினர்.

**'காயா கொன்றை நெய்தன் முல்லை**

**போதவிழ் தளவோடு பிடவலர்ந்து கவினிப்**

**பூவண் கொண்டன்றாற் புறவே**

**பேரமர்க் கண்ணி யாடுகம் விரைந்தே198**

**'நொதும லாளர் கொள்ளா ரிவையே**

**யெம்மொடு வந்து கடலாடு மகளிரு**

**நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையர்199**

**'நெய்த லுண்க ணேரிறைப் பணைத்தோட்**

**பொய்த லாடிய பொய்யா மகளிர்200**

என்ற இப்பாடல் கூட்டாஞ்சோறாக்கி கணவன் மனைவி போல் பாவித்துச் சிறுமிகள் பொய்த்தல் விளையாட்டு ஆடியதைக் குறிப்பிடுகின்றது.

கோரப் புல்லால் பொம்மை செய்து தம் குழந்தையாக அதைப் பாவித்து பூச்சூட்டி, பாலூட்டி விளையாடினர். பேதை பருவ மகளிர்.

இதனை,

**‘வோதமொடு பெயருந் துறைவதற்குப்**

**பைஞ்சாய்ப் பாவை யீன்றெனென் யானே்201**

**‘உறாஅ வறமுலை மடாஅ**

**உண்ணாப் பாவையை யூட்டு வோளே்202**

**‘இது என் பாவைக்கு இனிய நன் பாவை்203**

**‘பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே்204**

என்ற வரிகளும் வண்டல் மண்ணில் வீடுகட்டிச் சோறாக்கி பாவை வைத்து விளையாடியதை,

**‘தண்புனல் வண்ட லுய்த்தென**

**வுண்கண் சிவப்ப வழுதுநின்றாளே்205**

**‘வண்டற் பாவை வௌவலீ்206**

**‘வண்டற் பாவை சிதைய வந்து நீ்207**

**‘வண்டற் பாவை வனமுலை முற்றத்து்208**

எனச் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றது.

குரவம்பூவில் பாவை செய்தும் விளையாடினர்.

**‘அவரோ வாரார் தான்வந் தன்றே**
**நறும்பூங் குரவம் பயந்த**
**செய்யாப் பாவை கொய்யும் பொழுதே்209**

பெண்கள் காஞ்சிமரத்தின் நிழலிலே மணலைக் குவித்து வெள்ளியினாலே சிறந்த முறையில் பூண்கட்டிய மெல்லிய கரும்பினால் இயன்ற உலக்கையால் தம் குடியின் பெருமைகளைப் பாடியவாறே உலக்கையிட்டு விளையாடியதை,

**‘வெள்ளி விழுத்தொடி மென்கருப்பு உலக்கை**
**வள்ளி நுண்இடை வயின்வயின் நுடங்க**
**மீன்சினை அன்ன வெண்மணல் குவைஇ**
**காஞ்சி நீழல் தமர்வளம் பாடி**

**ஊர்க்குறு மகளிர் குறுவழி விறந்த**
**வராஅல் அருந்திய சிறுசிரல் மருதின்**
**தாழ்சினை உறங்கும் தண்துறை ஊர்210**

இப்பாடல் உணர்த்துகிறது. மேலும் இவ்விளையாட்டைச் சிலப்பதிகாரம் வாழ்த்துக் காதையிலே வரும் "தீங்கரும்பு, நல்உலக்கையாக" என்னும் பகுதி விளக்கும்.

பூம்புகார் நகரத்து மீனவக் குழந்தைகள் அங்கு நடந்த ஆட்டுக்கிடாய் சண்டை, கௌதாரி சண்டை, போன்றவற்றைக் கண்டு களித்ததை,

**'பெருஞ்சினத்தாற் புறங்கொடாஅது**
**இருஞ்செருவின் இகல் மொய்ம்பினோர்**
**கல்லெறியும் கவண்வெரீஇப்**
**புள்ளிரியும் புகார்ப்போந்தைப்**
**பறழ்பன்றிப் பல்கோழி**
**உறைக்கிணற்றுப் புறச்சேரி**
**மேழகத் தகரொடு சிவல்விளை யாடக்211**

என்ற பாடல் வழி அறியலாம்.

இந்தப் பொழுதுபோக்கு அவர்களுக்கிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டுச் சண்டையும் இட்டுக் கொண்டதையும் இப்பாடல்வழி அறியலாம்.

### 1.4.7 வானியல் கலை

சங்ககாலத்தில் தமிழர்கள் வானியல் கலையில் வல்லவர்களாக இருந்தனர். அவர்கள் கண்டுபிடித்த வானியல் நுட்பங்கள் அடிப்படையில் தான் இன்றைய வான ஆராய்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன. இன்றைய வானியல் நுட்ப அறிவுகளுக்குச் சங்கத் தமிழர்களே வழிகாட்டிகள்.

**'நிலம் தீ நீர் வளி விசும்போடு ஐந்தும்**
**கலந்த மயக்கம் ஆதலின்'212**

**'மண் திணிந்த நிலனும்**
**நிலன் ஏந்திய விசும்பும்**

**விசும்பு தைவரு வளியும்**
**வளித்தலை இய தீயும்**
**தீ முரணிய நீரும் என்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்213**

என்ற பாடல்கள் நீர், நிலம், நெருப்பு, காற்று, வானம் என ஐம்பூதத்தை உள்ளடக்கியது உலகம் என்னும் இது இயற்கையின் பாற்பட்டது என்றும் கூறுவதிலிருந்து பழந்தமிழருக்கு மிகத் தெளிவான வானியல் நுட்பம் தெரிந்திருப்பது உறுதியாகிறது.

15ம் நூற்றாண்டு வரை உலகம் தட்டையான அமைப்பைக் கொண்டதாகவே கருதினர். அதன் பிறகு கி.மு. 1440ல் போலந்து நாட்டு அறிஞர் நிக்கோலஸ் கிரப்ஸ் என்பவர் உலகம் உருண்டை என கணித்துச் சொன்னார். அதற்குப் பின் 17ம் நூற்றாண்டில் கலிலியோ என்ற ஞானி உலகம் உருண்டை என ஆதாரத்துடன் விளக்கினார். மக்கள் அதனை ஏற்கத் துவங்கினர். இவர்கள் உலகம் உருண்டை வடிவானது என சொல்வதற்கு முன்பே அதாவது 10ம் நூற்றாண்டிலே மாணிக்கவாசகர் அதனைக் கண்டுபிடித்து,

**'அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பருந் தன்மை வளப் பெருங்காட்சி**
**ஒன்றனுக்கு ஒன்று நின்றெழில் பகரின்**
**நூற்றொடு கோடியின் மேற்பட விரிந்தன**
**இல்நுழை கதிரின் துண் அனுப்புரையச்**
**சிறியவாக'214**

என்று வானில் வெடித்துச் சிதறிய நெருப்புத் துண்டின் சிறு துண்டே இந்தப் பூமி. அது உண்டை (உருண்டை) வடிவமானது என்று அறிவித்திருக்கிறார்.

உருண்டையானது உலகம் என்பதை, சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால் உழந்தும் உழவே தலை என்று 2047 ஆண்டுகளுக்கு முன்பே திருவள்ளுவரும் உணர்த்தியிருப்பதை அறியலாம்.

அண்டப் பெருவெளியில் காற்று அதனால் தீயும் அதிலிருந்து நீரும், பனி மழையின் செயல்களால் நிலம் தோன்றியதாகப் பரிபாடல் குறிப்பிடுகின்றது.

**‘கரு வளர் வானத்து இசையின் தோன்றி**
**உரு அறிவாரா ஒன்றன் ஊழியும்**
**உந்து வளி கிளர்ந்த ஊழ்ஊழ் ஊழியும்**
**செந் தீச் சுடரிய ஊழியும், பனியொடு**
**தண் பெயல் தலைஇய ஊழியும் அவையிற்று**
**உள்முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு**
**மீண்டும் பீடு உயர்பு ஈண்டி, அவற்றிற்கும்**
**உள்ளீடு ஆகிய இரு நிலத்து ஊழியும்215**

நெருப்புக் கோளமாக இருந்த பகுதி நீரால் குளிர்ந்து பிறகு நிலமாகியது என்ற இன்றைய அறிவியல் அறிஞர்களின் ஆய்வுக்கு முன்னோடியாக இருப்பது புலப்படும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் உலக உருண்டையை ஆதிவராகர் தூக்குவது போல் அமைந்துள்ள சிற்பத்தில் அறிவியல் நுட்பம் சொல்லப்படுகிறது.

### 1.4.7.1 கோள்கள்

ஒவ்வொரு கோளுக்கும் மூன்று நட்சத்திரம் வீதம் ஒன்பது கோள்களுக்கும் 27 நட்சத்திரங்களைப் பங்கீட்டுச் சொல்லியிருக்கின்றனர். ஒவ்வொரு கோளின் ஆதிக்கத்தின் கீழ் இயங்கும் நட்சத்திரத்தின் கீழ் பிறக்கின்ற உயிர்களின் செயல்களையும் அவை கட்டுப்படுத்துவதாகக் கூறியிருக்கின்றன.

#### 1.4.7.1.1 சூரியன்

ஒன்பது கோள்களில் முதன்மையானது சூரியன். இது இல்லாமல் பூமியில் எவ்வித வாழ்க்கையுமில்லை.

ஒளிகளுக்கெல்லாம் தலைவனாகச் சூரியன் கருதப்படுகிறது. ஆதி காவியமான இராமயணத்தில் யுத்த காண்டத்தில் ஆதித்ய கிருதய தோத்திரத்தில் விண்மீன்களுக்கும் கோள்களுக்கும் தலைவனாகக் கூறப் பட்டுள்ளது.

சூரியன் சுற்றிய பாதையைச் சூரிய வட்டம் என்று அழைத்தனர். அதனைச் செஞ்ஞாயிற்று செலவும் என்கிறது புறநானூறு,

**‘செஞ்ஞாயிற்றுச் செலவும் அஞ்ஞாயிற்றுப்**

**பரிப்பும் பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்**

**வளி திரிதரு திசையும்**

**வறிது நிலைஇய காயமும், என்றிவை**

**சென்றளந்து அறிந்தோர் போல்216**

### 1.4.7.1.2 வெள்ளி

சூரியனுக்கு இடதுபுறம் உயரே தெரிந்தும் தெரியாதபடி இருப்பது வெள்ளிக் கோளாகும். மேற்கே மாலையிலும், கிழக்கே விடியலிலும் காணப்படும்.

**‘நீனிற விசும்பின் வலனேர்வு திரிதரும்**

**நாண்மீன் விராய கோண்மீன் போல**

**மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇ217**

எனும் பட்டினப் பாலை வரிகள் 27 நட்சத்திரங்களை நாள்களாகிய மீன் என்றும் நவகிரகங்களைக் கோள்களாகிய மீன் என்றும் குறிப்பிடுகின்றது. மேலும்

**‘மழை நீங்கிய மாவிசும்பின்**

**மதி சேர்ந்த மகவெண்மீன்**

**உருகெழுதிறல் உயர்கோட்டத்து**

**முருகமர் பூ முரண் கிடக்கை**

**வரியணிசுடர் வான் பொய்கை’**

என்று மழைமேகங்கள் நீங்கிய அகன்ற வானத்தில் நிலவோடு சேர்ந்து தோன்றும் மகம் எனும் நட்சத்திரத்தின் வடிவத்தைப் போல என உவமை வரிகளும் இதனைக் கூறும்.

வெள்ளி தென் திசையில் உறைந்தமையால் நீரின்றி விளை வயல்கள் வாடி காணப்பட்டதை,

**‘வெள்ளி தென்புலத்து உறைய விளைவயல்**

**பள்ளம் பாடிய பயன்இல் காலை218**

என்று புறநானூறும்,

**‘வசையில் புகழ் வயங்குவெண் மீன்**

**திசை திரிந்து தெற்கேகினும்’219**

எனப் பட்டினப் பாலையும்

**‘பெயலுலந் தெழுந்த பொங்கல் வெண்மழை**

**அகலிரு விசும்பில் துவலை கற்ப்’220**

என நெடுநல்வாடையும் வெள்ளியைக் குறிப்பிடுகிறது.

### 1.4.7.1.3 சனி

சூரியக் குடும்பத்திலேயே மிக அழகிய கோளாகச் சனி கருதப்படுகிறது. புறநானூற்றில் கபிலர் தலைவனின் தந்தை நாட்டை

**‘மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்**

**தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்’221**

என்று வர்ணிக்கிறார். மைம்மீன் என்பது சனிக்கோளைக் குறிக்கும்.

### 1.4.7.1.4 ராகு – கேது

இவை இரண்டும் சூரியனைச் சுற்றிவர 18 ½ ஆண்டுகள் ஆகும் என சோதிட நூல்கள் கூறுகின்றது. ராகுவும், கேதுவும் வித்தியாசமான இயக்கத்தை உடையவை. சூரியன் முதலான மற்றக் கோள்களின் சுழற்சிக்கு நேர் எதிரான இயக்கத்தை உடையவை. கலித்தொகையில், தோழி தலைவனிடம் நீ உன் தலைவியின் முகத்தினை முழுமதி என்கிறாய். ஆனால் நீ பிரிந்த பின் துயரால் ராகு – கேதுகளால் விழுங்கப்பட்ட நிலாவைப் போல அவள் முகம் ஒளியிழந்து விடும் என்று கூறுவதிலிருந்து சங்க காலத்தவர் இராகு – கேது கோள்களைப் பற்றி அறிந்ததை வெளிப்படுத்துகிறது.

தீம் கதிர் மதி ஏய்க்கும் திருமுகம் - அம்முகம்
பாம்பு சேர் மதியம் போல பசப்பு ஊர்ந்து
தொலைந்தக் கால்

### 1.4.7.2 சங்க இலக்கியங்களில் விண்மீன் குறிப்புகள்

உலக தோற்றத்தை அறிவார்ந்த சிந்தையோடு விளக்கியவர் தொல்காப்பியர்.

**'நிலம் தீ நீர் வளி விசும்பொடு ஐந்தும்**
**கலந்த மயக்கும் உலகம்'222**

எழுத்ததிகாரம் உயிர் மயங்கியலில் வரும் சில நூற்பாக்கள் தொல்காப்பியர் காலத்திலேயே மாதம், நாள், நட்சத்திரம் பற்றிய தெளிவான சிந்தனை இருந்ததை உணர்த்துகிறது.

இகர சுட்டு புணர்ச்சியைக் கூறுமிடத்துப் பனியென வருகின்ற பருவகால வேறுபாட்டை உணர்த்தும் சொல்லுக்கெதிரே கசதபக்கள்வரின் அத்தும் இன்னும் சாரியைகளாக வருமென்றும் கால வேற்றுமைக்குப் பருவ வேறுபாட்டை உணர்த்தும் சொல்லுக்குக் கூறுகிறார்.

**'பனியென வருஉங் காலவேற்றுமைக்கு**
**அத்தும் இன்னும் சாரியை ஆகும்'223**

நட்சத்திர பெயரான பரணி போன்ற இகரவீற்றுச் சொல்லுக்கு முன் வினைச்சொல் வரும்போது ஆன் சாரியை இடையில் வருவதில் ஐயமில்லை என்கிறார்.

**'நாள்முன் தோன்றும் தொழில் நிலைக் கிளவிக்கு**
**ஆண் இடைவருதல் ஐம் இன்றே'224**

இகரவீற்று திங்கள் பெயர்முன் வினைசொல் புணர்தல் கூறுமிடத்துத் திங்களை உணர்த்தும் பெயர் சொல் முன் வினைசொல் வரின் இக்குச் சாரியை இடையில் வரும் (ஆடிக்குக் கொண்டான்)

**'திங்கள் முன்வரின் இக்கே சாரியை'225**

ஐகார ஈற்றைக் கூறுமிடத்து ஐகார ஈற்றுத் திங்களைக் குறிக்கும் பெயரும், நாளை உணர்த்தும் பெயரும், முன்பு இகர வீற்றுத் திங்களும் நாளும் பெற்ற விதியைப் பெறும். அதாவது இக்கும் ஆனும் சாரியைகளைப் பெறும் (சித்திரை – ஆதிரை)

**'திங்களும் நாளும் முந்து கிளந்தன்ன'226**

காற்று வடகிழக்கிலிருந்து வீசுகிறது. அது உலக சுழற்சியின் காரணமாகவும், புவி நடுக்கோட்டின் கீழ் தமிழகம் இருப்பதன் காரணத்தாலும் கிழக்கிலிருந்து மேற்காக வீசுகிறது. பழந்தமிழர்கள் இதை நன்கு உணர்ந்திருந்தனர். இதனை,

**.... வலனேர்**
**பங்க ணிருவிசும் பதிர வேறோடு**
**பெயறொடங் கின்றே வானங்'227**

என்கிறது ஐங்குறுநூறு, இதையே அகநானூறும்

**'பணை முழங்கு எழிலி பௌவம் வாங்கி**
**தாழ் பெயற் பெருநீர், வலன் ஏர்பு, வளைஇ'228**

எனச் சுட்டுகிறது.

சனிக் கோள் புகையினும் விசும்பில் தூமைக்கேதும் தோன்றினும் விரிந்த கதிர்களையுடைய சுக்கிரன் தென் திசைக்கண் செல்லினும் காற்று தாக்கும் குட மலையின் உச்சியிலே கடுமுழக்கத்தோடு கூடிய இடியுடன் கரு முற்றிய பருவமேகமானது பெயலாகிய மழை வளத்தை நிரம்ப விளங்கும் என சிலப்பதிகாரப் பாடல் சனிக் கோளைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

**'கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்**
**விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்**
**கால் பொரு நிவப்பின் கடுங்குரலேற்றொடும்**
**சூல்முதிர் கொண்டுப் பெயல் வளஞ் சுரப்ப'229**

ராமர் பிறந்ததைக் கூறுமிடத்து சுபானு வருசத்து மேஷ மாசத்து பூர்வ பட்சத்து நவமி திதியில் புனர்வசு நட்சத்திரத்தில் 4ம் பாதத்தில் புதன்கிழமை கடக லக்னத்தில் ஸ்ரீராமன் பிறந்ததாகப் பாலக்காண்டம் திரு அவதார படலத்தில் கம்பன் கூறுகின்றார்.

**மேடமா மதிதிதி நவமி மீன் கழை**
**நீடுறு மாலைகர்க் கடக நீதிசேர்**

**ஓடைமா களிறனா னுதய ராசிக்கோள்**

**நாடினே காதசர் நால்வருச்சரே'230**

12 மாதங்கள் ஒரு ஆண்டாகும். நம் முன்னோர்கள் ஓர் ஆண்டினை ஆறு பருவமாகப் பிரித்தனர்.

1. இளவேனிற் காலம் - சித்திரை, வைகாசி (ஏப்ரல் மே)
2. முதுவேனிற் காலம் - ஆனி, ஆடி (ஜுன், ஜுலை)
3. கார்காலம் - ஆவணி, புரட்டாசி (ஆகஸ்ட், செப்டம்பர்)
4. கூதிர்காலம் - ஐப்பசி, கார்த்திகை (அக்டோபர், நவம்பர்)
5. முன் பனி காலம் - மார்கழி, தை (டிசம்பர், ஜனவரி)
6. பின் பனி காலம் - மாசி, பங்குனி (பிப்ரவரி, மார்ச்)

**'ஆறு என்ற தொகைக் குறியீடு தொல்காப்பியத்துள் இல்லை. அ∴து உரையாசிரியர்களால் பெறப்படுவதே. கார், கூதிர், பனியேதிற் பருவம், வேனில் பின்பனி என்ற பெயரீடுகளே தொல்காப்பியத்துள் உள்ளன. இவற்றிற்குரிய மாதக் கணக்கீடுகள் மூல நூலில் இல்லை. எனினும் உரைநூல்கள் அவற்றை விவரித்து உரைக்கும்'231** என்கிறார் க.ப. அறவாணன்.

கண்ணிமைக்கும் நேரம், இயல்பாகக் கை நொடிக்கும் நேரம் ஒரு மாத்திரை என்று இலக்கண நூல்களில் சொல்லப்பட்டிருக்கும். 'இயல் பெருமாந்தர் இமை நொடி மாத்திரை' என்பது நன்னூல். கண்ணிமைக்கும் நேரம் காஷ்டையாகும்.

காலத்தை அளந்து இத்தனை நாழிகை என்று கூறும் பொய் கூறும் தன்மையில்லாத நாழிகை கணக்கர்கள் வாழ்ந்த காலம் சங்ககாலம் இதனை,

**'பொழுதளந் தறியும் பொய்யான மாக்கள்'232**

என்ற முல்லைப்பாட்டு வரி உறுதி செய்கிறது.

இதுகாறும் கூறியவற்றால் இவ்வியலில் நிலப்பாகுபாடும், மக்களும் அவர்களின் குடும்ப அமைப்பு முறைகள், இல்வாழ்க்கைக்குரிய பண்புகள் விருந்தோம்பும் முறைகள், கல்வி, மக்கட்பேறின் சிறப்புகள், மதம், மற்றும் சமய நிலைகள், கலைகள் முதலியவற்றை விளக்கமாக ஆராயப்பெற்றுள்ளது.

**அடிக்குறிப்புகள்**

1. தமிழ்நாவல்களில் பொருளாதார சிக்கல்கள், 240
2. வாழ்வியல் களஞ்சியம் தொகுதி 8, 469
3. இயக்கவியல் பொருள் முதல் வாதமும்
வரலாற்றுப் பொருள் முதல் வாதமும், 417
4. தமிழ் இலக்கிய (வழி) வரலாறு, 11
5. புறநானூறு பாடல் எண் 49
6. ஐங்குறுநூறு, பாடல் எண் 261
7. மேலது, பாடல் எண் 5
8. தொல். பொருள். நூற்பா எண் 5
9. சிலம்பு 11:64:7
10. ஐங்குறுநூறு, பாடல் எண் 406
11. தமிழ் இலக்கிய வரலாறு, பக். 24
12. அபிதான சிந்தாமணி, பக். 458
13. தொல். கற். நூ. 11
14. திருக்குறள் குறள் எண் 60
15. ஐங்குறுநூறு பாடல் எண். 275
16. குறிஞ்சிப்பாடல் பாடல்வரி 13-18
17. ஆசாரக் கோவை பாடல் எண். 2
18. ஐங்குறுநூறு பாடல்எண். 447:2-4
19. அகம் பாடல் எண். 64:12-13
20. மேலது பாடல் எண். 304:19-20
21. ஐங்குநுறூறு பாடல் எண். 445:4-5
22. நற்றிணை பாடல் எண். 14:1-3
23. மேலது பாடல் எண். 24:8-9
24. மேலது பாடல் எண். 32:6-9
25. ஐங்குறுநூறு பாடல் எண். 1:1-2
26. மேலது பாடல் எண். 2:2
27. ஐங்குறுநூறு பாடல் எண் 2
28. அபிதான சிந்தாமணி, பக். 108
29. ஐங்குறுநூறு பாடல் எண் 28
30. அபிதான சிந்தாமணி பக். 383

31. தொல். கற். நூ. 11
32. தொல். பொருள். நூ. 241
33. சங்க இலக்கியத்தில் வரைவின் மகளிர், பக். 79
34. தொல்.பொருள். நூ. 89
35. சம்பந்தர் தேவாரம் ப. 94
36. தமிழ் இன்பம், பக். 740
37. மேலது, பக். 74
38. தொல்.பொருள்.இளம். சூ. 138
39. இறை. அகம். நூ. 23 உரை
40. தொல்.பொருள். நூ. 190
41. ஐம்பெருங்காப்பியத்தில் சடங்குகள்
42. குறுந்தொகை பாடல் எண். 146
43. தொல்பொருள் நூ. 269
44. நெடுநல்வாடை பாடல் வரி, 136-137
45. புறநானூறு பாடல் எண். 246:4-10
46. மேலது பாடல் எண். 248:3-7
47. மேலது பாடல் எண். 250-4
48. தொல். கற். நூ. 46
49. தமிழ் அகராதி, பக். 71
50. புறநானூறு பாடல் எண். 182
51. மதுரைக்காஞ்சி பாடல் வரி 712-713
52. பட்டினப்பாலை பாடல் வரி, 295-299
53. திருமுருகாற்றுப்படை பாடல் வரி 94-96
54. மதுரைக்காஞ்சி பாடல் வரி 558-561
55. பத்துப்பாட்டு ஆராய்ச்சி பக். 568
56. பொருநராற்றுப்படை பாடல்வரி 1-3
57. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 30
58. புறநானூறு பாடல் எண் 113:1-3
59. பொருநராற்றுப்படை பாடல் வரி 85-89
60. மேலது பாடல் வரி 103-108
61. மலைபடுகடாம் பாடல் வரி 170-180
62. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 192-196

63. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 163
64. மேலது பாடல் வரி 175-177
65. மேலது பாடல் வரி 193-195
66. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 94-100
67. மேலது பாடல் வரி 129-133
68. தெய்வீகக் குணம் பக். 21
69. இயக்கவியல் பொருள் முதல் வாதமும்
வரலாற்றுப் பொருள் முதல் வாதமும் பக். 199
70. மக்கள் தொகை தத்துவத்தின் அடிப்படைகள் பக். 5
71. தமிழர் வாழ்வியலில் நிமித்தமும்
கனவுகளும் (ஆய்வேடு), 114
72. கவி காளமேகப் புலவர், தனிப்பாடல் பக். 16
73. திருக்குறள் குறள் எண் 61
74. அகநானூறு பாடல் எண் 66:1-4
75. புறநானூறு பாடல் எண் 9:2-4
76. மேலது பாடல் எண் 188:6-7
77. அகநானூறு பாடல் எண் 16:5
78. மேலது பாடல் எண் 184:1-3
79. பெண் மணம் பக். 75
80. தமிழ்நாட்டில் கல்வி அன்றும் இன்றும்
81. மேலது பக். 62
82. நாலடியார் பாடல் எண் 133
83. மேலது பாடல் எண் 134
84. கம்பனின் அரசியல் கோட்பாடுகள் பக். 121
85. பாரதியார் பாடல்கள் பக். 75
86. தமிழ் இலக்கிய வரலாறு (ஆனந்தன்) பக். 192
87. விதுரநீதி பக். 26
88. இயக்கவியல் பொருள் முதல்வாதமும்,
வரலாற்றுப் பொருள் முதல் வாதமும், பக். 53
89. மேலது பக். 75
90. மேலது பக். 90
91. சத்திய சோதனை பக். 52
92. தென்னிந்திய வரலாறு, பக். 141

93. பட்டினப்பாலை பாடல்வரி பக். 198-199

94. தமிழ்மொழி அகராதி (தி. கதிரைவேற்பிள்ளை), 826

95. கலி.நெய்தல் பாடல் வரி 12:1-2

96. தெய்வ தரிசனம், பக். 1720

97. அகநானூறு பாடல் எண். 181:15-17

98. மதுரைக்காஞ்சி பாடல் வரி 453-455

99. மலைபடுகடாம் பாடல் வரி 82-83

100. மணிமேகலை பாடல் எண். 54-55

101. கலி நெய்தல் பாடல் வரி 2:1-2

102. கலி குறிஞ்சி பாடல் வரி 2:1-2

103. இந்திய தேசிய ஒருமைப்பாட்டிற்குச் சமயதமிழ் இலக்கியங்களின் பங்களிப்பு, பக். 248

104. மேலது பக். 132

105. திருவரங்கம் பெரியகோயில் திருவிழாக்களும் ஒழுகலாறுகளும், பக். 3

106. அகநானூறு பாடல் எண் 220:5

107. மேலது பாடல் எண் 59:4-6

108. மதுரைக் காஞ்சி பாடல் வரி 655-656

109. திருமுருகாற்றுப்படை பாடல் வரி 95-96

110. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 498-499

111. கலி.நெய்தல் பாடல் வரி 7:1

112. பரிபாடல் முறையே 1:5, 1:13, 1:31, 2:18, 3:3

113. திருமுருகாற்றுப்படை பாடல் வரி 208-211

114. மேலது பாடல்வரி 256-261

115. Origin and early history of saivisam in South India. Pg. 102

116. A history of South India Pg. 92

117. திருமுருகாற்றுப்படை பாடல் வரி 92-94

118. நற்றிணை பாடல் எண் 34:10-11

119. அகநானூறு பாடல் எண் 59:10-11

120. தொல். நூ. 4

121. அகநானூறு பாடல் எண். 345:4-5

122. திருமுருகாற்றுப்படை பாடல் வரி 258

123. மேலது, பாடல் வரி 155-159

124. பட்டினப்பாலை பாடல் வரி 86-87
125. அகநானூறு பாடல் எண் 201:7-9
126. மேலது பாடல் எண் 370:12
127. பட்டினப்பாலை பாடல் வரி 41
128. மேலது பாடல் வரி 291
129. மலைபடுகடாம் பாடல் வரி 356
130. அகநானூறு பாடல் எண் 47:9-10
131. மேலது பாடல் எண் 11:4-5
132. மேலது பாடல் எண் 239:9-10
133. அகநானூறு பாடல் எண் 348:7-8
134. மேலது பாடல் எண் 270:12
135. மேலது பாடல் எண் 309:4-5
136. நற்றிணை பாடல் எண் 343:4
137. தொல். நூ. 63
138. அகநானூறு பாடல் எண் 131:10-11
139. மேலது பாடல் எண் 233:7-10
140. மேலது பாடல் எண் 282:16-17
141. மலைபடுகடாம் பாடல் வரி 199-202
142. அகநானூறு பாடல் எண் 269:14-20
143. வியக்க வைக்கும் அறிவியல் தமிழ் பக். 79
144. பெரும்பாணாற்றுப் படை பாடல் எண். 405
145. மேலது பாடல் வரி 346-348
146. முல்லைப்பாட்டு பாடல் வரி 86
147. அகநானூறு பாடல் எண் 167:13-15
148. நச்சி (உ.ஆ) தொல்.பொருள். 997
149. மதுரைக்காஞ்சி பாடல் எண் 365
150. கரும்பலகை சித்திரம்
151. மணிமேகலை 3:167-169
152. மேலது 3:126 – 131
153. மேலது 2:30-32
154. மதுரைக் காஞ்சி பாடல் எண் 365
155. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 370

156. மதுரைக்காஞ்சி பாடல் வரி 516-518
157. மேலது பாடல் வரி 723-724
158. நெடுநல்வடை பாடல்வரி 145-147
159. சிறுபாணாற்றுப்படை பாடல் எண் 70
160. நற்றிணை பாடல் எண் 225:5-7
161. நாலடியார் பாடல் எண் 397
162. பெருங்காதை பாடல் எண் 55:78-79
163. கம்பராமாயணம் பாடல் எண் 6:36:202
164. நாச்சியார் திருமொழி பாடல் வரி 21-23
165. மணிமேகலை 21:125-126
166. தமிழ்ப்பண்பாட்டு வரலாறு
167. பரிபாடல் பாடல் எண் 10:41-46
168. ஐங்குறுநூறு பாடல் எண் 124:2
169. அகநானூறு பாடல் எண் 320:12
170. நற்றிணை, பாடல் எண் 191:3
171. அகநானூறு பாடல் எண் 82:1-2
172. சிலம்பு 3: 45-46
173. தொல். எழுத்து. நூ. 33
174. திவாகரம் பக். 30
175. கருணாமிருத சாகரம் பக். 12
176. ஐங்குறுநூறு பாடல் எண் 408:1
177. மேலது பாடல் எண் 478:5
178. மேலது பாடல் எண் 311:1-3
179. கலி. குறிஞ்சி 5:1-4
180. கலி. குறிஞ்சி 6:28
181. மேலது 7:7-31
182. அபிதான சிந்தாமணி பக். 494
183. தொல். நூ.11
184. நற்றிணை பாடல் எண் 68:1-3
185. மேலது பாடல் எண். 90:6-7
186. குறுந்தொகை பாடல் எண் 401:3-4
187. ஐங்குறுநூறு பாடல் எண் 23:1-2

188. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 329-333
189. திருமுருகாற்றுப்படை பாடல் எண் 68
190. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 334-335
191. அகநானூறு பாடல் எண் 334:7-8
192. நற்றிணை பாடல் எண் 3:2-5
193. திருக்குறள் குறள் எண் 401
194. ஐங்குநுறூறு பாடல் எண் 1:8:74:4
195. புறநானூறு பாடல் எண் 243:1-3
196. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 272-273
197. ஐங்குறுநூறு பாடல் எண் 80:3-4
198. மேலது பாடல் எண் 412:1-4
199. மேலது பாடல் எண் 187:1-3
200. மேலது பாடல் எண் 181-2
201. மேலது பாடல் எண் 155: 4-5
202. மேலது பாடல் எண் 128: 2-3
203. மேலது பாடல் எண் 375
204. மேலது பாடல் எண் 377 : 4
205. மேலது பாடல் எண் 69 : 3-4
206. மேலது பாடல் எண் 124:3
207. அகநானூறு பாடல் எண் 320:12
208. நற்றிணை பாடல் எண் 191:3
209. ஐங்குறுநூறு பாடல் எண் 344
210. அகநானூறு பாடல் எண் 286:1-7
211. பட்டினப்பாலை பாடல் வரி 71-77
212. தொல். நூ. 635
213. புறநானூறு பாடல் எண் 2:1-6
214. திருவாசகம் பாடல் எண். 18
215. பரிபாடல் பாடல் எண் 2:5-12
216. புறநானூறு பாடல் எண். 30:1-5
217. பட்டினப்பாலை பாடல் வரி 66-68
218. புறநானூறு பாடல் எண் 388:1-2
219. பட்டினப்பாலை பாடல் வரி 1-2

220. நெடுநல்வாடை பாடல் வரி 19-20

221. புறநானூறு பாடல் எண் 117:1-2

222. ஆய்வுக் கோவை பாகம் 3 பக். 90

223. தொல். எழுத்து. உயிர் மயங்கியல் நூ. 241

224. தொல். நூ. 247

225. தொல். நூ. 248

226. தொல். நூ. 286

227. ஐங்குறுநூறு பாடல் எண் 469:2-4

228. அகநானூறு பாடல் எண் 84:2-3

229. சிலம்பு புகார் நாடு. காண். பா. வரி. 102,105

230. கம்ப. பாகம் ஒன்று பாடல் எண். 660

231. அற்றையனால் காதலும் வீரமும், பக். 103-104

232. முல்லைப்பாட்டு பாடல் எண் 55

## இயல் 2

# நிலங்களும் திணைகளும்

பாரதத்தின் தென் பகுதியில் அமைந்திருப்பது தமிழகம். இது பல்வேறுபட்ட புகழினைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது. இதனைச் சங்க இலக்கியங்களில் 'நாவலந்தன் பொழில்' என்று பெயரிட்டு அழைக்கப்பட்டது.

'இமிழ் கடல் வரைப்பில் தமிழகம்' என சிலம்பும்

'சம்பத் தீவு' என மணிமேகலையும் குறிப்பிடுகின்றது.

தமிழகம் தனித்து விடப்பட்ட தீவாக அல்லாமல் முந்நீர் நிலமாக அமைந்துள்ளது.

பண்டைய தமிழகத்தின் எல்லைகள் அவ்வப்போது மாறுபட்டு வந்திருக்கிறது. அதனைத் திட்டவட்டமாக அறிவதற்குரியது எனலாம். இருப்பினும் வடக்கே வேங்கட மலையும், தெற்கே குமரி ஆற்றையும், கிழக்கிலும், மேற்கிலும் கடற்பரப்புகளையும் எல்லையாகக் கொண்டிருந்ததை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றது. இதனை

**'வடவேங்கடம் தென்குமரி**
**ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகம்'1**

என்றும் பணம்பரணர் கூறுகிறார்.

**'தென்குமரி வடபெருங்கடல்2**
**குணகு டகடலா வெல்லை'3**

எனப் புறநானூற்றில் குறுங்கோழியூர் கிழாரும் மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனாரும் கூறியுள்ளனர்.

**'பண்டையத் தமிழகம் பாண்டி, தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூமி, பன்றி, அருவா, அருவா வடதலை, சீதம், மலாடு, புனல்நாடு என 13 பிரிவுகளாகப் பிளவுப்பட்டிருந்தது'.4**

**'தலைச் சங்க காலத்தில் தமிழகம் தென்கடலுக்கு அப்பாலும் தொலைதூரம் பரவி இருந்தது என்று கூறும் குறிப்புகள் சில பண்டைய தமிழ்**

**இலக்கியங்களில் காணப்படுகின்றன. அவ்வாறு பரவி இருந்த நிலப்பகுதிகள் மட்டும் 49 நாடுகளாக பிரிக்கப் பட்டிருந்தது'5** அவை ஏழ் தெங்கநாடு, ஏழ் மதுரை நாடு, ஏழ் முன் பாலை நாடு, ஏழ் பின் பாலை நாடு, ஏழ் குன்ற நாடு, ஏழ் குணகரைநாடு, ஏழ் குதும் பனை நாடு, என்ற பெயரில் வழக்கத்தில் இருந்தன. இவையாவும் சான்றோர்களின் கூற்றுகளிலிருந்து அறியப்படுகிறது.

> **'பழந்தமிழகம் மலையாள நாட்டில் மட்டுமன்றித் தென்கடற் பகுதியிலும் பரவியிருந்தது என்று காணலாம். இன்றைய வட இலங்கைப் பகுதி இன்று கடலால் தமிழகத்திலிருந்து பிரிக்கப்பட்டிருப்பினும், உண்மையில் முன்காலத்தில் (இராமாயண காலத்துக்கு முன்) தமிழகத்துடன் தொடர்ந்த ஒரு பகுதியேயாயிருத்தல் வேண்டும் என்று கூறலாம்'6**

## 2.1 அடிப்படை பொருளாதாரத்திற்கேற்ற சமூக தலைமை

தம்மையும் தம்மைச் சுற்றியுள்ள குழுவையும் ஒருங்கிணைத்துப் பாதுகாப்பதற்கு தங்களுக்குள்ளே இருக்கும் தன்னிகரற்ற ஒருவனை தலைவனாக்கித் தம்மைத் தாமே பாதுகாத்துக் கொண்டனர். இத்தகைய தலைவனையே பிற்காலத்தில் மன்னன் என அழைத்து அவனுக்குக் கீழ்ப்படிந்து வாழ தம் வாழ்க்கையினை அமைத்துக் கொண்டார்கள். இவ்வாறாகத் தான் ஒரு சமுதாயத் தலைமை உருவாகி இருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

இத்தகையத் தலைவன் - மன்னன் தம்மக்களை காக்கும் விதமே அரசாட்சி ஆகும். **'அரசு என்பது ஒரு குறிப்பிட்ட வளர்ச்சி கட்டத்தை எட்டிய சமுதாயத்தின் விளைபொருள்'7** என்றும்,

**'ஓர் இறைமையின் கீழ் வரையறுக்கப்பெற்ற புவியியல் பகுதியிலுள்ள மக்கள் சமூகத்தின் மேலாண்மையே அரசு'8** என்றும் சான்றோர் உரைக்கின்றனர். இத்தகைய அரசானது மக்கள் சமூகம் முழுவதற்குமோ அல்லது கட்டுப்பாட்டுக்குட்பட்ட ஒரு பகுதிக்கோ உரியதாகிறது. புறநானூற்றுப் பாடல் ஒன்று அரசு உருவாக்கத்தின் படி நிலையை அழகாக கூறுகின்றது.

**'தென்கடல் வளாகம் பொதுமை இன்றி**
**வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்**
**நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்9**

எனத் தனிப்பட்ட ஒருவரின் பெருகும் செல்வ வளத்தைக் கட்டுப்படுத்தவும், நிலத்தைக் கையகப்படுத்தவும், களவுகளைக் கட்டுப்படுத்தவும் ஒரு தலைவன் தேவைப்பட்டான். அவனே அரசன் எனப்பட்டான்.

இத்தகைய அரசு முறை உருவாக்கமானது பிறகு பாரம்பரிய முறையாக்கப்பட்டு தந்தைக்குப் பிறகு மகன் பட்டத்துக்கு வர வழி வகுத்தது. வழிவழியாகத் தொடரும் பாரம்பரிய முடியாச்சித் தாயம் எனப்பட்டது.

மூத்தோர் மூத்தோர் கூற்றமுய்த் தென்ப் பாறரவந்த பழவிறல் தாயம், உருகெழு தாயம் ஊழின் எய்தி என்ற வரிகள் இதனை உணர்த்தும்.

தாய் வயிற்று இருந்த தாயம் எய்தி என்ற வரியானது தாய் வயிற்றிலிருந்த போதே கரிகாலன் அரசு உரிமை பெற்றுவிட்டான் என்பதைக் கூறுகிறது.

இவ்வாறு துவங்கிய சமுதாய தலைமைதான் குடியரசுத் தலைவர், பிரதமர், மக்களவை உறுப்பினர், மாநில முதல்வர், ஆளுநர், சட்டசபை உறுப்பினர், மாமன்ற உறுப்பினர், ஒன்றிய உறுப்பினர், ஊராட்சித் தலைவர், ஊராட்சி உறுப்பினர் என விரிந்து பட்டு இருக்கிறது.

சங்ககால சமுதாய தலைமையின் வளர்ச்சி நிலையானது சிற்றூர் தலைவன், சிறூர் மன்னர், குறுநில மன்னர், முதுகுடி மன்னர், வேந்தர் என பரந்துபட்டு இருந்தது.

**‘நாடன் என்கோ ஊரன் என்கோ**

**பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்பன் என்கோர்10**

என்றப் பாடல் நாடன், ஊரன், சேர்ப்பன் என்பதன் முறையே, குறிஞ்சி, மருதம், நெய்தல் நிலத்தவர்கள் பெயர்கள் கூறும். இத்தகைய தலைமை அரசர்களை வழிநடத்த ஆட்சிமன்றக் குழுக்கள் இருந்தன என்பதைத்,

தாம்மோந் தோன்றிய நாற்பெருங் குழுவும் என்ற இப்பாடல் நாற்பெரும் குழு இருந்ததைக் கூறுகிறது. இக்குழுவில் புரோகிதர், தானைத் தலைவர், தூதுவர், ஒற்றர் இருந்தனர்.

பொலம் பூம் ஐவர் உட்பட என்பதன் மூலம் ஐம்பெரும் குழுவும் அரசியல் அமைப்பில் இருந்ததை அறியமுடிகிறது. மேலும் அமைச்சர்கள் குழுவும் இருந்தன. இவர்களைச் சுற்றம் என்றுச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகிறது.

### 2.1.1. சீறூர் மன்னர்

சிறிய ஊர்களுக்கு தலைவனாகப் பொறுப்பேற்று விளங்கியவர்கள் சீறூர் மன்னர் எனப்பட்டனர். இவர்களைப் பெரும்பாலும் தலைவன் எனும் சொற்றொடரிலே அழைக்கப்பட்டனர். இவர்கள் வேந்தர்களின் கட்டுப்பாட்டில் அவர்களின் படைகளை வழிநடத்திச் சென்றதைச்

**'சீறூர் மன்னன் நெருநை ஞாங்கர்**
**வேந்துவிடு தொழிலொடு சென்றனன்11**

என்றே புறநானூற்று வரிகள் புலப்படுத்துகிறது.

இவர்கள் சிறுகுடிகிழான், சீறூர் மதவலி, சீறூர் நெடுந்தொகை, சீறூர் வண்மையோன் என்ற சிறப்புப் பெயர்களால் அழைக்கப்பட்டதைப் புறநானூறு கொண்டு அறியமுடிகிறது.

சீறூர் மன்னர் வறியவர்களாக இருந்துள்ளனர். கடன்பட்டே விருந்தினர்களை உபசரித்திருக்கின்றனர். வரகு, தினை விளையும் புன்செய் நிலமே சீறூரின் வாழ்விடமாக இருந்திருக்கிறது.

### 2.1.2 குறுநில மன்னர்களும் அவர் தம் இயல்புகளும்

குறுநில மன்னர்கள் என்பவர்கள் மூவேந்தர்களின் கீழ்ப்படிந்து அரசாண்டவர்கள். **'குழு சமுதாயம் சிதையும் போது சீறூர் மன்னர் சிலர் தம் நாடுகளை விரிவுப்படுத்தினர். அவர்கள் சிறு நிலப்பரப்பில் வாழ்ந்த இனக்குழு தொகை மக்களின் குறுநில மன்னராயினர்'.12** இவர்கள் வேந்தர்களுக்குப் பல்வேறு நிலையிலும் துணை நின்றனர்.

**'மறமிகு சிறப்பிற் குறுநில மன்ன**
**ரவரும் பிறரும் துவன்றிப்**
**பொற்புவிளங்கு புகழவை நிற்புகழ்ந் தேத்த்**13

என்ற மதுரைக்காஞ்சி பாடல் தலையாளங்கானத்துக் செறுவென்ற பாண்டிய நெடுஞ்செழியனின் அவையில் அவன் அதிகாரத்திற்குட்பட்டக் குறுநில மன்னர்கள் இருந்ததைக் கூறுகிறது. மூவேந்தர்களின் கட்டுப்பாட்டின் கீழ் தமிழகத்தைப் பல குறுநில மன்னர்கள் பல்வேறு இடங்களை ஆட்சி செய்திருக்கின்றனர்.

**'சங்க இலக்கியத்தில் 112 குறுநில மன்னர்களும் 18 பழங்குடி மக்கள் இனமும் ஆதிக்கம் செலுத்தி வந்தனர்**14

மலைச் சார்ந்து வாழ்ந்தவர்கள் குறுநில மன்னர்கள் எனப் புறநானூறு குறிப்பிடுகின்றது.

1. பாண்டியநாட்டு பழனிமலையை ஆண்டவன் - பேகன்
2. பரம்பு மலையை ஆண்டவன் - பாரி
3. கோடை மலையை ஆண்டவன் - கடிய நெடுவேட்டுவன்
4. பொதிய மலையை ஆண்டவன் - ஆய் அண்டிரன்
5. சோழ நாட்டின் கொல்லிமலையை ஆண்டவன் - வல்வில் ஓரி
6. குதிரை மலையை ஆண்டவன் - அதியமான்
7. முதிர மலையை ஆண்டவன் - குமணன்
8. தோட்டி மலையை ஆண்டவன் - பெருநள்ளி

இச்சிற்றரசர்கள் பேரரசர்களை விடப் புகழ்பெற்று விளங்கி இருக்கிறார்கள். இவர்கள் அனைவரும் கொடையில் சிறந்த குறுநில மன்னர்கள். இவர்களோடு வேறு சிறந்த குறுநில மன்னர்கள் பெயரும் சங்க இலக்கியங்களில் காணப் படுகின்றன. இளங்கண்டிரக்கோ, இளவிச்சிக்கோ. ஈந்தூர்கிழான் தோயன் மாறன், ஏறைக்கோன், ஏனாதி திருக்குட்டுவன், காரி, கொண்கானற்கிழான், கௌணியன், விண்ணந்தாயன், சிறுகுடிகிழனன் பண்ணான், திரையன், கொண்டைமான் பொருட்டெழினி, நம்பி நெடுஞ்செழியன், நாலைக்கிழவன் நாகன், நாஞ்சில் வள்ளுவன், பாண்டியன் கிரஞ்சாத்தன், பிட்டங்கொற்றன், மல்லாரான் காரியாதி, மலையமான் சோழிய ஏனாதி திருமுடிக்காதி, மூகன், வட்டாற்று எழினியாதன், வில்லாற் ஆரன் பண்ணான் ஆகியோராவர்.

### 2.1.3. மூவேந்தர்கள்

வாழும் நிலத்தை அடையாளம் காட்ட நாடு என்றச் சொல்லைப் பயன்படுத்தினர். தமிழ்மொழி பேசுபவர்கள் வாழ்ந்த இடம் தமிழ்நாடு எனப் பெயர்பட்டது. தமிழகத்தைப் பல்வேறு காலங்களில் பல்வேறு ஆட்சியாளர்கள் ஆண்டு வந்திருந்தனர். ஆட்சி செய்பவரின் கீழ் உட்பட்ட நிலப்பரப்பின் அளவு, அவர்களின் வீரம், புகழ், கீர்த்தி, கொடை முதலியவற்றை அளவீட்டு கருவியாக கொண்டு ஆட்சி செய்தவரை வேந்தர், வேளிர், வள்ளல்கள் என அழைக்கப்பட்டதையும் பிறகு இவர்கள் அனைவரையும் ஒருங்கிணைத்து அரசர் என்று கூறியமையும் தெரியவருகிறது.

சங்க இலக்கியங்கள் தமிழகத்தை ஆட்சி செய்தவர்கள் மூவேந்தர்கள் என்கின்றனர்.

**'வண் புகழ் மூவர்**

**தண்பொழில் வரைப்ப்'**15

என்றும் இவர்களின் அடையாளமாக இவர்கள் அணிந்த மாலையை குறித்து

**'மோந்தை வேம்பே ஆரென உரூஉம்**

**மாபெருந் தானையர் மலைந் பூவும்'**16

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

வேந்தர் என்ற முதல்நிலையில் இருந்தவர்கள் சேரர், சோழர், பாண்டியர் ஆவர். இதனை

**'வில்லைத் துண்ணும் வல் ஆண் வாழ்க்கைத்**

**தமிழ் கெழு மூவர் காக்கும்'** 17

என்ற வரிகள் எடுத்துரைக்கிறது.

சங்க காலத்தில் இறைவனுக்கு நிகராக அரசன் கருதப்பட்டான் அரசனைக் கோ என்றழைத்தனர். அவன் வாழ்ந்த இல்லம் கோயில் (கோ+இல்) எனப்பட்டது.

**'அரசராய் இருப்பவர்க்குச் சில குணங்கள் தேவை. பிறர் சொல்வதை உடனே புரிந்து கொள்வது, அதை மனதில் நிறுத்திக் கொள்வது. எக்காலத்தும் அதை மறவாமல் இருப்பது. மற்றவர்களுக்கு அதை திறமையுடன் எடுத்துச் சொல்வது.**

**அதில் நுட்பமாகத் தன் யோசனையைச் சேர்ப்பது. பிறர்க் கூறும் வார்த்தைகளுக்குத் தக்க மறுமொழி கூறுவது. மற்றவர்க் கூற்றின் இரகசியங்கள் அறிவது. அதில் பொதிந்துள்ள மூலக்கருத்து யாது என்று ஆராய்ந்து அறிவது. இந்த எட்டும் அறிஞனுக்குரிய எட்டு குணங்கள் - அரசை ஆள தகுந்தவர்களுக்குத் தேவையானவை. அத்துடன் தேகபலம், தைரியம், உபாயம், சுற்றத்தார் பலம் என்ற நான்கு வகையான பலமும் தேவை**[18] என்கிறது வால்மீகி இராமாயணம். இந்த தகுதிகள் அனைத்தும் மூவேந்தர்கள் பெற்றிருந்தனர் எனத் தெரியவருகிறது.

### 2.1.3.1 சேரர்

மூவேந்தர்கள் ஆண்டதாகத் தொல்காப்பியர் பாடல் மூலம் அறிய முடிந்தாலும், சேரர் வரலாற்றை அறிந்துகொள்ள போதுமானச் சான்றுகள் சங்க இலக்கியத்தில் இல்லையெனலாம். சங்க இலக்கியமான எட்டுத்தொகை நூல் கொண்டும் அதிலும் பதிற்றுப்பத்து பாடல் மூலமாக சேரர்களின் உறவு முறைகளையும் அவர்கள் ஆட்சி செய்த கால அளவினையும் அறியலாம்.

'சேர வேந்தர்கள் குடவர், சேரர், குட்டுவர், கேரளர், ஆதர், உதியர், வாணவர், பூமியர், பொறையர், என்ற பெயரில் அழைக்கப்பட்டமையும் தெரிகிறது. தமிழகத்தின் மேற்கு தொடர்ச்சி மலைப் பகுதியை இவர்கள் ஆண்டதற்கானக் குறிப்புகள் காணப்படுகின்றன. இன்றைய கேரளம் சேரநாடு என்கிறது. சேரமரபில் இருகொடி வழிகள் இருந்தன. அவ்வழியினர் ஒருவர் வஞ்சியிலும் மற்றவர் தொண்டியிலும் உறைந்து. பெரும்பாலும் ஒரே காலத்தில் ஒருங்கே அரசு செலுத்தினர். ஒரே கிளையைச் சேர்ந்த உறுப்பினருக்குத் தலைமைக் கொடி வழியினரோடு உள்ள திட்டமான இனமுறையை எவ்வாற்றானும் உறுதிப்படுத்த இயலாது. மன்னர் ஒவ்வொருவரது தலைநகரமும் திட்டமாகக் காண்பிக்கப் படவில்லை. மேலும், புறநானூற்றில் வேறு சில சேர மன்னரும் கூறப் பெற்றுள்ளனர். அவருக்கும் பதிற்றுப்பத்தில் கூறப் பெற்றவர்க்கும் உள்ள இனமுறை யாது? அதை அறிந்து கொள்ள வழியைக் காணோம்.

பதிற்றுப் பத்தில் விரித்துரைக்கப்பெற்ற மன்னர் எண்மரில் தலைசிறந்து விளங்கியவர் சேரன் செங்குட்டுவனாரே. மாபெரும் புலவர் பரணர் ஐந்தாம் பத்தில் இம்மன்னரைப் புகழ்ந்து பாடியுள்ளார். சிலப்பதிகாரம் அவருடைய அரும்பெருஞ்

செயல்கள் பலவற்றை எதிரொலிக்கின்றது. செங்குட்டுவர் வடக்கே இமயம் வரை படைக்கோலங் கொண்டு சென்றது. வேளிர் தலைவன் நன்னனைத் தோற்கடித்து, நேரிவாயிலில் சோழர் ஒண்பதின்மரைச் சிதறடித்தது. கொங்கரை வெற்றிக் கொண்டது முதலான அரிய செயல்கள் அனைத்தும் அக்காப்பியத்துள் காணலாம். செங்குட்டுவர் கடவுட்பற்று மிக்கவர். மறைவேள்விகள் நடத்தினார். சிவனையும் விஷ்ணுவையும் வழிபட்டார். சிலப்பதிகாரத்திலும் பதிற்றுப்பத்திலும் கண்ட குறிப்புகளின்படி, **'செங்குட்டுவர் கரிகாற்சோழ மன்னரது பெண்வழிப் பெயரன் மகன் என்று சிலர் கருதுகின்றனர்'.19**

மிகப் பழமையான வரலாற்றை உடையவர்கள் சேர மன்னர்கள். சேர, சோழ, பாண்டியர் என்ற சொற்றொடரில் சேரனை முதன்மைப் படுத்தியதிலிருந்து அறியலாம்.

சேர மன்னர்களில் இமயவரம்பன் உதயன் சேரலாதன், நெடுஞ்சேரலாதன், பொறையன், சேரன் செங்குட்டுவன் முக்கியமானவர்கள்.

### 2.1.3.1.1. இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன்

உதியஞ்சேரலின் மூத்த மகன், இமயம் வரை போர்த் தொடுத்து சென்று வடவாரியரை வென்று இமயத்தில் வில்பொறி பொறித்தவன் என்பதை

**'வலம்படு முரசிற் சேர லாதன்**
**முந்நீர் ஓட்டிக் கடம்பு அறுத்து, இமயத்து**
**முன்னோர் மருள வணங்குவில் பொறித்து'20**

என்ற பாடல் கூறும்.

நன்னகர் மாந்தை முற்றத்து பகைவர் கொணர்ந்து நிறை குவிக்கவும் வாழ்ந்தவன் இவன் என மாமூலனார் குறிப்பிடுகின்றார்.

### 2.1.3.1.2 சேரமான் உதயஞ்சேரலாதன்

நிறைந்த பெரும் படையினை உடையவன் சேரலாதன். அவன் பெரிதான கடலிடத்துப் பகைவரை ஓட்டினான். அவனது காவல் மரமாகிய கடம்பினை வெட்டி, அதனால் பண்ணுதல் அமைந்த வெற்றி முரசினையும் செய்வித்துக் கொண்டதை

**‘சால்பெருந் தானைச் சேர லாதன்**
**மால்கடல் ஓட்டி, கடம்பு அறுத்து, இயற்றிய**
**பண்அமை முரசின் கண் அதிர்ந் தன்ன்21**

என்ற பாடல் கூறுகின்றது.

குழுமூரில் பெருஞ்சோற்றுக் கொடையாகிய கடமையை மேற்கொண்டான். ஈகையினின்றும் கோணுதல் இல்லாத உள்ளத்தின்னனாகிய சேரமான் உதயஞ் சேரலாதன் என்பதை

**‘நல்ஆன் பரப்பின் குழுமூர் ஆங்கண்**
**கொடைக்கடன் ஏன்ற கோடா நெஞ்சின்**
**உதியன்’22**

என்ற பாடல் வரிகள் பறைச்சாற்றுகிறது.

**‘பொருது புண் நாணிய சேரலாதன்23**

எனச் பெருஞ்சேரலாதன் கரிகாற் பெருவளத்தானுடன் நடந்த வெண்ணிப் போரில் புறப்புண் கட்டதனால் அப்போர் களத்திலேயே வாளோடு வடக்கிருந்து உயிர் துறந்ததைக் கூறுகிறது.

இச்செய்தியை

**‘தன்போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த**
**புறப்புண் நாணி மறத்தகை மன்னன்**
**வாள் வடக்கு இந்தனன் ஈங்கு**
**நாள்போல் கழியல ஞாயிற்றுப் பகலே்24**

என்று புறநானூறும் தெரிவிக்கின்றது.

### 2.1.3.1.3 குட்டுவன்

மேலைக் கடற்கரையைச் சார்ந்த மாந்தைப் பட்டினத்தை தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த சேர மரபினன்.

**'...யானையங் குருகின் கானல்அம் பெருந்தோடு**
**அட்ட மள்ளர் ஆர்ப்பு இசை வெரூஉம்**
**குட்டுவன் மாந்தை'25**

என கொல்லிக் கண்ணனார் இவனைக் குறிப்பிடுகின்றார்.

**'மட்டு அவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்**
**பொருமுரண் பெறா அது விலங்குசின் சிறந்து**
**செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி**
**ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஒட்டிய'26**

என்ற பாடல் சேரன் செங்குட்டுவன் கடலைப் பின்னிட்டு ஓடச் செய்கின்ற அளவிற்கு வலிமைப் படைத்தவனாய் இருந்ததைக் குறிப்பிடுகின்றது.

**'.... வடவரை வணங்குவில் பொறித்து**
**வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்**
**வஞ்சி அன்ன, என் நலம் தந்து சென்மே'27**

என்ற வரிகள் வெகுண்டு எழுந்து ஆரிய அரசர்கள் அலறுமாறு சென்று அவர்களைத் தாக்கி அழித்து பெரும்புகழைத் தொன்மையாகி முதிர்ந்த வடக்கின் கண் உள்ள மலையினிடத்தே வளைந்த விற்பொறியினைப் பதித்துக் கொடிய சினம் பொருந்திய ஆரிய வேந்தரைப் பிணித்தும் வந்தவன் சேர மன்னன் என்று கூறுகின்றது.

ஆனால் அந்த சேரமன்னன் செங்குட்டுவன் என்பதைத் தெளிந்து ஆராய்தல் வேண்டும் என்கின்றனர் தமிழ்ச் சான்றோர்.

**'.... செங்கோற்**
**குட்டுவன் றொண்டி யன்ன'28**

இப்பாடல் தொண்டி நகரைச் செங்குட்டுவன் ஆட்சி செய்ததைக் குறிக்கிறது.

### 2.1.3.1.4 சேரமான் இரும்பொறையன்

சேரமான் இரும்பொறை செங்கண்ணன் என்ற சோழ மன்னனிடம் போரிட்டு தோற்று சிறையில் வாடிய போது தாகத்தால் அவதியுற்றான். அவன் சிறைக் காப்பாளனைக் கொஞ்சம் பருக நீர் தரும்படி வேண்டினான். காப்பாளனோ

காலந்தாழ்த்தி நீர்க் கொண்டு வந்தான். கேட்டதும் கிடைக்காமல் காலந்தாழ்த்தி கிடைக்கப்பட்ட நீரை அருந்தி உயிர்வாழ அம்மன்னனுக்கு ஒப்பவில்லை.

'மானம் அழிந்த பின் வாழாமை முன் இனிது' என்றெண்ணி அவன் உயிர் துறக்க எண்ணினான். அதற்கு முன் அழகிய கவி ஒன்றையும் பாடி உயிர்விட்டதாக வரலாற்று ஆய்வாளர்கள் கூறுகின்றார்கள்.

### 2.1.3.2. சோழர்

சோழர்கள் தமிழகத்தின் கிழக்கு கடற்கரை பகுதியை ஆட்சி செய்துள்ளனர்.

**'செங்கதிர் செல்வன் திருக்குலம் விளங்கும்**
**கஞ்ச வேட்கையிற் காந்தமண் வேண்'29**

என்ற மணிமேகலைப் பாடல் சோழர்கள் ஞாயிறு குலத்தினர் என்று கூறுகிறது. சோழ மன்னர்கள் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டதைச் சங்க நூல்கள் எடுத்துரைக்கின்றது. அவை அபயன், ஆரியன், கிள்ளி, கோழி வேந்தன், செம்பியன், சென்னி, சூரியன், புனல் நாடன், புலியுயர்த்தோன், பொன்னிறத் துறைவோன், வளவன், நேரியன், நேரி வெற்பன், மாலையன், பொன்னி நாடன், மால் ஆகும்.

சோழர்கள் காவிரிக்கரையில் அமைந்துள்ள உறையூரை ஆட்சி செய்தமையும் அவர்களிடம் கைவன்மையினையுடைய, போர் யானைகளும், வேகமாக செல்லும் தேர்களும் இருந்ததை

**'கைவல் யானைக் கடுந்தேர்ச் சோழர்**
**காவிரி படப்பை உறந்தை அன்ன'30**

என்று குடவாயிற் கீரத்தனார் குறிப்பிடுகின்றார்.

சோழர்களில் வில் வீரர்களால் ஆரியப்படை அழிந்ததையும் ஆரியர் படைகள் வல்லத்து களத்திலே சோழர்க்கு ஆற்றாது சிதறுண்டு ஓடியதை

**'மாரி அம்பின் மழைத்தோற் சோழர்**
**வில் ஈண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை**
**ஆரியர் படையின் உடைக'31**

என்று இப்பாடல் குறிப்பிடுகின்றது.

தமிழகத்தை வளமிக்கதாகச் செய்த பெருமை சோழ மன்னனையே சாரும். சங்ககாலச் சோழ வேந்தர்கள் பெரும் பேரும், பெயரும் பெற்றிருந்ததை வரலாற்று ஆய்வுகள் தெரியப்படுத்துகின்றன.

சங்க இலக்கியங்களில் காணப்படும் சோழ மன்னர்கள். சோழன் நலங்கிள்ளி, இரசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, சோழன் வேம்பல் தடக்கை பெருவிறற்கிள்ளி, நெடுங்கிள்ளி, சோழன் குறாபள்ளித் துஞ்சிய கிள்ளி வளவன், சோழன் போர்வை கோப்பெருநற்கிள்ளி, பெருங்கோப்பெண்டு, சோழன் குளமுற்றத்துஞ்சிய நன்மாறன், சோழன் குறாப்பள்ளித் துஞ்சிய நன்மாறன், சோழன் கரிகால் பெருவளத்தான், சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி, சோழன் முடித்தலை கோப்பெரு நற்கிள்ளி, உருவட்பக்ரோ இளஞ்சேட் சென்னி, ஆகியோர் ஆவர்.

மேலும் கோப்பெருஞ்சோழன் மத்தி பொல்ம்பூண் கிள்ளி, கடுமான் கிள்ளி, இளம்பெருஞ்சென்னி, தித்தன் ஆகியோர் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன.

### 2.1.3.2.1. இளம்பெருஞ்சென்னி

செம்பினை ஒத்த வலிய மதிலையுடைய பாழிப்பேரூரினை அழித்தவன். தன் வீரத்தால் தன் குடிமக்களுக்குச் செய்ய வேண்டியதைச் செய்து தந்தவன். விளங்கு புகழினை உலகிலே நிலை நிறுத்தியவன். சோழன் இளம்பெருஞ்சென்னி ஆவான். இத்தகவலை

**‘…… சோழர் பெருமகன்**
**விளங்கு புகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி**
**குடிக்கடன் ஆகலின், குறைவினை முடிமார்**
**செம்பு உறழ் புரிசைப் பாழி நூறி,**
**வம்ப வடுகர் பைந்தலை கூட்டி’32**

என்ற பாடல் கூறுகிறது.

### 2.1.3.2.2. கடுமான்கிள்ளி

சோழற்குல வேந்தன். இவன் வேற்போரிலே ஆற்றல் மிக்கவன். அதனால் கதிரிலை நெடுவேல் கிள்ளி என்றுப் போற்றப்பட்டவன். பகைவர் கோட்டைகள் பலவற்றைக் கைப்பற்றியவன். வலிமையான யானைப்படை உடையவன் என்பதை

**‘கதிரிலை நெடுவேற் கடுமுான் கிள்ளி**

**மதில்கொல் யானையிற் கதழ்புநெறி வந்த்33**

என்ற ஐங்குறுநூறு எடுத்துரைக்கின்றது.

### 2.1.3.2.3 கோப்பெருஞ்சோழன்

கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் என்னும் தமிழ்ப்புலவரை உயிர்நண்பராகக் கொண்டவன். அம்மன்னன் உலக வாழ்வைத் துறந்து உண்ணா நோன்பை மேற்கொண்ட போது பிசிராந்தையாரும் வந்தே தீருவார் என்று காத்திருந்து உயிர் துறந்தவன். ஒரு வறிய புலவனை உற்ற நண்பனாகக் கருதி வாழ்ந்த கோப்பெருஞ் சோழனின் மாண்பு மகத்தானது.

### 2.1.3.2.4 தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியன்

மிக்க புகழொடு விளங்கியவன். இவனுடைய தலையாலங்கானத்து பெரு வெற்றியினை

**‘கால் இயல் நெடுந்தேர்க் கைவண் செழியன்**

**ஆலங் கானத்து அமர்கடந்து உயர்த்த**

**வேலினும் பல்ஊழ் மின்னி’ 34**

என்று ஆலம்பேரி சாத்தனாரும்

**‘பொன்அணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்**

**எழுஉறழ் திணிதோன் இயல்தேர்ச் செழியன்**

**நேரா எழுவர் அடிப்படக் கடந்த**

**ஆலங் கானத்து ஆர்ப்பினும் பெரிது’35**

என்று கல்லாடனாரும் புகழ்ந்துள்ளார்.

மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை ஆகிய பத்துப்பாட்டு நூல்களுக்குப் பாட்டுடைத் தலைவன் இவன். மாங்குடி மருதனார் இவனாற் பெரிதும் மதிக்கப் பெற்றவர். இடைக் குன்றூர்க்கிழார், கல்லாடனார், குறுங்கோழியூர்க் கிழார், குடபுலவியனார் முதலிய பலராற் பாராட்டப் பெற்றவன் இவன்.

### 2.1.3.2.5 தித்தன்

உறந்தைப் பகுதியிலிருந்து அரசு இயற்றிய சோழனில் இவனும் ஒருவனாவன். தித்தன் எனவும், தித்தன் வெளியன் எனவும் இவன் பெயர் வழங்கும். **'நொச்சிவேலித் தித்தன் உறந்தை36** என இவனூரையும், இவனோடு **'பொருதுதற்கு வலிமிகு முன்பிற் பாணனோடும் வந்து கட்டி யென்பான் அஞ்சி ஓடிய'37** செய்தியையும், இவனுக்குரிய பெருந்துறையின் வளத்தினை

**'இரங்குநீர்ப் பரப்பின்கானல் அம் பெருந்துறை38**

என்ற அகநானூறு பாடலில் பரணர் குறிப்பிட்டுள்ளார்.

அரிய காவற்காடுகளைத் தன் ஊரைச் சுற்றி அமைத்திருந்தவன். இவன் மகன் சோழன் போர்வை கோப் பெருனற்கிள்ளி

**'….. வெல்வோர்ப்**
**போர் அருந் தித்தன்'39**

என்று புறநானூறு கூறுகிறது.

### 2.1.3.2.6 பொலம்பூண் கிள்ளி

சோழ மன்னர்களுள் ஒருவன். இவன் கோசர்களின் ஆற்றல் மிகுந்த பெரும்படையினை அழித்து அவர்களுடைய நாட்டைக் கவர்ந்து கொண்டவன். இவனுடைய கோநகர் காவிரி பூம்பட்டினம் ஆகும். இவன் நலங்கிள்ளி எனக் கூறுவர் உண்டு. நிலைப்பெற்ற புகழை உடையவன். சொன்ன சொல் தவறாதவன். **'நிலங்கொள வெ.ஃ.கிய பொலம்பூண்கிள்ளி40** என்று புகழப்பட்டவன்.

### 2.1.3.2.7 கரிகாற் சோழன்

**'சோழர்களில் கரிகாலர் ஒப்புயர்வற்றப் பேரரசர் அவர் சேர பாண்டிய பேரரசர் மீது பெருவெற்றி கொண்டார். அரசர் ஒன்பதின்மர் ஒருங்கு சூழ்ந்து எழுந்து வந்த வெண்ணிப் பறந்தலைப் போரில் அனைவரையும் முறியடித்தார். அவர் தம் வீரச் செயல்கள் புறநானூற்றிலும், பொருநராற்றுப் படையிலும், பட்டினப் பாலையிலும், மேற்கூறியச் சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இரு பெருங் காப்பியங்களிலும் சிறப்பாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. கரிகாலர் உழவுத் தொழிலைப் பெருக்கினார். வாணிகத்தை வளர்த்தார். கைத்தொழிலைப்**

**போற்றினார். காவிரிப் பூம்பட்டினத்தைச் சிறப்பித்தார். இவை எல்லாம் பட்டினப் பாலையில் பாடப் பெற்றன. கலிங்கத்துப் பரணியிலும் விக்கிரமச் சோழன் உலாவிலும் புனைந்துரைக்கப்பெற்ற அவர்தம் புதுமைச் செயல்கள் உள்ளதும் இல்லதும் கலந்தக் கட்டுக்கதையே போல் தோன்றினும், அவர் நிலவுலகில் வாழ்ந்த நிகரற்ற பெருமன்னர் என்னும் உண்மையைச் சங்க நூல்கள் சாற்றுகின்றன.'**41

இவன் வகைப்பறந்தலைப் போரில் ஒன்பது மன்னர்களைப் புறங்காட்டி ஓடச் செய்தமையை

**'ஒன்பது குடையும் நண்பகல் ஒழித்த**
**பீடு இல் மன்னர் போல்'**42

என்று அகநானூறும்

**'ஒன்பது குடையும் ஒருபகல் ஒழித்தவன் பொன்**
**புனை திகிரியொடு ஒருவழிப் பருத் தோய்'**43

என்று சிலம்பும் சொல்கிறது.

பழையன் மாறன் என்பவனை பெரும்படையுடன் வேற்று புலத்தே போரிடக் கருதி வந்து தங்கி இருந்த கிள்ளி வளவன் மாறனின் நல்லக் குதிரைகளையும், யானைகளையும் கைப்பற்றிக் கொண்டு, ஊரினையும் கைப்பற்றியதை

**'வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுத்த**
**கிள்ளி வளவன் நல் அமர் சாஅய்**
**கடும்பரிப் புரவியொடு களிறுபல லவ்வி**
**ஏதில் மன்னர் ஊர்கொள'**44

என்ற பாடல் குறிப்பிடுகின்றது.

### 2.1.3.3. பாண்டியர்

தொன்மையான வரலாற்றைக் கொண்டவர்கள் பாண்டியர்கள். தென் தமிழகத்தை பல காலமாக ஆட்சி செய்திருக்கின்றனர். சங்கம் அமைத்து தமிழ் வளர்த்த பெருமைக்குரியவர்கள்.

செழியன், கடற்கோமான், மீனவன், வழுதி, தென்னவன், மாறன் என்ற சிறப்பு பெயர்களுடன் வாழ்ந்திருக்கின்றனர். பாண்டிய மன்னர் வீரத்திலும் கொடையிலும் சிறந்து இருந்ததையும், முழந்தாழினைப் பொருந்துமாறு, நீண்ட பெருங்கைகளைக் கொண்டிருந்ததையும் ஒரு சங்கப் பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

**'ஓடுபுறம் கண்ட, தாள்தோய் தடக்கை**
**வெல்போர் வழுதி செல்சமத்து உயர்த்த**
**அடுபுகழ் எ.்.கம் போல்'45**

பாண்டியனதுக் கூடல்நகர் பெரிய புகழைப் பெற்றிருந்திருக்கின்றது. இதனை

**'பெரும்பெயர் வழுதி கூடல்'46**

என்ற அடியினால் அறியலாம்.

**சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் பாண்டியர்கள்.**

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய நன்மாறன், இளவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன், பாண்டியன் காணப்பேர் தந்த உக்கிரபெருவழுதி, உருவப்பல் தேர் இளஞ்சேட் சென்னி, பாண்டியன் தலையாலங்கானத்து செறுவென்ற நெடுஞ்செழியன், பாண்டியன் கருங்கை ஓள்வாள் பெருவழுதி, பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, பாண்டியன் உக்கிரப் பெருவழுதி, பாண்டியன் நெடுஞ்செழியன், பாண்டியன் காணப் பேரெயில் கடந்த உக்கிர பெருவழுதி, பாண்டியன் அறிவுடை நம்பி.

### 2.1.3.3.1 தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியன்

**'சங்க செய்யுளில் இருபதின்மருக்கு மேலாக பாண்டிய மன்னர்கள் காட்சி அளிக்கின்றனர். அவருள் பாண்டியர் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியர் ஒருவர். அச்செருவில், அக்காலத்தே வாழ்ந்திருந்த சேர, சோழ மன்னரும், குறுநில மன்னர் ஐவரும் ஒருங்கு சேர்ந்து, அவரை எதிர்த்தனர் என மதுரைக்காஞ்சி கூறுகின்றது. அவர்மீது பாடப்பெற்று அந்நூல், அவரது பெருமையை அழகுபட உரைக்கின்றது. புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை முதலான நூல்களில் பலச் செய்யுள்கள் அவர் புகழைப் பகர்கின்றன. அவர் பெரும் போர் வீரராயிருந்ததோடு சிறந்த அறிஞராகவும் திகழ்ந்தார்.**

**புலவர்களை ஆதரித்தார். இந்துச் சமயப்பற்று மிக்கவர். மறைவேள்வி இயற்றினார்'47**

### 2.1.3.3.2 உக்கிரப் பெருவழுதி

**'நெடுஞ்செழியனுக்கும் பின் வந்தவர்களில் உக்கிரப் பெருவழுதி சிறந்த போர்வீரர். காணப்பேரையாண்ட குறுநில மன்னனை அடக்கியவர். புகழப்பெற்ற கவிஞர். அகநானூறு பாடல்களைத் தொகுத்தவர் இவரே எனக் கூறுவர். 48**

### 2.1.3.3.3 பூதப்பாண்டியர்

**'இவரும் கவிஞரே. அவர் ஒல்லையூரைக் கைப்பற்றியத் திறன் மிக்கப் போர்வீரர். உற்றுழி உதவும் நண்பர். அன்பு நிரம்பியக் கணவர். எவ்வகையிலும் அறிவொளிச் சிறந்த பேரரசர்'49**

### 2.1.3.3.4 முதுக்குடுமி பெருவழுதி

போர்க்காலத்தில் பசுக்களையும், பறவோர்களையும் பிணியார்களையும், பெண்களையும், குழந்தைகளையும் போர் நடக்கும் இடம் விட்டு புறநகருக்குப் போய்விடும்படி எச்சரிக்கைச் செய்த பிறகே போர் நிகழும். அத்தகைய அறப்போர் முறையில் தலைச்சிறந்து விளங்கியவன் முதுகுடுமி பெருவழுதி.

### 2.1.3.3.5 பசும்பூட் பாண்டியன்

நாடெல்லாம் மிகுதியாகப் புகழ்ந்துக் கூறுகின்ற வீரஞ்சென்ற தானேயுடைய அரசர்கள் மிகச் சிலரே. அவர்களில் அறத்தினையே வழுவாது மேற்கொண்ட செங்கோன்மையினை உடையவர் பாண்டியர். அவர்களில் பகைவருடன் நிகழ்த்திய போரின் கண்ணே தருக்கன்மையை அழித்து அதனால் பூரித்தத் திண்மையான தோள்களை உடையவன். பலரும் புகழ்ந்துப் போற்றும் திருவினை உடையோன் பசும்பூட்பாண்டியன். அவன் தெய்வம் உறையும் பொதிய மலைக்கு உரியவன் என்பதை

**'குன்று ஓங்கு வைப்பின் நாடுமீக் கூறும்**
**மறம்கெழு தானை அரச ருள்ளும்**
**அறம்கடைப் பிடித்த செங்கோ லுடன், அமர்**
**மறம் சாய்த்து எழுந்த வலன்உயர் திணிதோள்**

**பலர்புகழ் திருவின் பசும்பூட் பாண்டியன்**

**அணங்குடை உயர்நிலைப் பொருப்பின் கவாஅன்**50

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

**‘செல்சமம் கடந்த செல்லா நல்இசை**

**விசும்பு இவர் வெண்குடை, பசும்பூட்பாண்டியன்**51

என்ற பாடல் போரிலுவாரது எதிர்த்தப் போரினை வெற்றியுடன் முடித்தக் கெடாத நல்லப் புகழினையும் வானிடத்தேயும் அலாவுமாறு உயர்ந்த வெண்குற்ற குடையினையும் உடையவன் பசும்பூட் பாண்டியன் எனக் குறிப்பிடுகின்றது.

இவன் யானை மீது எடுத்து வந்த வெற்றிக் கொடியினை வெற்பிற் பொலிவுற்றதை

**‘வில்கெழு தானைப் பசும்பூண் பாண்டியன்**

**களிறுஅணி வெல்கொடி கடுப்ப காண்வர்**52

என்ற பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றது.

## 2.2. அரசியலும் அரசாட்சியும்

இந்தியப் பெருநிலப்பரப்பில் தமிழ் வழங்கும் தனிப்பகுதி தமிழகம் என்று அழைக்கப்பட்டு வருகிறது. சாதவாகன் தக்காணத்தை ஆண்ட காலத்தில் தென்கோடி பகுதியில் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் அரசாட்சிப் புரிந்ததை குறித்து மகாபாரதத்திலும் கூறப்பெற்றிருப்பது இதன் பழமையை எடுத்துக் காட்டுகிறது. முதன் முதலாகக் கண்டுபிடிக்கப்பட்ட அசோகரது கல்வெட்டுகளிலும் தெற்கிலுள்ள இந்த மூன்று அரசர்களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**‘இம்மூன்று அரசர்களும் மௌரிய அரசுக்கு அண்மையில் தன்னுரிமைப் பெற்றுள்ள மன்னர்கள் எனக் குறிக்கப்பட்டுள்ளது. மௌரிய அரசுக்குப் பக்கத்தில் சத்தியப் புத்திரன் தன்னாட்சிச் செலுத்தி உள்ளார். அவர் சங்க நூல்களில் குறிக்கப்பட்டுள்ள கொங்கராகவோ அல்லது கோசராகவோ இருக்கலாம்’**53 என்பர்.

**‘வேங்கடம் என்னும் திருப்பதி தமிழகத்திற்கு, அதாவது தமிழ்நாட்டு அரசுகளுக்கு வட எல்லையாக அமைந்தது. மேற்கிலும் கிழக்கிலும்**

**கடலை எல்லையாகக் கொண்ட தமிழகத்தில் இக்காலக் கேரள நாடும் மைசூர் சமஸ்தானத்தின் தென் பகுதியும் உட்பட்டிருந்தன. கீழ்கரையிலுள்ள பழவேற்காடு முதல் மதுரை வரையுள்ள நிலப்பகுதி சோழர்களுக்கு உரியதாயிற்று மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களும், நாஞ்சில் நாட்டின் ஒரு பகுதியும், பாண்டியர் ஆட்சியில் அடங்கின. மேல் கரையிலுள்ள கோகர்ணம் முதல் கன்னியாகுமரி வரை சேர அரசு ஆகியது. இம்மூன்று அரசுகளுக்கும் அண்மையிலுள்ள பகுதிகளை ஆய், கோசர் முதலான குறுநில மன்னர் ஆண்டு வந்தனர்'54**

நாட்டையும் நாட்டின் மக்களையும் காக்கும் மன்னன் காவலன் எனப்பட்டான். அவன் நீதி வழங்கிய இடம் அரண்மனை எனப்பட்டது. அதுவே அவனின் இல்லமும் ஆகும். மன்னனைக் கடவுளாக நினைத்த காலம். எனவே அவனுடைய இல்லத்தையும் கோயில் (கோ – மன்னர், இல் - வீடு) என்றே கூறினர்.

வைகறைப் பொழுதினில் பள்ளி எழுச்சி முரசு ஒலிக்கச் சூதர்கள் அரசினை வாழ்த்தி பாட மாகதர் அவனின் புகழுரைக்க வைதாளிகர்கள் இசைக்க நாழிகர் கணக்கர் நேரம் பார்த்துக் கூற மன்னன் துயில் எழுவான் - இதனை

**'சூதர் வாழ்த்த மாகதர் நுவல**
**வேதா ளிகரொடு நாழிகை இசைப்ப**
**இமிழ்முர சிரங்க ஏறுமாறு சிலைப்ப'55**

என மதுரைக் காஞ்சி குறிப்பிடுகின்றது.

அரசின் மெய்க்காப்பாளன் பெருமூதாளர் எனப்பட்டனர். இவர்கள் மேல்சட்டை அணிந்திருந்தனர் என்பதை

**'துகின்முடித்துப் போர்த்த தூங்க லோங்குநடைப்**
**பெருமூ தாள ரேமஞ் சூழப்'56**

என்ற முல்லைப்பாட்டால் அறியலாம். அரசனுக்கு உதவ பணிப் பெண்களும் இருந்தனர்.

### 2.2.1 பாதுகாப்பு

ஆட்சிப் பொறுப்பேற்றால் நாட்டில் துயரம் நிகழாதவாறு காத்தல் வேண்டும். அவரே நாட்டை கலக்கமுறச் செய்தனர் என்றால் நாடு பாழ்படுதலின்றி வேறு ஒன்றும் இல்லை என்பதை

**'ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோல்57**

என்றும், காக்கும் கடமைக் கொண்ட மன்னன் அந்தப் பொறுப்பில் இருந்து தான் மாறுபட்டவனாயின் நாடு என்னவாகும். மேலும் பண்பட்ட ஒருவனின் சொல்லுக்கிணங்கி தீமையும் விளைவித்து வந்தால் மக்கள் எவ்வளவு துயர் அடைவர் என்பதை

**'நடுவு இகந்து ஒரிஇ நயன் இல்ல வினைவளங்க**
**கொடிது ஓர்த்த மன்னவன் கோல் போல்58**

என கலித்தொகை குறிப்பிடுகின்றது.

நாட்டின் குடிமக்கள் அனைவரும் துயரத்தால் அல்லலுற்றது கதற கொஞ்சமும் முறைமையின்றி அவர்கள் தேடி வைத்த பொருள்களைக் கவர்ந்த அரசு என்பதொன்று இருந்தால், அந்த நாடுதான் எவ்வாறு இருக்கும். கொலைக்கும் அஞ்சாதத் தீயாரால் செங்கோல் முறைமைத் தீரிய அரசு செலுத்தும் அந்த அரசனின் ஆட்சியிலே மக்களின் வாழ்வு ஒரு வாழ்வா இருக்குமா. அத்தகையக் கொடிய ஆட்சி நடந்தால், வாழ்வும், வளமும் கெட்டு அழிந்துவிடும் என்பதை

**அலவுற்றுக் குடிகூவ ஆறஇன்றிப் பொருள் வெ.்.கி**
**கொலை அஞ்சா வினைவரால், கோல்கொடியவன் நிழல் உலக்59**

என்று கலித்தொகை உரைக்கிறது.

மன்னர்கள் தம் அரண்மனையைக் காப்பாற்றிக் கொள்ளவும் ஊர்புறத்தும் பலப்பல பாதுகாப்பு அம்சங்களையும் செய்திருந்தனர். தலைநகரைக் காக்கும் பொருட்டு மதில் அரண், நிலவரண், நீரரண், காட்டரண், மலையரண் என்ற ஐந்து வகை அரண்களை அமைந்திருந்தனர்.

மதிலரண்களில் நான்கு வகை இருந்தன. அவை மதில், எயில், இஞ்சி, கோ ஆகும். எயில் என்பது உயரமுடைய அரண், இஞ்சி என்பது திண்மையுடைய அரண். உயரம், அகலம், திண்மை ஆகிய மூன்றும் ஒரு சேர இருப்பது கோ என்ற அரண். இதனை வள்ளுவரும்

**‘உயர்வகலம் திண்மை அருமை இந்நான்கின்**

**அமைவரண் என்றுரைக்கும் நூல்60**

எனக் குறிப்பிடுவது கருத்தில் கொள்ளத்தக்கது ஆகும்.

மக்கள் பயமின்றி வாழ போதிய பாதுகாப்பினை அரசர்கள் செய்திருந்தனர். தம் நாட்டைப் பிற மன்னர்கள் கையகம் செய்யாமலிருக்க நகர் காவல், தெருக்காவல், ஊர்க்காவல் என நியமித்துப் பாதுகாத்தனர்.

### 2.2.2. ஐம்பெருங்குழு

அமைச்சர், புரோகிதன் (குரு), படைத்தலைவர், தூதுவர், சாரணர் ஆகியோர் அடங்கிய ஐம்பெருங்குழு அரசனுக்கு ஆட்சியில் உதவிபுரிய அமைக்கப்பட்டு இருந்தது.

சமயத் தொடர்பான வேலைகளைப் புரோகிதரும், சுகாதாரத்தை மருத்துவரும், நாளையும் நேரத்தையும் கணித்துக் கூற கணியரும், வருவாய் மற்றும் செலவீனங்களை அமைச்சரும் கவனித்தனர்.

### 2.2.3 எண்பேராயம்

கரணத்தியலவர், கரும விதிகள், கனகசுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானை வீரர், இவுளி மறவர் என்ற எட்டு பேர் கொண்ட குழு எண்பேராயம் எனப்பட்டது.

இவர்களில் கரணத்தியலவர் என்பர் - அரசாங்க பெருங்கணக்கறர் ஆவர். கரும விதிகள் என்பவர் - அரசாங்க வேலைகளை நடத்தும் தலைவர். கனகசுற்றம் என்பவர் - அரசாங்கப் பொருள் பாதுகாப்பு அதிகாரிகள். கடைக் காப்பாளர் என்பவர் - நாட்டைக் காக்கும் அதிகாரிகள். நகரமாந்தர் என்பவர் - நாட்டிலிருந்து பல நகரங்களின் பிரதிநிதிகள். படைத்தலைவர் என்பவர் - காலால் படை தலைவர் யானை வீரர் என்பவர் - யானைப் படை தலைவர். இவுளி மறவர் என்பவர் - குதிரைப் படைத் தலைவர்.

இந்த இரண்டு குழுக்களிலும் இருந்தவர்கள் நல்லக் குடியில் பிறந்தவர்களாகவும், ஒழுக்கம் கல்வி, நடுநிலைத் தவறாமல் போன்றவற்றில் தலைச்சிறந்தவர்களாகவும் இருந்திருக்கின்றனர்.

### 2.2.4 நாளோலக்கம்

ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும் கூடி இருக்க அவற்றிற்கு நடுவே அமர்ந்து அரசன் தினமும் அரசியல் செய்திகளை அமர்ந்து கவனிக்கும் மண்டபம் நாளோலக்க மண்டபம் எனப்படும். இந்த மண்டபத்தில் தான் பரிசில்பெற வருபவர்களுக்கு பரிசில் வழங்கியிருக்கிறான்.

### 2.2.5 அரசாட்சி

**‘சங்க காலத்தில் ஒவ்வொரு ஊரிலும் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட பெரியோர் இருந்து ஊராட்சியைக் கவனித்து வந்தனர். நாட்டின் தலைநகரில் பெரிய நீதி மன்றம் இருந்தது. அ∴து ‘அறக்களம்’ என்றும் ‘அறங்கூறும் களம்’ என்று பெயர் பெற்றது’61**

சில வழக்குகளை மன்னனே நேரில் விசாரித்துத் தீர்ப்பு வழங்கி இருக்கிறார்.

**‘இளையோர் வண்ட வயரவு முதியோர்**
**அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் சொலவும்’62**

என்ற சங்கப் பாடல் கரிகாலன் முதியவனைப் போல் வேடமணிந்து நீதி வழங்கியதைச் சுட்டிக்காட்டுகிறது.

இளந்திரையன் மந்திரச் சுற்றத்தோடு இருந்து முறை வேண்டியவர்க்கு முறையும், குறைக் கூறியவர்களுக்கு அதை நீக்க வேண்டிய உதவியும் புரிந்ததை

**‘முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்**
**வேண்டுப வேண்டுப வேண்டுநர்க் கருவி**
**இடைதெரிந் துணரும் இருடிர் காட்சிக்**
**கொடைக்கட னிறுத்த கூம்பா வுள்ளத்து**
**உரும்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகிப்**

**பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான்**

**கொடுவரிக் குரளை கொளவேட் டாங்குப்**

**புலவர் பூண்கட னாற்றி'63**

இப்பாடல் விளக்குகிறது.

இவ்வாறாக மூவேந்தர்களும் சங்க கால தமிழகத்தில் நல்லாட்சி நடத்தியதை எடுத்துரைக்கிறது.

## 2.3 பொருளாதார அடிப்படைக்கேற்ற போர் முறைகள்

**'உலகில் உள்ள அனைத்துமே நிரந்தரமாக மாறிக் கொண்டு இருக்கின்றன, என்பதும் உலகம் முழுமை செய்யப்பட்ட பொருள்களில் சேர்க்கை அல்ல. மாறாக நிகழ்ச்சி போக்குகள், தொடர்புகள், உறவுகள் ஆகியவற்றின் சேர்க்கையே'64** என்பர்.

**'ஒவ்வொன்றும் எல்லாவற்றுடன் உலகளாவிய முழுமையான ஜீவாதாரத் தொடர்பு கொண்டிருக்கின்றன என்று இந்த அறிவுக் காட்டியது. இயற்கையில் நிரந்தரமானது என்று எதுவும் இல்லை எனவும், வளர்ச்சிக் கட்டங்களின் மாற்றமே நிரந்தரமானது என்றும், ஒவ்வொரு கட்டமும் சிறிது காலத்திலோ, காலம் தாழ்ந்தோ, முற்றிலும் வேறான ஒரு கட்டத்திற்கு வழிவிட்டு மறைந்துபோகிறது என்றும், இந்த புதியக் கட்டத்திற்கும் அதே கதி நேரிடுகிறது என்றும் கூறி, உலகம் என்பது பொருள்களின் சேர்க்கை அல்ல, நிகழ்ச்சி போக்குகள், தொடர்புகள், உறவுகள் ஆகியவற்றின் சேர்க்கையே என்றும், எல்லா புலப்பாடுகளிலும் உள்ளார்ந்த முரண்பாடுகள் இருக்கின்றன'65** என்பது தர்க்கவியலாளர்களின் கருத்து ஆகும். ஆனால் இத்தகைய கருத்துகளின் படி காலம் மாற்றம் உண்டாவதற்கு போர் முறைகளும் ஒரு காரணமாகிறது.

அறிவு வளர்ச்சியின் ஆரம்ப காலகட்டத்தில் மனிதன் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கும் உயிர்வாழ உணவு தேடும் முகமாகவும், போர்த் தொழிலை மேற்கொள்ள ஆரம்பித்திருக்க வேண்டும். அதுவே அவன் அறிவு வளர வளர பல்வேறு மாற்றங்களுடன் இன்று வரை இத்தகையப் போர்க்குணம் தொடர்ந்துக் கொண்டே வருகிறது.

காலத்திற்கேற்ப, இடத்திற்கேற்ப, மனிதன் மேற்கொள்ளும் போர் யுத்திகளும் அதற்கானக் கருவிகளும் மாற்றம் பெற்றுக் கொண்டே வருகிறது. **“போர்தான் யாவற்றிற்கும் தந்தை. எல்லோர்க்கும் அரசன். போராட்டத்தின் மூலம் தான் எல்லா பொருள்களும் உயிர்தன்மை அடைகின்றன”66** என்பாரும் உளர்.

### 2.3.1. போர்க்கானக் காரணம்

ஆரம்பத்தில் ஆண் நிரைகளைக் கவரும் பொருட்டுப் போர் நிகழ்ந்தன. பிறகு நிலங்களைக் கையகப்படுத்தவும் ஆட்சியின் தலைமையைப் பெறவும், அடுத்து பெண்கள் பொருட்டும் போர்கள் நடந்தன. பிறகு கொள்கைக்காகவும், மானத்திற்காகவும் போர்கள் நிகழ்த்தப்பட்டன. திரைத் தர மறுத்த தன்னாட்சிப் பெறவும் போர் நிகழ்த்தப்பட்டன.

#### 2.3.1.1 ஆநிரை கவர்தலும் - மீட்டலும்

காண்கெழு நாடன், குறும்பறை நாடன், நல்வயலூரான் தன் கடற்சேர்ப்பன என திணைத் தலைவர்கள் வேறுபட்டிருந்ததைப் போல சீரூர் மன்னர் முதுகுடி மன்னர், குறுநில மன்னர், வேந்தர் என்னும் நால்வகைத் தலைவர்கள் வேறுபட்டிருந்ததைப் போல ஆரம்பக் காலகட்டங்களில் அவர்களின் போர் முறைகளிலும் வேறுபாடு காணப்படுகின்றன.

ஆநிரைகளைக் கவரும் பொருட்டும், கவர்ந்ததை மீட்கும் பொருட்டும் ஆரம்பகாலப் போர்கள் ஏற்பட்டன. **‘ஆதந்தோடம்பல்’** 67 என்கிறது தொல்காப்பியம். பிற்காலத்தில் மதில் அழிப்பும், விலை வயல் அழிப்பும், நீர்நிலைகளைப் பாழ்படுத்துவதும், நிலங் கவர்வதாகவும் பரிணமித்தது.

செல்வதற்கு அரிதான நள்ளிரவு வேளைகளிலே வடநாட்டின் கண்ணதாகிய அழகிய பசுக்களைக் கவர்ந்து வருவதற்கு எண்ணிச் சென்று பகைவரின் போர் முறைகளையெல்லாம் அழித்துப், பல மந்தைகளையும் தன் நாட்டிற்கு ஓட்டி வந்தவன் எருமை என்பவன். இதனை

**‘ஆர் இருள் நடுநாள் ஏர்ஆ உய்ய**
**பகைமுனை அறுத்துப் பல் இனம் சா அய்**
**….**
**துறுகாழ் வல்சியர் தொழுஅறை வௌவி**

**கன்றுடைப் பெருநிரை மன்றுநிரை தரூஉம்**
**நேரா வன்தோள் வடுகள் பெருமகன்**
**பேர்இசை எருமை நல்நாட்டு உள்ளதை68**

என்றப் பாடல்வழி அறியலாம்.

வெற்றி சூடிய வீரர்கள் ஆநிரைகளை கவர்ந்து சென்றதை

**'வீளை அம்பின் விழுத்தொடை மழவர்**
**நாள்ஆ உய்த்த நாமவெஞ சுரத்து'69**

என்ற வரிகள் உணர்த்தும்.

மறவர்கள் கவர்ந்துச் சென்ற ஆநிரைகளை ஆராவாரத்தோடு மீட்டுக் கொண்டு வருபவர்கள் கறந்தை வீரர்கள். இவர்கள் துடி என்னும் பறையினை ஒலித்து ஆடியும், பாடியும் தழையால் ஆகிய கண்ணியைச் சூடிக்கொண்டு வருபவர் என்பதை

**'வடிஉறு பகழிக் கொடுவில் ஆடவர்**
**அணங்குடை நோன்சிலை வணங்க வாங்கி**
**பல்ஆன் நெடுநிரை தழீஇ, கல்லென**
**அருமுனை அலைத்த பெரும்புகல் வலத்தர்**
**கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி**
**உவலைக் கண்ணியர்'70**

என அகநானூறு கூறும்.

### 2.3.2 வேந்தர்களின் போர் முறைகள்

சங்ககால மன்னர்கள் போரில் விருப்பமுடையவர்களாக இருந்தனர். அவர்களிடம் பெரும் போராற்றல் மிக்க வீரர்படைகள் இருந்தது.

அரவக்கடல் தானை அதிகனும் காலாது என்று கடல் போன்ற காலாட் பெரும்படை இருந்திருக்கின்றது. இப்படைத் தார்ப்படை எனவும் அழைக்கப்பட்டது.

இதனை

**‘தாரொடு பொலிந்த வினை நவில் 71**

என்ற வரி

வினை நவின்ற போர்யானை சினம் சிறந்து களன் உழக்கவும் என்ற வரிகள் யானைப்படை இருந்ததை உணர்த்துகிறது. இத்தகைய யானைப் படைகளில் வேற்றுமொழி பேசுபவர்கள். இந்த யானையைப் பயிற்றுவித்து பராமரித்தனர் என்பதை,

சுவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக் கல்லா இளைஞர் கவளம் கைப்பச் என்ற வரிகளால் அறியலாம்.

நிலத்திற்காகப் போர் செய்ததை

**‘எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்**
**அஞ்சுகத் தலைச் சென்று அடல்குரித் தன்றே72**

என்று தொல்காப்பியம் சுட்டிக்காட்டுகிறது.

**‘கொடுவரிக் குரளை கூட்டுள் வளர்ந்தாங்குப்**
**பிறர் பிணியகத் திருந்து பீடுகாழ் முற்றி**
**அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று**
**பெருங்கை யானை பிடிபுக் காங்கு**
**நுண்ணிதின் உணர நாடி நண்ணார்**
**செறிவுடைத் திண்காப் பேறிவாள் கழித்து**
**உருகெழு தாயம் ஊழினெய்திப்73**

என்றப் பாடல் கரிகாற் பெருவளத்தான் பகைவரின் காவலிலிருந்து தப்பித்து ஆட்சி உரிமை பெறுவதற்காகப் போர் செய்ததைக் கூறுகிறது. மேலும் வீரமரணம் அடைய விரும்புதல், பொருளீட்டல் போன்றவையும் போர்க்கானக் காரணங்களில் ஒன்றாக இருந்திருக்கின்றது.

விதி முடிந்து இறப்பை எதிர்கொள்வதைக் காட்டிலும் பகைவரோடு போரிட்டு மாண்டான் என்று சொல்லப்படும் புகழிலே நாட்டமுடையவர்கள் நம் பைந்தமிழ் மறவர்கள். அதோடு மட்டுமின்றி பொருளீட்டும் முகமாகவும் போருக்குச் சென்றவர்கள் பலர்.

போர் வினைக்கென்று நெறிகளையும், புறத்திணை நூல்கள் எடுத்தியம்பி யிருக்கிறது. அப்படி போருக்குச் செல்வதற்கு முன்பு விருச்சிக் கேட்டனர். நாள் கோள் பார்த்து வாளையும், குடையையும், முரசையும் இடம் பெயர்த்தனர். இதனை

வாளும் குடையும் பயிற்கண் முரசும் நாளொடு பெயர்த்தும் எனச் சங்க இலக்கியம் சுட்டுகிறது.

### 2.3.2.1. பாசறை

போர்த்தொடுத்து செல்லும் போது பாசறை அமைப்பது மிக முக்கிய செயலாக்கப்பட்டது. மாற்று நாட்டின் அருகிலுள்ள காடுகளில் தம் படை வீரர்களோடு மன்னர்கள் இருப்பிடத்தை அமைத்துக் கொள்வதே பாசறை ஆகும். இது பல அடுக்குகளாக அமைக்கப்பட்டு இருந்திருக்கிறது. நாற்புறமும் யானைகள் காவற்காத்து நின்றிருக்கிறது.

**‘பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறைப்’74**

எனப் பாசறை செய்தியை மதுரைக்காஞ்சிக் குறிப்பிடுகின்றது.

பண்டைய நாட்களில் பகற் நேரத்தில் மட்டுமே போர் நடைபெற்றதாகத் தெரிகிறது.

**‘வேறுபல் பூளையோடு உழிஞைச் சூடி**
**பேய்க்கண் அன்ன பிளிறுகடி முரசும்**
**மாக்கண் அகல்அறை அதிர்வெண் முழங்க**
**முனைக் கெடச் சென்று முன்சமம் முருக்கீ’75**

என்றப் பாடல் திருமாவளவன் அவன் வீரர்களும் பல்வேறு பூக்களையும் உழிஞைப் பூவையும் சூடிக் கொண்டு மதில்களை இடித்ததையும், குதிரைப் படையோடு போரிட்டதையும் பெருத்த ஓசையுடன் முரசம் ஒலிக்கப்பட்டதையும் குறிக்கப்படுகிறது.

#### 2.3.2.2 காட்டரண்

மன்னர்கள் தம் நாட்டிற்குள் மற்ற நாட்டினர் அவ்வளவு சீக்கிரம் உட்புக முடியாத அளவிற்குத் தம் நாட்டைச் சுற்றி முட்காடுகளையும், மரங்கள் அடர்ந்தக் காடுகளையும் வளர்த்தனர்.

#### 2.3.2.3 நீரரண்

நீரரண் என்பது இயற்கை அரணாகவும், செயற்கை அரணாகவும் கைக் கொள்ளப்பட்டிருக்கிறது. அதாவது ஆறும், கடலையும் கொண்டு இயற்கை அரண் அமைத்திருந்தனர். அதே போல் தம் கோட்டையைச் சுற்றி அகழிகள் அமைத்துச் செயற்கை அரண் அமைத்திருந்தனர்.

இந்த நீர் அரண்களில் பாதுகாப்புக் கருதி முதலைகளை விட்டிருந்ததை

திரைபடக் குழிந்த அகக் கிடங்கின் வரைபுரை நிவப்பின் என்றப் பாடல் வரி சுட்டுகிறது.

மிக ஆழமாகக் கல் தரையைத் தோண்டி செய்யப்பட்ட நீலமணிப் போன்ற கிடங்கு இருந்ததை

**‘மண் உற ஆழ்ந்த மணி நீர்க் கிடங்கின்76**

என்ற வரி குறிப்பிடுகின்றது.

#### 2.3.2.4 தேர்ப்படை

மன்னர்கள் நேரிடையாகக் களம் இறங்கி போர்ச் செய்வதற்கே பெரும்பாலும் தேர்படைகள் பயன்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் தேரின் அமைப்பானது வீரனும், பாகனும் அமரும் வகையில் மிகச்சிறிய உட்கட்டமைப்பு வசதியுடன் செய்யப்பட்டிருக்கிறது. இதனை

**வாம் பரிய கடுந்திண் தேர் காற்று எண்ணக் கடிது கொப்பவும்** என்ற வரிகளால் ஊகிக்க முடிகிறது.

### 2.3.2.5 குதிரைப்படை

மன்னர் போர் செய்திகளில் குதிரைப்படை முக்கிய இடம் பெற்றிருந்தது.

மாஎடுத்த மலி குரூஉ த்துகள் அகல்வானத்து வெயில் கரப்பவும், சோறுவாய்த் தொழிந்தோர் உள்ளியுந் தோறுமிபு வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த் துண்ணா துயங்கு மா என்ற வரிகளும் குதிரையைப் போரில் ஈடுபடுத்தப்பட்டதைக் குறிப்பிடுகின்றது.

### 2.3.2.6 போரில் பூச்சூடல்

போருக்குச் செல்லும் வீரர்கள் பூக்களைச் சூடியும் விருப்பத்தை வெளிப்படுத்தினர். ஒவ்வொரு போரின் ஒவ்வொரு கட்டத்திலும் ஒவ்வொரு பூவை அணிந்தனர்.

மூவேந்தர்களுக்கு 3 வகை பூக்கள் அடையாளமாகக் கொள்ளப்பட்டது. சேரனுக்குப் பனைப்பூ, சோழனுக்கு ஆத்தி பூ, பாண்டியனுக்கு வேப்பம்பூ ஆகும்.

போர்க்காலங்களில் செயலுக்கேற்ப பூமாலைச் சூடினர். இரண்டு படைகள் மோதிக்கொள்ளும் தறுவாயில் தும்பை பூச்சூடினர். இதனை

**‘வாடாத் தும்பை வயவர் பெருமகன்**
**ஓடாத் தானை’77**

என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

சேர வீரர்கள் போருக்குச் செல்கையில் தும்பைப் பூ சூடினர். இதுவே பெரும் வீரர்களாக இருந்தால், குறிப்பாகச் சேர அரசர்கள் பொன்னால் செய்யப்பட்ட தும்பைப் பூ அணிந்துச் சென்றனர் என்பதைப்

**‘பெலம் பூந் தும்பை, பொறி கிளர் தூணீ78**

என்றப் பாடல்வரி கூறுகிறது.

உழிஞை மாலைச் சூடி உழிஞை போர்ச் செய்வது என்பது பகைவருடைய முழு முதல் ரணத்தைக கொண்ட வழி மிக்கப் பெருஞ்செல்வம் கொள்ளையாகப் பெறப்படுதல் பொருட்டுச் செல்வது என்பதைச்

**‘சிறியிலை உழிஞைத் தெரியல் சூடி**

**கொண்டி மிகைபடத் தண் தமிழ் செறித்து’79**

என்பதனால் அறியலாம்.

### 2.3.3 போர்க் கொடுமைகள்

பகைவர் நாட்டின் மேல் படை எடுக்கும் மன்னன் பார்ப்பார், பெண்டிர், நோய்வாய்ப்பட்டோர், குழந்தை பெறாதோர், பசுக்கள் முதலியன போர்த் துவங்கும் முன் பாதுகாப்பான இடத்திற்குச் செல்ல அறிவித்ததைக் குறிப்பிடுகின்றது. இருப்பினும் போரால் - போர் முடிவால் ஏற்பட்டத் துயரங்கள் பெருங்கொடுமை நிறைந்ததாகக் காணப்படுகிறது.

சேர மன்னனின் கோபத்திற்கு ஆளான நாடுகள் முற்றிலும் அழிந்துப் போய் முள்ளிச்செடிகள் முளைத்து நான்கு திசைகளிலும் நரிகள் சுற்றித் திரியும் படியானது. பிறகு அந்த முட்செடிகள் கூட கருகிப் போயின என்று முத்தொள்ளாயிரப் பாடல் ஒன்று குறிப்பிடுகின்றது.

**‘கரிபரந் தெங்குங் கடுமுள்ளி பம்பி**

**நரிபரந்து காற்றிசையால் கூடி – எரிபரந்த**

**பைங்கண்மால் யானைப் பகையடுதோட் கோதையை**

**செங்கண் சிவப்பித்தார் நாடு’80**

மேலும்,

**‘வேரறுகை பம்பிச் சுரைபடர்ந்து வேளைபூத்**

**தூரறிய லாகா கிடந்தனவே’81**

என்ற வரிகளும் போரின் கொடுமையை எடுத்துக் கூறுகின்றன.

**‘முடித்தலை வெள்ளோட்டு மூளைநெய் யாகத்**

**தடித்த குடர்திரியா மாட்டி – எடுத்தெடுத்துப்**

**பேஎய் விளக்கயரும் பெற்றித்தே செம்பியன்**

**சேஎய் பொருத களம்’82**

என்றப் பாடல் சோழர் மன்னர் போர்ச் செய்த போர்க்களம் மணிமுடி அணிந்துப் போர் செய்த மன்னர்களின் தலையில் இருந்து உடைந்து விழுந்த வெண்மை

நிற மண்டை ஓட்டினை அகலாகவும், மூளையினை நெய்யாகவும், குடல்களைத் திரியாகவும் கொண்டு பேய்கள் குடல்களை எடுத்து அகல்களில் இட்டு விளக்கு எரிக்கும் தன்மையாக இருக்கிறது எனக் கூறுகிறது.

சோழனின் கட்டளைப்படி மத்தி என்பவன் எழினியின் மீது போர்த்தொடுத்து அவனைக் கொன்றான். கொன்றதோடு மட்டுமின்றி அவனுடைய பல்லைப் பறித்து வந்து வெண்மணி வாயில் எனும் கோட்டைக் கதவுகளில் பதித்து வைத்ததைக்

**'கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி**
**நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தார்ப் பட்ட**
**கல்லா எழினி பல்எறிந்து அழுத்தி**
**வன்கண் கதவின் வெண்மணி வாயில்83**

என்ற மாமூலனார் பாடல் தெரிவிக்கிறது.

செங்கட்சோழன் போர் செய்த களத்தில் யானைகளால் கொல்லப்பட்ட பிணங்கள் பறக்க ஒரு தச்சன் வேலைச் செய்யும் இடம் போல காணப்பட்டதைக்

**'கொல்யானை பாயக் குடைமுருக்கி யெவ்வாயும்**
**புக்கவா யெல்லாம் பிணம் பிறங்கத் - தச்சன்**
**வினைபடு பள்ளியிற் றோன்றுமே செங்கட்**
**சினமால் பொருத களத்து'84**

என்றக் களவழி பாடல் விளக்கும்.

செம்பியன் கொன்றப் பகைநாட்டு யானைகள் உடலிலிருந்து வெளிப்பட்ட உதிர நீரில் மூழ்கிச் செக்கர் வானத்தில் கரிய மேகத்தைப் போன்று காட்சியளித்ததாக பொய்கையார் கூறுகிறார்.

**'எற்றி வயவ ரெறிய நுதல்பிளந்து**
**நெய்த்தோர்ப் புனலு னிவந்த களிற்றுடம்பு**
**செக்கர்கொள் வானிற் கருங்கொண்மூப் போன்றவே**
**கொற்றவேற் றானைக் கொடித்திண்டேர்ச் செம்பியன்**
**செற்றாரை யட்ட களத்து'85**

பாண்டியன் மன்னர் செய்தப் போரில் யானைகள் பலவும் இறந்தன. அவற்றைக் கண்ட பெண் யானைகள் கலங்கி நின்றன. போர்க்களத்தில் இறந்து கிடந்த பகைநாட்டு மன்னர்களின் உடல்களைக் கண்டு அவர்களின்

மனைவியர்கள் தீயில் மூழ்கினார்கள். இதனைப் பார்க்க முடியாமல் போரிட்டு வென்ற பாண்டியனே கண்களை மூடிக்கொண்டான் என்பதனை

**‘ஏனைய பெண்டி ரெரிமூழ்கக் கண்டுதன்**
**தானையாற் கண்புதைத்தான் தார்வழுதி – யானையெலாம்**
**புல்லார் பிடிபுலம்பத் தாங்கள் புதைத்தவே**
**பல்யானை யட்ட களத்து’86**

என்று முத்தொள்ளாயிரம் பாடல் கூறுகிறது.

பாண்டியன் போர் செய்த நாடுகள் மாடத்து உச்சியிலிருந்து கூகைத் தாலாட்டு இசைக்கப் பேய் தூங்கும் தன்மையை அடைந்திருந்ததை

**‘கூகை படுபேய்க்குப் பாட்டயரும் பண்பிற்றே’87**

எனவும் முறையறிந்து பாண்டியர்க்குத் திரை செலுத்தாதவர்கள் நாடு, தாய் பேய்கள் பெற்றெடுத்த இளம் பேய்கள் தூங்குகின்ற இடமாகவும் மாறிவிடுமாம்.

**‘ஆன்போ யரிவையர்போ யாடவர் யாயீன்ற**
**ஈன்பே யுறையு மிடம்’88**

ஒரு வீரனின் மனைவி தன் கணவர் திரும்பி வராததை நேரிடையாக கூறி புலம்பாமல் அவன் குதிரை இன்னும் வரவில்லையே எனப் புலம்புகிறாள். மேலும் எமக்கு ஒரு புதல்வனைத் தந்த செல்வன், எம் கொழுநன் அவர் ஊர்ந்து வரும் குதிரையைக் காணாமே. அவனைச் சுமந்து சென்றக் குதிரை இரண்டு பேராறுகள் கூடுமிடத்திலேப் பட்ட பெருமரம் போல இருபெரும் படைக்கும் இடைப்பட்டு அலையுண்டு வீழ்ந்துவிட்டதோ? கணவனைக் காணாது அவன் குதிரை வரவில்லை என ஏங்கும் ஏக்கத்தை இப்பாடல் வெளிப்படுத்துகிறது.

**‘மாவா ராதே மாவா ராதே**
**எல்லார் மாவும் வந்தன எம்இல்**
**புல்உளைக் குடுமிப் புதல்வன் தந்த**
**செல்வன் ஊரம் மாவா ராதே**
**இருபெர் யாற்ற ஒருபெருங் கூடல்**
**விலங்கிடு பெருமரம் பொல**
**உலந்தன்று கொல் அவன் மலைந்த மாவே’89**

பகையரசர்களின் உரிமை மகளிர்களைப் பற்றி வந்து தலையை மழித்து அக்கூந்தலை கயிறாகத் திரித்து அக்கயிற்றாலே அப்பகைவரின் யானையைப் பிணித்த கொடுமையிலும் கொடுமையைக்

**'கூந்தல் முரற்சியின் கொடிதே'90**

என்றுப் பரணர் கூறுகிறார்.

பகைவரைக் கொன்றுக் குவித்து அவர் முரசையும் கவர்ந்து அவர்களின் தலைகளை அடுப்பாக்கி குருதியைப் புனலாகப் பெய்து பகைவர் தசைகளையும், மூளைகளையும் அதனுள் இட்டு, வெட்டிய தோள்களைத் துடுப்பாகக் கொண்டு துழவி களவேள்வி செய்வர் என்ற மாங்குடி கிழாரின் நயம் கொடுமையின் உச்சத்தையே பறைசாற்றுகிறது.

**'முடித்தலை அடுப்பாகப்**
**புனல் குருதி உலைக் கொளீஇத்**
**தொடிதோள் துடுப்பின் துழந்த வல்சியின்**
**அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய'91**

போரில் இறந்தவர்கள் கொடியப் பச்சிலையும் உண்ணாது, சுழல் நீரில் மூழ்கி இறக்காமல் பகைவரின் வேரால் இறந்துக் கிடப்பதைப் பார்த்து இறந்தவர்களின் மனைவியர் தம் தமது கணவரின் மார்பைக் கட்டியவாறே களத்தில் கிடந்தழும் கொடுமை மிக்க காட்சிகளை

**'….பெண்டிரும்**
**பாசடகு மிசையாள் பனிநீர் மூழ்கார்**
**மார்பகம் பொருந்தி ஆங்கமைந் தனரே'92**

என்றப் பாடல் சுட்டிக்காட்டுகிறது.

போரால் பாதிக்கப்பட்ட நாட்டில் மறவர் வீழ்ந்துபட காவலற்று மயங்கின அவர் இல்லங்கள். அந்நிலைக்கு வருந்தும் எஞ்சிய ஆடவர் தம் வருத்தத்தைத் தம் மனைவியர் அறியக் காட்டாது தம் சிறு மகாரில் பூவனையக் கண்களை முத்தங்கொண்டு மறைப்பர். இவ்வாறு துன்புறும் ஆடவரோடு போரால் பாதிக்கப்பட்டு நாடுகள் கலக்கமுற்றிருந்ததை

**‘மையல் கொண்ட ஏமமில் இருக்கையர்**
**புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்டு**
**எவ்வம் கரக்கும் பைதல் மாக்களொடு**
**பெருங்கலக் குற்றன்றால் தானே காற்றோடு**
**எரிநிகழ்ந் தன்ன செலவின்**
**செருமிகு வளவ நிற் சினைஇயோர் நாடே’93**

என்றக் கோவூர்க் கிழார் பாடல் குறிப்பிடுகின்றது.

**‘மண்டமர் நசையொடு கண்படை பெறாஅது**
**எடுத்தெறி யெ.ஃ.கம் பாய்தலிற் புண்கூர்ந்து**
**பிடிக்கணம் மறந்த வேழம் வேழத்துப்**
**பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமியத்**
**தேம்பாய் கண்ணி நல்வலந் திருத்திச்**
**சோறுவாய்த் தொழிந்தோர் உள்ளியுந் தோறுமிபு**
**வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்**
**துண்ணா துயங்கு மாசிந் தித்தும்’94**

என்றப் பாடலானது பகைவர்களின் மேல் படை எடுத்துச் செல்லும் போர் விருப்பத்தினால் உறக்கம் இல்லாமல் முன்னாளில் பகைவர்கள் எறிந்த வேல் குத்தியதனால் புண் அதிகமாகித் தம் பெண் யானைகளை மறந்த ஆண் யானைகளை நினைத்தும், அடிப்பட்ட பாம்பு துடிப்பது போலத் துடித்து விழுமாறு யானைகளின் பெரிய தும்பிக்கையினை வெட்டி வீழ்த்தித் தாம் அணிந்திருக்கின்ற வஞ்சிப்பூ மாலைக்குச் சிறந்த வெற்றியை உண்டாகச் செய்து பின்பு செஞ்சோற்றுக் கடன் தீர்த்தும் போர்க்களத்தில் இறந்த வீரர்களை நினைத்தும் காவலாகப் போடப்பட்ட தோல் ஆடைகளைக் கிழித்துக் கொண்டு அம்புகள் புகுந்ததனால் புல் உண்ணாமல் செவிகளை ஒரு புறமாகச் சாய்த்து நிற்கும் குதிரைகளின் நிலையை முல்லைப்பாட்டு எடுத்துரைக்கிறது.

நெல்விளையும் கழனியைப் கொள்ளையடித்தும் வீடுகளை இடித்து, எரியூட்டியும், காவற்குளங்களில் யானைகளை இறக்கிவிட்டு அழுத்தும் அந்நாடே சுடநெருப்பாய் வெந்து செக்கர் வானைப் போல ஒளிபரப்பியதை

**‘வினைமாட்சிய விரை புரவியொடு**

**மழை உருவின் தோல் பரப்பி**

**முனை முரங்கத் தலைச் சென்றவர்**

**விளைவயல் கவர்பு ஊட்டி**

**மனைமரம் விறகு ஆகக்**

**கடி நிறைநீர்க் களிறுபடீஇ**

**எல்லுப்பட இட்ட சுடுதீ விளக்கம்**

**செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரின் தோன்ற்95**

என்ற பாண்ட ரெங்கண்ணனார் பாடலாலும்

**‘வெளிறில் நோன்காழ்ப் பனைநிலை முனைஇக்**

**களிறு படிந்து உண்டெனக் கலங்கிய துறையும்**

**…**

**…**

**கடிமரம் துளங்கிய காவும், நெடுநகர்**

**வினைபுனை நல்லில் வெவ்வெரி இணைப்பக்**

**கணைஎரி உரறிய மருங்கு நோக்கி**

**நண்ணார் நாண நாள்தொறும் தலைச்சென்று**

**இன்னும் இன்னபல செய்குவன் யாவரும்**

**துன்னல் போகிய துணிவினோன் என**

**ஞாலம் நெளிய ஈண்டிய வியன்படை’96**

என்றக் கல்லாடனார் பாடலாலும் அறியலாம்.

பழங்காலம் முதலாகப் பகைவர்களாக இருந்த மன்னர்களின் நாட்டுக்குள் புகுந்து அவர்களின் காவல் மிகுந்த காடுகளை அழித்து எப்போதும் வளம் குறையாமல் விளைவை தரும் மருதநிலங்கள் அனைத்தையும் நெருப்பிட்டு அழித்து நாட்டைக் காடாகவும், பசுமை நிறைந்திருந்த இடங்கள் அனைத்தையும், புலி முதலியன வாழும் கொடுமைமிகு இடங்களாக்கி ஆராவாரம் மிக்க ஊர் இருந்த இடங்களையெல்லாம் அழித்துப் பாழாகிப் போகவும், வளையல் அணிந்துக் கொண்டு அழகியச் சாயலை உடைய பெண்கள் ஆடும் துணங்கைக் கூத்தையும், குறவைக் கூத்தையும் மறந்திருக்கவும் கல்வியிற் சிறந்த

நற்குணமுடையச் சான்றோர்கள் அமர்ந்திருந்தப் பொது மன்றங்களிலெல்லாம் பிளவுபட்டக் கால்களை உடையனவாகவும், கொடுமையானப் பார்வையினை உடையவையுமானப் பேய் மகளிர் ஆடிக்கொண்டிருந்ததை

**'உறுசெறுநர் புலம்புக்கவர்**
**கடிகாவி விலை தொலைச்சி**
**இழுபறியாய் பெருந்தண் பனை**
**குரூஉக்கொடிய எரிமெய**
**நாடெனும் பேர் காடாக**
**ஆசேந்தவழி மாசேப்ப**
**ஊரிருந்தவழி பாழாக**
**இலங்குவளை தழூஉமறப்ப**
**அவையிருந்த பெரும்பொதியிற்**
**கவையடிக் கடுநோக்கத்துப்**
**பேய்மகளிர் பெயர்பாட'97**

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது.

மேலும் தெய்வங்கள் வாழ்ந்து அருள் நிரம்பியிருந்த ஊர் இடங்களி ளெல்லாம் வருத்தம் கொண்டிருக்கும் பெண்கள் தங்களின் வீட்டுக் கதவருகே இருந்து அழுதுக் கொண்டிருக்கவும், நாட்டில் வாழும் மக்கள் அனைவரும் பசியால் வருத்தம் கொண்டு உண்ண ஏதும் கிடைக்காமல் ஊருக்கு வெளியில் உள்ள காட்டில் தங்கி இருக்கும் தங்களின் உறவினர்களைச் சென்று சேரவும் மிகப்பெரிய மாளிகையில் இருந்த தானியக் குதிர்கள் நெருப்பினால் எரிந்துப் போக அந்தக் குதிரில் இருந்து கூகை குரல் எழுப்பவும், மலர்கள் நிறைந்து அழகு பொழிந்தப் பொய்கையில் கோரைப் புற்கள் அடர்த்தியாக நெருங்கி வளரவும், தானியங்கள் விளைந்த நிலங்களிளெல்லாம் பன்றிகள் உலவியதையும், பகைக் கொண்ட மன்னர்களின் நாடுகளிளெல்லாம் மக்கள் வாழ்வதற்கு தகுதி யில்லாமல் போரினால் பாழடைந்து விட்டதை மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது.

**'கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்**
**வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்**
**பாழ்செய் தனைஅவர் நனந்தலை நல்லெயில்**

**புள்ளினம் இமிழும் புகழ்சால் விளைவயல்**
**வெள்ளுளைக் கலிமான் கவி குளம்பு உகளத்**
**தேர்வழங் கினைநின் தெவ்வர் தேஎத்துத்**
**துளங்கியலாற் பனை எருத்தின்**
**பா வடியால் செறல் நோக்கின்**
**ஒளிறு மருப்பின் களிறு அவர**
**காப்புடைய கயம்படியினை**
**அன்ன சீற்றத்து அனையை'98**

என்ற நெட்டிமையார் பாடலானது போர் தொடுத்துச் சென்று பகைநாட்டின் தெருக்களிலே கழுதைகளைப் பூட்டி உழுதும், விளைவயலிலே குதிரைப் பூட்டிய தேரினைச் செலுத்தி நாசம் விளைவித்தும், காவற்குளங்களிலே யானைகளை இட்டு பாழ் செய்ததையும் எடுத்துரைக்கிறது.

மீன் சுடும் நாற்றமிகுந்த பகைவரின் வயல்களெல்லாம் புது வருவாயின்றி அழியும். தெய்வ வழிபாடுகள் நீங்கி பலிபீடங்கள் பாழ்படும். முதுகிழவர்கள் அம்பலங்களில் சூதாடி மகிழ குழிவிழுந்த இடங்களிலே காட்டுக்கோழி முட்டையிடும். இவ்வாறு பகைவரின் வளநாடுகள் போரினால் அழிந்துக் காடாகி கெடும் என்பதை

**'....ஊர்தொறும்**
**மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி**
**வயல் உழை மருதின் வாங்குசினை வலக்கும்**
**பெருநல் யாணரின் ஒரீஇ இனியே**
**கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப்**
**பலிகண் மாறிய பாழ்படு பொதியில்**
**நரைமூ தாளர் நாயிடக் குழிந்த**
**வல்லி நல்லுலகம் நிறையப் பல்பொறிக்**
**கான வாரணம் ஈனும்**
**காடாகி விளியும் நாடுடை யோரே'99**

என்ற மருதன் இளநாகனார் பாடல் வழி அறியமுடிகிறது.

### 2.3.3.1. மன்னர்களின் நயவஞ்சகம்

மன்னர் ஒருவருக்கொருவர் போரில் மட்டுமல்லாமல் நயவஞ்சகச் செயல்களிலும் தாக்கிக் கொண்டார்கள். **“சோழ வேந்தன் பாண்டியனைக் கொள்வதற்கு சமணக் குறவர்களுக்கு ஆணையிட அவர்களும் சோழனின் விருப்பத்திற்கு உடன்பட்டுச் சென்று பாலியாற்றின் கரையில் மூன்று காதம் அளவிற்கு அகலமானதொரு வேள்விச் சாலை அமைத்து ஒரு யோசனை அகலம் தோன்றி 8 யோசனையுடைய ஒரு ஓமக்குண்டத்தை அதில் நஞ்சிக் கலந்த எட்டி போன்ற விறகுகளை இட்டு வேம்பின் எண்ணெய் கலந்து நச்சிப் பிராணிகளின் சதைகளையும், மிளகுப்பொடி ஊறிய எண்ணெய்யையும், தீயினை உடைய வேள்விக் குண்டத்திலே போட்டு, கொல்லாமையாகிய விரதத்தை மேற்கொண்ட சமணர்கள் கொடியப் பழியினை விளைவிக்கும். அவ்வேள்வியினைச் செய்தார்கள் என்றும், அதனால் தாவி எழுகின்ற வேள்விக் குண்ட தீயினால் பக்கத்தில் உள்ள மரச்செறிவினையுடைய நந்தவனங்களும், சோலைகளும், காடுகளும், கருகி தீய்ந்ததோடில்லாமல் மீன்கள் நிறைந்த ஓடைகளும், கரையுள்ள வாவிகளும், குளங்களும் வறண்டன. தூரத்திலுள்ள மேகங்கள் கூட கருகின”**100 என்று திருவிளையாடற் புராணம் கூறுகின்றது.

இவ்வாறாகச் சங்ககால போர் முறைகளும் அதனால் ஏற்பட்ட விளைவுகளும் கொடுமைமிக்கதாக இருந்திருக்கின்றன.

நிலங்களும், திணைகளும் என்ற இவ்வியலில் அடிப்படைப் பொருளாதாரத்திற்கேற்ற சமூகத் தலைமையினையும், சீறூர் மன்னர்கள், குறுநில மன்னர்கள், மூவேந்தர்கள் அவர் தம் இயல்புகள் பற்றியும், அரசாட்சி, மக்கள் பாதுகாப்பு, போர் முறைகள், அரண்கள், படைப்பிரிவுகள் மற்றும் போர்க் கொடுமைகளும் ஆராயப் பெற்றுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. தொல். சிறப்பாயிரம் 1-3
2. புறம் பாடல் எண். 17
3. மதுரைக் காஞ்சி பாடல் வரி 70 – 71
4. இறையனார் அகப்பொருள் பாயிரம் உரை பக். 12
5. 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் பக். 23
6. வருங்கால தமிழகம் பக் 36
7. குடும்பம் தனிச் சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம் பக். 26
8. சமூக அறிவியல் களைக் களஞ்சியம் 160
9. புறநானூறு பாடல் எண். 189:1-3
10. மேலது பாடல் எண் 49:1-2
11. மேலது, பாடல் எண் 319:12-13
12. சங்ககால வாழ்வியல் பக். 52
13. மதுரைக்காஞ்சி பாடல் வரி, 776-778
14. சோழர் ஆட்சியில் அரசும், மதமும் பக். 17
15. தொல் பொருள் நூ. 384
16. மேலது, நூ. 4-5
17. அகநானூறு பாடல் எண். 31:14-15
18. வால்மீகி இராமாயணம் 2ம் தொகுதி பாடல் எண். 914
19. தென்னிந்திய வரலாறு பக். 64
20. அகநானூறு பாடல் எண். 127:3-5
21. மேலது. பாடல் எண். 347-3-5
22. மேலது, பாடல் எண். 168:5-7
23. மேலது, பாடல் எண். 55:11
24. புறநானூறு, பாடல் எண். 65:9-12
25. குறுந்தொகை, பாடல் எண். 34:4-6
26. அகநானூறு, பாடல் எண். 212:16-19
27. மேலது, பாடல் எண். 396:17-19
28. ஐங்குநுறூறு, பாடல் எண். 2:8:178:2-3
29. மணிமேகலை, பாடல் வரி 9-10
30. அகநானூறு பாடல் எண். 385:3-4
31. மேலது, பாடல் எண். 336:20-22

32. மேலது, பாடல் எண். 375:10-14
33. ஐங்குநுறூறு பாடல் எண். 1:8:78:1-2
34. அகநானூறு பாடல் எண். 175 : 10-12
35. மேலது, பாடல் எண். 209:3-6
36. மேலது, பாடல் எண் 122 : 21
37. மேலது, பாடல் எண். 226:13-17
38. மேலது, பாடல் எண். 152:6
39. புறநானூறு பாடல் எண் 80 : 5-6
40. அகநானூறு பாடல் எண் 205:10
41. தென்னிந்திய வரலாறு பக். 65
42. அகநானூறு பாடல் எண் 125: 20-21
43. சிலப்பதிகாரம் பாடல் எண். 27:122-123
44. அகநானூறு பாடல் எண். 346:21-24
45. மேலது, பாடல் எண். 312:11-13
46. மேலது, பாடல் எண். 315:7
47. தென்னிந்திய வரலாறு பக். 66
48. மேலது பக். 66
49. மேலது பக். 66
50. அகநானூறு பாடல் எண் 338:1-6
51. மேலது, பாடல் எண். 231:11-12
52. மேலது பாடல் எண். 162:21-22
53. தென்னிந்திய வரலாறு பக். 60
54. மேலது
54. மதுரை காஞ்சி, பாடல் வரிகள் 670 – 672
56. கலித்தொகை பாடல் வரி 53-543
57. கலித்தொகை பாடல் எண். 4:12
58. மேலது, பாடல் எண் 7 : 1-2
59. மேலது, பாடல் எண். 9:5-6
60. திருக்குறள், அதிகாரம் 75, குறள் எண். 743
61. பத்துப்பாட்டு ஆராய்ச்சி பக். 73
62. பொருநராற்றுப்படை, பாடல் வரி 187-188
63. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 443-450

64. இயக்கவியல் பொருள் முதல் வாதமும் வரலாற்றுப் பொருள் முதல் வாதமும் பக். 66
65. மேலது பக் 72
66. குடும்பம், தனிச்சொத்து தோற்றம் பக். 52
67. தொல். நூ. 2
68. அகநானூறு பாடல் எண். 254 : 11-20
69. மேலது பாடல் எண் 131:6-7
70. மேலது பாடல் எண். 159:5-10
71. மலைபடுகடாம், பாடல் வரி 227
72. தொல். நூ. 37
73. பட்டினப்பாலை, பாடல் வரி 220-227
74. மதுரைக் காஞ்சி, பாடல் வரி 231
75. மதுரைக் காஞ்சி, பாடல் வரி 351
76. முல்லைப்பாட்டு, பாடல் வரி, 72-74
77. பெரும்பாணாற்றுப்படை, பாடல் வரி 101-102
78. பதிற்றுப்பத்து பாடல் எண். 5:45:1
79. மேலது, பாடல் எண் 7:3:8-9
80. முத்தொள்ளாயிரம், பாடல் எண். 8
81. மேலது, பாடல் எண் 9:1-2
82. மேலது, பாடல் எண் 38
83. அகநானூறு பாடல் எண் 211:11-15
84. களவழி நாற்பது பாடல் எண் 15
85. மேலது, பாடல் எண. 23
86. முத்தொள்ளாயிரம் பாடல் எண் 87
87. மேலது, பாடல் எண். 89:3-4
88. மேலது, பாடல் எண் 273
89. புறநானூறு, பாடல் எண். 26:7-11
90. நற்றிணை பாடல் எண் 270:7-11
91. புறநானூறு பாடல் எண் 26:7-11
92. மேலது பாடல் எண். 62:13-15
93. மேலது, பாடல் எண். 41:13-18
94. முல்லைப்பாட்டு பாடல் வரி 67-74

95. புறநானூறு பாடல் எண். 16:1-8

96. மேலது, பாடல் எண். 23:1-15

97. மதுரைக்காஞ்சி பாடல வரி 152-163

98. புறநானூறு பாடல் எண் 15:1-11

99. மேலது பாடல் எண். 52

100. திருவிளையாடற்புராணம், பாடல் 1396-1397

## இயல் 3

# வாணிபமும் தொழில்களும்

பூர்வீக மனிதன் முதலில் கோடாரியையும், வில்லையும் செய்த பொழுது அது பொருளாதார வளர்ச்சியாகக் கருதப்படவில்லை.

பிறகு வேடர் குழு சில கோடாரிகளையும் வில் ஆயுதங்களையும் கொண்டு ஒரு மானைக் கொன்றது. மான் இறைச்சியை அவர்கள் பகிர்ந்துக் கொண்டனர். அநேகமாக, சமமாகத்தான் பகிர்ந்துக் கொண்டிருப்பார்கள். சிலர் அதிகமாக எடுத்துக் கொண்டிருந்தால், மற்றவர்கள் உயிர் பிழைத்திருக்க முடியாது. உயிரோடிருந்திருக்க முடியாது. ஆகையால் தான் குழுமத்தின் வாழ்க்கை மேலும் பன்முகப்பட்டதாக வளர்ச்சியடைந்தது. அப்பொழுது உழைப்பினால் ஏற்பட்ட பண்டங்களைக் குழுமங்களுக்கு இடையிலும் ஒரு குழுமத்துக்கு உள்ளேயும் பரிவர்த்தனை செய்வது ஆரம்பமானது.

இவை அனைத்தும் பூர்வீகமாகவும், வளர்ச்சியில்லாமலும், இருந்த போதிலும் இதுவே பொருளாதாரமாகக் கருதப்பட்டது. ஏனென்றால் இவை பொருள்களோடு வில், கோடாரி அல்லது இறைச்சி, மக்கள் கொண்டிருந்த உறவுகள் சம்பந்தப்பட்டவை மட்டுமல்ல. அவர்கள் சமூகத்தின் ஒருவரோடொருவர் கொண்டிருந்த உறவுகளுடனும் சம்பந்தப்பட்டிருந்தன.

பொருள்வகைப் பண்டங்களின் சமூக உற்பத்தியும், பரிவர்த்தனையும், விநியோகமும், நுகர்வும், அந்த அடிப்படையில் ஏற்படுகின்ற உற்பத்தி உறவுகளின் கூட்டு மொத்தமுமே பொருளாதாரம் ஆகும். இந்தக் கருத்தின்படி பார்த்தால், பொருளாதாரம் மனித சமூகத்தைப் போலவே மிகப் பழமையானது.

**‘முதலில் பொருளாதாரச் சிந்தனை என்பது சமூகத்தைப் பற்றிய சிந்தனையின் மற்ற வடிவங்களிலிருந்து தனியானதாக இருக்கவில்லை. எனவே அது முதலில் எப்பொழுது தோன்றியது என்று துல்லியமாக கூற முடியாது**[1] அதுவும் நம் தமிழக பொருளாதாரமோ பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முற்பட்டது சங்க கால தமிழகத்தில் வணிகம் தலைச்சிறந்து இருந்திருக்கிறது. வணிகப் பொருட்களும், அதை விற்க கடைத்தெருக்களும் நன்முறையில் பராமரிக்கப்பட்டிருந்தது.

உள்நாட்டு வாணிகம் மற்றும் வெளிநாட்டுக் கடல்வழி வாணிகம் சிறப்புடன் நடந்திருக்கிறது. திணைச் சார்ந்த தொழில்களும், பொதுத்தொழில்களும் ஆக மக்கள் உற்பத்தித் திறனில் மக்கள் மேம்பட்டு இருந்திருக்கின்றான் என்பதை, சங்க இலக்கியங்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

## 3.1 பொருளாதாரம் பற்றிய பொருளியலாளர்களின் கருத்துக்கள்

மனிதர்களின் வாழ்க்கையில் பொருளாதாரம் எப்பொழுதுமே மிக முக்கியமான பங்கு வகித்து வந்திருக்கிறது. அரசியல், மதம், விஞ்ஞானம் மற்றும் கலை ஆகியவை பொருளாதாரத்தை ஆதாரமாக கொள்வதன் மூலமாக மட்டுமே வாழ முடிந்திருக்கிறது.

**“மனித சமூகத்தைப் பற்றி படிப்பதே பொருளியலின் அடிப்படை ஆகும். சமூக சிக்கல்களாகிய வேலையின்மை, வறுமை, மருத்துவக் கண்காணிப்பு, உற்பத்தி திறன், அரசின் கொள்கைகள் ஆகியவற்றை சார்ந்துள்ளதால் பொருளியலின் உள்ளடக்கத்தை எளிதில் விவரிக்க இயலாது. ஆடம் ஸ்மித் ‘பொருளியல்’ செல்வத்தைப் பற்றிய இயல் என்கிறார். ‘ஆல்பர்ட் மார்சல்’ பொருளாதாரம் மனித நலத்தைப் பற்றியது என்கிறார். ராபின்ஸ் ‘பொருளாதாரம்’ வளங்களில் கிடைப்பருமை, தெளிவு, ஆகியவற்றைச் சார்ந்தது என்கிறார். பால் சாமுவேல்சன் என்பவர்; ஒரு நாட்டின் பண்டங்கள், பணிகள், உற்பத்தி வளர்ச்சி பற்றி ஆராய்வது பொருளாதாரம் என்கிறார். பொதுவாக செல்வம், மனித வளம், வளங்களின் கிடைப்பருமை, தெரிவு, முதலியவை தொடர்பான மனித நடவடிக்கைகளை ஆராய்வது பொருளாதாரத்தின் உள்ளடக்கம் எனக் கருதலாம். மேற்குறிப்பிட்ட மனித நடவடிக்கைகள், மனித திருப்பங்கள் (அவற்றை அடைவதற்கான மனித) முயற்சிகள், அம்முயற்சிகளின் விளைவாக மனிதன் பெறுகின்ற மனநிறைவு ஆகியவற்றை மையமாகக் கொண்டு சுற்றி, சுற்றி வருபவை என்பது தெளிவாகும்’’2**

> **‘பொருளியல் பழம்பெருமை வாய்ந்த அரியதொரு கலை. புதுமையான அறிவியல், சமூக அறிவியலின் ராணி3** என சாமுவேல்சன் விளக்கம் தருகிறார்.

**‘பயன்பாடு உடையதாகவும், அளவில் வரையறை உடையதாகவும், அதன் பயன் மாறுபடக் கூடியதாகவும், எது இருக்கிறதோ அதுவே செல்வம் எனப்படும்’4**

என்று சில்வர்மேன் செல்வத்திற்கு இலக்கணம் வகுத்துள்ளார். **‘ஒரு குறிப்பிட்ட காலத்தில் கையில் இருக்கும் விலை மதிப்புள்ள சரக்கே செல்வம் என அழைக்கப்படும்’5** என்று ஹான்சன் கூறுகிறார். எனவே மனித விருப்பங்களைப் பூர்த்தி செய்யக்கூடிய கிடைப்பருமையைக் கொண்டுள்ள மதிப்புடைய பொருள்கள் செல்வம் எனப்படுகிறது.

பொருட்கள் மாற்று மதிப்பை உடையனவாக இருக்க வேண்டும். அம்மாற்று மதிப்பை பெற அவைகள் பயன்பாடு உடையனவாகவும், கிடைப்பருமை பொருளாகவும் மாற்றுவதற்குரியதாகவும் இருக்க வேண்டும். இத்தகைய பொருட்களே செல்வம் எனப்படும். மனிதனின் திறமைகள் சுயசெல்வம் எனப்படும்.

**‘பொருளாதாரம் என்பது செல்வம் பற்றிய ஒரு விஞ்ஞானம் என ஆடம்ஸ்மித் கூறுகிறார்’6** மனிதன் எவ்வாறு செல்வத்தைச் சேர்த்து பகிர்வு செய்து பின்னர் நுகர்ச்சியாக அதனை செலவிடுகிறான் என்பதை பொருளியல் விளக்குகிறது. **‘மனித விருப்பத்தை நிறைவு செய்யும் அனைத்தும் பொருள் எனப்படும்’7** என்று மையர் கூறுகிறார்.

மனித விருப்பங்களை நிறைவு செய்யும் பொருள்கள் மட்டுமின்றி, பணிகளும் பொருள்கள் என்பதை குறிப்பிட வேண்டும். ஆசிரியர், வழக்கறிஞர், மருத்துவர், நடிகர்கள், புகைப்படக் கலைஞர்கள், ஆகியோரின் பணிகளும் பொருட்களே ஆகும்.

பொருள்களைப் பொதுவாக இரண்டு வகைப்படுத்தலாம். ஒன்று இலவசப் பொருட்கள், இரண்டு செல்வப் பொருட்கள் ஆகும். **‘இயற்கை அன்னையின் அருளால் கிடைக்கும் பொருட்கள் அனைத்தும் இலவசப் பொருட்கள் ஆகும். இவற்றிற்கு நாம் எவ்வித விலையும் கொடுப்பதில்லை. இவை சமுதாய தேவையை விட அதிக அளவில் கிடைக்கின்றன. காற்று, நீர், சூரிய ஒளி, மணல், மழை, கடல்நீர் முதலியவை இலவசப் பொருளாகும். இவை சில நேரங்களில், சில இடங்களில் செல்வப் பொருளாகவும் மாறுவதுண்டு. உதாரணம் தண்ணீர், விறகு இப்பொருள்களுக்கு பயன்மதிப்பு உள்ளது. ஆனால் மாற்று மதிப்பு கிடையாது.**

**கிடைப்பருமை உள்ள பொருள்கள் செல்வப் பொருள்கள் ஆகும். இவை மனிதனின் முயற்சியில் உருவானவை. மனிதனின் தேவையை விட குறைவாகவே**

இவற்றின் அளிப்பு உள்ளது. பழங்கள், பால், முட்டை, கோதுமை, அரிசி, எழுதுப்பொருள்கள், துணி போன்றவை. இவை பற்றாக்குறை உடையவை. இவற்றை நாம் விலைக்கொடுத்தே வாங்க வேண்டும். எனவே இவை விலைதரும் பொருள்கள் என்று அழைக்கப்படுகின்றன. இதற்கு பயன்மதிப்பும் உண்டு. மாற்று மதிப்பும் உண்டு'8.

'மனிதனுடைய சாதாரண அன்றாட வாழ்வியல் நடவடிக்கைகள் பற்றியது பொருளாதாரம் ஆகும். மனித நலத்தை மேம்படுத்த உதவும் பண்ட உற்பத்தி நடவடிக்கையோடு மட்டுமல்லாது பண்டங்களை எவ்வாறு பெற்று பயன்படுத்துவது என்பதோடும் நெருங்கிய தொடர்புடையது பொருளாதாரமாகும். இவ்வகையான தனிமனித மற்றும் சமூக நடவடிக்கைகள் பற்றிய ஆய்வே பொருளாதாரம் ஆகும் என்று ஆல்பர்ட் மார்சல் கூறுகிறார்'9

'பணத்தைக் கொண்டு அளவிட முடிகின்ற பொருள்கள் நலம் பற்றியது பொருளாதாரம் என்கிறார் பிகு'10. இலயனல் கிராபின்ஸ் 'மனிதனின் விருப்பங்களுக்கும் பல பயன்பாட்டு வழி வகைகளுக்குமிடையே தோன்றுகின்ற மனித ஒழுகலாற்றினைப் பற்றி ஆராய்கின்ற அறிவியலே பொருளாதாரம்'11 என விளக்கம் தருகிறார்.

## 3.2 சங்க இலக்கியத்தில் பொருளாதாரச் சிந்தனைகள்

பொருளாதார வட்டத்திலிருந்து பிரிக்க முடியாத நெருங்கிய தொடர்புடைய மனித சமூக வாழ்வியலே அனைத்து வகை இலக்கியப் படைப்புகளின் உள்ளடக்கமாக இருக்கிறது. இலக்கியம் படைத்தவர்கள் அக்காலக்கட்ட மனிதர்களின் வாழ்வியல் முறைகளை எடுத்துக் காட்டி இருக்கிறார்கள்.

சங்க கால புலவர்களின் கண்ணோட்டத்தில் பொருளியல் சிந்தனை உயர்வான கருத்துக்களை உள்ளடக்கியதாகவே இருந்திருக்கிறது.

'வாழ்க்கைத் தரம் என்பது ஒரு மனிதனோ, குடும்பமோ, நாட்டு மக்களோ எந்த அளவு அவர்களுடைய விருப்பங்களை நிறைவு செய்கிறார்களென்பதை குறிப்பிடுகின்றது. ஒரு குறிப்பிட்ட காலத்தில் நாம் நுகரக்கூடிய இன்றியமையாத பொருள்கள், வசதிப் பொருள்கள், ஆடம்பர பொருள்கள் ஆகியவற்றின் கூட்டு மொத்தத்தைக் குறிப்பதற்காக நாம் வாழ்க்கைத் தரம் என்ற சொல்லை

**பயன்படுத்துகிறோம். இதற்கு நுகர்வுப் பெட்டி (Consumption Basket) என்றும் பெயர்'12**

வாழ்க்கைத் தரத்தினை உயர்த்துவதற்காக மட்டுமின்றி சங்கத் தமிழர் அறம் செய்வதற்காகவும் பொருளீட்ட முற்பட்டான். தான் வசிக்கும் பகுதிகளில் மட்டுமின்றி அயல்நாடுகளுக்கும் பயணம் மேற்கொண்டான் என்பதை அறியமுடிகின்றது.

**"முதியவர் சுமந்து செல்லும் பெரும்சுமை அவருடைய காலியான பணப்பை தான்"13** என்று முதுமையில் வறுமையை குறிப்பிடுவர். இதனையே,

**"அருள் இல்லார்க்கு அவ்வுலகு இல்லை**
**பொருளில்லார்க்கு இவ்வுலகு இல்லை'14** என்பார் திருவள்ளுவர்.

**'கொடுப்பதினாலும், அனுபவிப்பதினாலும் பயன்பெறுவது பொருள்'15** என்று வியாசர் பாரதம் குறிப்பிடுகின்றது. மேலும் சந்தோசம் உடைய மனிதன் என்று குறிப்பிடும்பொழுது **'கடனில்லாமை, நாடுவிட்டு நாடு செல்லாமை, கிடைத்தவற்றை கொண்டு தன் வீட்டில் சமைத்து சாப்பிடுதல் இவற்றைக் கைக்கொண்ட மனிதனே சந்தோசமுடைய மனிதன்'16** என்று பொருளியல் சக்தியை நிர்ணயிக்கின்றது.

நம் மூதாதையர்கள் செல்வத்தை பிற்கால சேர்க்கைகளுக்காக தேடி அலையவில்லை. தம் சுற்றத்தாரோடு பகிர்ந்து அறம் செய்யவே விழைந்தனர். செல்வத்தின் மேல் பெரும் பற்றுதல் தனிப்பட்ட முறையில் அவர்களுக்கு இருக்கவில்லை. செல்வம் சேர்த்து வைப்பதென்பது துன்பம் தரும் செயலாகவே போதிக்கப்பட்டது. அது நிலைக்காது என அறிவுறுத்தப்பட்டது.

**'உண்ணாது வைக்கும் பெரும் பொருள் வைப்பின்னர்'17** என்று கபிலர் குறிப்பிடுகின்றார். மேலும் இளமையில் வறுமை கொடியது என்பதை **'வளமையிலாளர் வனப்பின்னர்'18** என்று செல்வமில்லாதவருடைய வனப்பும் துன்பம் தரும் என்கிறார்.

**'நெடுமாட நீணக்கர்க் கைத்தின்மை யன்னர்'19** என்று நகரத்தில் செல்வமின்றி வாழ்வது இனிமையைத் தராது என்ற பொருள்படக் கூறுகிறார்.

மேலும்,

**‘அறுசுவையுண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட**

**பறுசிகை நீக்கியுண்டாகும் - வறிஞராய்ச்**

**சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழ் எனின் செல்வம் ஒன்று**

**உண்டாக வைக்கற்பாற் றன்று’20**

என்று நாலடியார் கூறுகிறது. மேலும் செல்வம் நிலையில்லாதது என்று

**‘அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்**

**சகடக்கால் போல வரும்’21**

**‘வினையே ஆடவர்க்கு உயிரே’22** என்று வினை செய்தல் என்பது ஆடவர்களுக்கு உயிரைப் போன்று பேணப்படும் ஒன்றாகும் என்பதையும் அறிந்திருந்தனர்.

**‘அவரே கேடுஇல் விழுப்பொருள் தருமார்’23**

என கேடற்ற சிறந்த செல்வத்தைத் தேடித் தருவதன் பொருட்டுப் பிரிந்ததாகவும் கூறுகின்றான்.

பருக்கைக் கற்களையுடைய காட்டுத் தீயானது பரவியிருக்கப்பட்ட காட்டினைக் கடந்தும் போய் அனைவருக்கும் உதவப் பொருளினைத் தேடும் பொருட்டு செல்வத்தை

**‘மரிபரல வாகி முரணழிந்த தோன்றி**

**யெரிபரந்த காண மியைபொருட்டுப் போவீர் என்றும்**

**‘எறும்பி அளையின் குறும்பல் சுனைய**

**உலைக்கல் அன்ன பாறை ஏறிக்**

**கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்’24**

என்றும்

**‘வெந்திறற் கடுவளி பொங்கர்ப் போந்தென**

**நெற்றுவிளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்**

**மலையுடை அருஞ்சுரம் என்ப’25**

என்றும் சங்க இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன.

## பொருளீட்டுவதின் அவசியம்

தலைமுறைகளுக்காக சேர்த்து வைக்க வேண்டி பொருளீட்டுவதைத் தான் தவறு என்று வெறுத்தொதுக்கினர். ஆனால் தன் குடும்பம், தன் சுற்றம், தன்னை நாடி வந்தவர்க்கு அறம் செய்யும் பொருட்டு பொருளீட்டுவதை அவசியமாகவே கருதினர். இதனை

**'நான் உடைமையின் நீங்கி, சேய் நாட்டு**
**அரும்பொருள் வலித்த நெஞ்சமொடு ஏகி26**

என்ற மாமூலனார் வரிகள் உறுதிப்படுத்துகின்றன.

செல்வத்தைப் போல் வலிமையானது ஒருவருக்கு வேறில்லை என்பது

**'திருவின் திறலுளைய தில்லை – ஒருவற்கு'27**

என்ற வரியும் செல்வ வாழ்க்கையோடு ஒப்பான அழகு இல்லை என்பதை

**'வளமையோ டொக்கும் வனப்பில்லை28**

என்றும், மேலும்

**'கைத்தில்லார் நல்லவர் கைத்துண்டாய்க் காப்பாரின்**
**வைத்தாரின் நல்லர் வறியவர்29**

என்றும் நான்மணிக்கடிகை குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கது.

செல்வமே இம்மைக்கு வேண்டிய சரீரா் பலத்தையும், செல்வாக்கையும் பூரண ஆயுளையும், மறுமைக்கு வேண்டிய தூய ஒழுக்கத்தையும் தரும் என்று பொருள்பட

**'மெய்வலியுஞ் சென்னிலையும் வாழ்நாளுந் தூவொழுக்கு**

**மெய்யா வளிக்கும்'30**

என்றும் துறவிகளும், பிறரால் மதிக்கப்படுவதற்கு செல்வமுடையவராக இருத்தல் அவசியம் என்பதை

**'பட்டாங்குத் துயர் பழிச்சற் குரியரா**

**யொட்டின் றுயர வுலகத்தோர் - கட்டளை**

**யாம் வெறுக்கை யின்றி யமையாரர்31**

என்று இன்னிலைக் கூறுகிறது.

வரவு சுருக்கின் செலவைச் சுருக்கல் வேண்டும் என்றும் ஆடம்பரச் செலவுகள் செய்யாமல் தம் வருமானத்தில் ஐந்தில் ஒரு பாகத்தைச் சேமிக்க வேண்டும் என்பதை

**‘எய்ப்பில்லைப் பாக வருவாயி லைந்தொன்றை**
**மெய்ப்பின் சேய்வரைவிற் கூட்டிடுக – கைப்பொருள்வா**
**யிட்டிலுய் வாயிடுக்க வீங்க விழையற்க**
**வட்டன் மனைக்கிழவன் மாண்பு’32**

என்ற பாடலால் முடிகின்றது.

**‘இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை**
**எல்லாரும் செய்வர் சிறப்பு’33**

என்று கைப்பொருள் இல்லாரை பகடி செய்வர். செல்வரை எல்லோரும் போற்றுவர் முறையோடு நல்வழியில் சேர்த்தப் பொருள் அறத்தையும் இன்பத்தையும் தரும்

**‘அறன் ஈனும் இல்லமும் ஈனும் திறன் அறிந்து**
**தீதின்றி வந்த பொருள்’34**

என்று வள்ளுவர் கூறுகின்றார்.

நாட்டின் செல்வம் குடிகளுக்கே உரியது என்று அக்காலக் கோட்பாடுகளுக்கு மாறானப் புரட்சிக் கருத்தையும் கம்பன் எடுத்துக் கூறுகின்றார்.

**‘கலம் சுரக்கும் நிதியம் கணக்கிலா**
**நிலம் சுரக்கும் நிறைவளம் நல்மணி**
**பிலம் சுரக்கும் பெறுதற்கு அரியநம்**
**குலம் சுரக்கும் ஒழுக்கம் குடிக்கு எலாம்’35**

கலமும், நிலமும், பிலமும் தரும் செல்வமெல்லாம் குடிமக்கள் அனைவருக்கும் உரியது என்பதை கம்பன் இப்பாடல் மூலம் கூறுகிறான்.

பொருளீட்டும் பொருட்டுத் தவறான வழியில் செல்லாமல் இருப்பது மிகவும் இனியதொரு செயலாகும் என்பதை இனியவை நாற்பதில் பூதஞ்சேந்தனார்

**‘குதர்சென்று கொள்ளாத கூர்மை யினிதே’36**

என்கிறார். அதோடு மட்டுமின்றி பிறருடைய கைப்பொருளை அபகரியாதவனாய் வாழ்வதும் இனியதான ஒரு வாழ்க்கை ஆகும் என்பதை,

**‘பிறன்கைப் பொருள் வெளவான் வாழ்த லினிதே’37 என்கிறார்.**

## 3.3. வாணிபம்

**‘மக்கள் தங்களிடையே பொருள்களைப் பரிவர்த்தனை செய்து கொள்வதை வாணிபம் என்கிறோம். இது உள்நாட்டு வாணிபம், வெளிநாட்டு வாணிபம் என்று பிரிக்கலாம். ஒரே நாட்டை சார்ந்த மக்களிடையே நடைபெறும் வாணிபத்தை உள்நாட்டு வாணிபம் எனலாம். இரு வேறு நாடுகளைச் சார்ந்த மக்களிடையே நடைபெறும் வாணிபத்தைப் பன்னாட்டு வாணிபம் எனலாம். அதாவது ‘ஒரே அரசியல் எல்லைக்குள் வாழும் மக்களிடையே நடைபெறும் வாணிபம் உள்நாட்டு வாணிபம் எனப்படும். ஒன்றுக்கு மேற்பட்ட அரசியல் எல்லைக்குள் வசிக்கும். வணிகர்களிடையே நிகழும் வாணிபத்தை பன்னாட்டு வாணிபம்’38** எனலாம்.

ஒரு நாட்டில் தல வருமானமும், மொத்த வருமானமும் அந்த நாட்டின் வாணிகச் செழுமையிலே தான் இருக்கிறது. சிறப்பாக வாணிபம் நடைபெற்றால் அந்த நாடும் சிறப்பான நாடாக இருக்கும். பண்டையக் காலத்தில் வாணிகத்தில் சிறப்புற்றிருந்ததைக் காட்டும் கண்ணாடியாக சங்க இலக்கியங்கள் விளக்குகிறது.

தமிழ்நாட்டின் இரு கண்களாக உழவும், வாணிபமும் இருந்தன. இந்த இரு தொழிலும் குறைவின்றி இருந்ததை

**‘வியன்மேவல் விழுச்செல்வத்து**
**இருவகையான் இசைசான்ற**
**சிறுகுடிப் பெருந்தொழுவர்’39**

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. தரை மற்றும் கடல் வழி வாணிபத்தால் பொருளாதாரம் உயர்ந்து நாடு வளம் பெற்றிருந்தது.

சங்க காலத்தில் வணிகர்கள் ஒருங்கிணைந்து வாணிபம் செய்ததை ‘சாத்து’ என்ற பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளது. தரை வழியே பொருள்களை விற்பவனின் தலைவன் ‘மாசாத்துவான்’ என்ற பெயர் பெற்றார். கடல்

வாணிகத்தை ஒருங்கிணைத்து நடத்தியவன் ‘மாநாவிகன்’ (மானாய்கன்) என்று குறிப்பிடப்படுகின்றார்.

### 3.3.1. வணிகத்திற்கு அரசு தரும் ஊக்கம்

தமிழ்நாட்டில் வணிகர்களுக்கு அப்போதைய அரசர்கள் ஊக்கமளித்தும், கடல் வணிகர்களின் வசதிக்காக வாணிக கப்பல் வந்து செல்ல துறைமுகங்களையும், அதனைச் சுற்றி பட்டிணங்களையும் அமைத்துத் தந்தனர். துறைமுகத்தில் கப்பல்களுக்கு வழிக்காட்ட கலங்கரை விளக்கமும் அமைத்துத் தந்தனர். துறைமுகத்தில் ஏற்றுமதிக்குச் செல்லும் பொருள்களையும், இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களையும் களவு போகாதபடி பாதுகாக்கக் காவலர்களை நியமித்திருந்தனர்.

அரசர்கள் வணிகர்களை ஊக்குவிக்கும் விதமாக அவர்களுக்கு ‘எட்டி’ என்ற சிறப்பு பெயரை அளித்ததோடில்லாமல் சிறந்த வணிகர்களுக்கு ‘எட்டிப்பூ’ என்னும் தங்கப் பதக்கத்தையும் அளித்துச் சிறப்பித்தனர்.

சங்ககால வாணிபத்தை நினைவுப் படுத்தும் விதமாக,

**‘சீன மிசிரம யவன ரகம் - இன்னும்**
**தேசம் பலவும் புகழ்வீசிக் - கலை**
**ஞானம் படைத்தொழில் வாணிபமும் மிக**
**நன்று வளர்த்த தமிழ்நாடு’40**

என்று தமிழக வாணிபத்தைப் பெருமையுடன் கூறுகிறான் பாரதி.

### 3.3.2 வணிகர்

சங்ககால வாணிகர்கள் ஓதல், வேட்டல், ஈதல், உழவு, திரையோம்பல், வாணிகம் என்னும் அறுவகைத் தொழிலை வணிகர்கள் புரிந்தார்கள்.

**‘கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொடாது**
**பல் பண்டம் பகர்ந்து’41**

பொருளீட்டல் இவர்களது வாழ்க்கை நெறி என்று பட்டினப்பாலை கூறுகிறது.

வணிகர்கள் சிறப்பாக தம் தொழிலை பாகுபாடின்றி நீதி நெறியுடன் செய்து வந்தனர். கொள்வது மிகையும், கொடுப்பது குறையுமாகாமல் நல்ல வணிக முறையைக் கையாண்டு வருமானம் ஈட்டினர்.

பொருள்களை கொள்முதல் செய்தவிடத்து ஏற்பட்ட விலையை வேறுபடுத்தி அதிகமாகச் சொல்லி விற்பதை கொல்லர்கள் தெருவில் ஊசி விற்கின்ற வணிகரைப் போன்றவருக்கு உதாரணமாக கூறுகிறார் மாறன் பொறையனார்.

**'கொண்டுழிப் பண்டம் விலையொரீஇக் கொற்சேரி**
**நுண்டுளைத் தன்னூசி விற்பார்'42**

உற்பத்தி செய்யும் இடத்திலேயே அவ்உற்பத்தி பொருட்களை விலை அதிகம் வைத்து விற்ற பழக்கம் இருந்ததை அறியலாம்.

### 3.3.3. வாணிபப் பொருள்கள்

பழந்தமிழ் நாட்டில் வாணிகம் சிறப்புற்று இருந்த நிலையை சிலப்பதிகாரம் விரித்துரைக்கிறது. 'இந்திரவிழா ஊரெடுத்த காதையில்' மரூர்பாக்கத்தின் சிறப்பினை எடுத்துக் கூறும் இளங்கோவடிகள் அங்கிருந்த வாணிபப் பொருள்களை

**'வண்ணமும் சுண்ணமும் தண்ணுறுஞ் சாந்தமும்**
**பூவும் புகையும் மேவிய விரையும்**
**பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்**
**கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்**
**தூசும் துகிரும் ஆரமும் அகிலும்**
**மாசறு முத்தும் மணியும் பொன்னும்**
**......வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்**
**பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு**
**கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கி**
**பழுதில் செய்பினைப் பால் கெழுமாக்களும்'43**

மேலும் மதுரையிலிருந்த வணிக வளாகங்களில் பலப் பொருட்கள் விற்பனைக்கு இருந்தது என்பதை ஊர்க்காண் காதையில் இளங்கோவடிகள் விளக்கியிருக்கிறார்.

சங்ககால தமிழகத்தில் கூல வணிகம், மலையில் கிடைத்த பொருள்கள், கடல்சார் பொருள்கள், வணிகம் செய்யப்பட்டது.

நெல், புல், வரகு, திணை, சாமை, இருங்கு, துவரை, ராகி முதலிய கூல வாணிகப் பொருட்களும் உப்பு, வளை (சங்கு), முத்து, பவளம் என கடற்சார் பொருள்களும், ஏலம், பட்டை, இலவங்கம், கற்பூரம், யானைக்கோடு (தந்தம்) நீலக்கல் முதலிய மலைசார் பொருள்களும் அதனுடன் கரும்பு, மிளகு (கறி) போன்றவையும் அகில் சந்தனம் போன்றவையும் கள்ளும், மதுவும் விற்பனைப் பொருள்களாக இருந்தன.

### 3.3.4 வணிகர் தெரு

**‘செல்லா நல்லிசை யமரர் காப்பின்**
**நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**
**காலின் வந்த கருங்கறி மூடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**தென்கடல் முத்துங் குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
**ஈழத் துணவும் காழகத் தாக்கமும்**
**அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி**
**வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்**
**நீர்நாப் பண்ணு நிலத்தின் மேலும்**
**ஏமாப்ப இனிது துஞ்சிக்’44**

என்ற பட்டினப்பாலை பாடல் வணிகரின் வாழுமிடத்தை அழகாகச் சுட்டிக் காட்டுகிறது.

வெளிநாடுகளிலிருந்து கொண்டுவந்த பொருட்களை விற்பனைச் செய்யும் வணிகர்கள் வாழுகின்ற தெருவினை மதுரைக்காஞ்சி அழகாக குறிப்பிடுகின்றது.

**“பல்வேறு பண்டமொ டூண்மலிந்து கவினி**
**மலையவு நிலத்தவு நீரவும் பிறவும்**
**பல்வேறு திருமணி முத்தமொடு பெண்கொண்டு**
**சிறந்த தேளத்துப் பண்ணியம் பகர்நரும்’45**

### 3.3.5 கடைத்தெருக்கள்

வாங்குபவர்களும், விற்பவர்களும் சந்தித்து பொருட்களையோ, சேவைகளையோ பரிமாற்றம் செய்து அவற்றின் உரிமை மாற்றத்தை நிகழ்த்தும் இடத்தையோ, பகுதியையோ குறிப்பதே சந்தை எனப்படும். இது தற்காலத்தில் கடைத்தெரு எனப்படுகிறது.

இருந்தையூர் என்பது ஆதிகாலத்தே மிகவும் செழுமையான ஊராக திகழ்ந்திருக்கிறது. அதன் கடைத்தெருக்கள் பற்பல வகையான பொருட்களின் மிகுதியால் வளமையோடு காட்சியளித்துள்ளது என்பதை அறியமுடிகிறது.

**‘ஆங்கு ஒருசார் - உண்ணுவ, பூர்வ, பூண்ப, உடுப்பவை**
**மண்ணுவ, மணி பொன் மலைய, கடல,**
**இயல் கொள நண்ணியவை’46**

என்று பரிபாடல் குறிப்பிடுகின்றது.

இப்பாடலில் இடம்பெற்றுள்ள **‘மென்புலம் என்பது மருதமும், நெய்தலுமாகிய நிலப்பகுதி. வண்புலம் என்பது முல்லையும், குறிஞ்சியுமாகிய நிலப்பகுதி. இவற்றுள் தாமாகவே விளையும் பொருட்களை சேகரித்து கொணர்ந்து பிறருக்கு பயன்பட விற்போர் ‘களமர்’ ஆவர். இ∴தன்றி உழுது வித்து பயன்கொள்வோர் உழவர் ஆவார். இவ்விரு சாரார் ஆன உழைப்பாளர்களும் வாழ்கின்ற சிறந்த தெருக்களும் நகரின் பிறிதொருபுலத்தே விளங்கின’47** என்று இப்பாடல் விளக்குகிறது.

#### 3.3.5.1 நாளங்காடி

பொருட்களை விற்கும் தெரு ‘அங்காடி’ என்று அழைக்கப்பட்டது. பகல் நேரத்தில் விற்பனைச் செய்யும் அங்காடி ‘நாளங்காடி’ எனப்பட்டது. அங்கு விற்க விற்க பொருட்கள் குறையாமல் நிரம்பி இருந்ததை

'நாளங்காடி நனந்தலைக் கம்பலை' என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

**'கொளக்கொளக் குறையாது தரத்தர மிகாது**
**கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி**
**ஆடுதுவன்று விழவி னாடார்த் தன்றே**
**மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்**
**நாளங் காடி நனந்தலைக் கம்பலை48**

என்னும் பாடலில் நாளங்காடியில் எழும் பல்வேறு ஓசைகளை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### 3.3.5.2 அல்லங்காடி

இரவு நேரம் பொருட்களை விற்பனை செய்யும் கடைகளுக்குப் பெயர் 'அல்லங்காடி'.

**பல்வேறு புள்ளின் இசையெழுந் தற்றே**
**அல்லங் காடி அழிதரு கம்பலை49**

இரவு கடையில் விலை பேசி வாங்குவோர், விற்போரின் ஓசை பறவைகள் எழுப்பிய ஓசைக்கிணையாக குறிப்பிடுகிறது. நல்ல பாய்களை விரித்துக் கட்டப்பட்ட களங்களைக் காற்று கொண்டுவரும். அக்கலங்களிலிருந்து பொருள்கள் இறக்கப்படுகின்றன நகரத்தின் ஓசையும் பெரிய இடங்களையுடைய வெளிநாட்டு வாணிகர்கள் இங்கு செய்த அணிகளை விலைக்கு வாங்கிக் கொண்டு போவதாலும் இங்கும், அங்கும் சென்று பேசுவதாலும் எழும் ஓசையும், இணைந்து இரவில் கடலில் எழும் அலைகளின் ஒலியால் அங்கு வாழும் கடற்பறவைகள் கூட்டம் எழுப்பிய ஓசையினை ஒத்ததால் இரவங்காடியின் ஓசை விளங்கியதை

**'வாலிதை எடுத்த வளிதரு வங்கம்**
**பல்வேறு பண்ட மிழிதரும் பட்டினத்**
**தொல்லென் இமிழிசை மானக் கல்லென**
**நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுகப்50**

என மதுரைக் காஞ்சி குறிப்பிடுகின்றது.

#### 3.3.5.3 பல்வேறு கொடிகள்

**'கோடுபோழ் கடைநருந் திருமணி குயினரும்**
**சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்..**
**சிறியரும் பெரியருங் கம்மியர் குழீஇ**
**நால்வேறு தெருவினுங் காலுற நிற்றர்51**

என்ற பாடலானது சங்குகளை அறுத்து கடைந்து வளையல் செய்பவர்களும், வைரக்கல்லில் துளையிடுபவர்களும், பொன்னை உறைத்து வாங்கும் பொன் வியாபாரிகளும், புடவை விற்பனை செய்பவர்களும், செம்பினை எடை போட்டு வாங்குபவர்களும், பூக்களையும், மணந்தரும் சந்தனத்தையும், இவர்களைப் போல பிற பொருட்களை விற்பனை செய்பவர்களும் கடலில் உள்ள கரும்மணல் படிவுகளை விற்கும்படியான கூட்டமுடையதாக அங்காடிகள் இருந்ததை இப்பாடல் சுட்டிக்காட்டுகின்றது.

மீன் விற்கும் இடங்களிலும் இறைச்சியை விற்பனை செய்யும் இடங்களிலும், இறைவழிபாடு நடத்தி, தெய்வங்களுக்குப் பலி கொடுக்கும் இடங்களிலும் கொடிகள் கட்டப்பட்டிருந்தன.

**''ஊன்பொரிக்கும் ஒலிமுன்றில் மணற்குவைஇ மலர்சிதறிப்**
**பலர்புகுமனைப் பலிப்புதலின் நறவுநொடைக் கொடியோடு**
**பிறபிறவு நனிவிரைஇப்**
**பல்வே றுருவிற் பதாகை நீழல்'**

**''செல்கதிர் நுழையாச் செழுநகர் வரைப்பிற்'52**

என்று விரித்துரைக்கின்றது.

#### 3.3.6. உள்நாட்டு வாணிகம்

கடற்சார்ந்த பொருட்களும் வியாபாரம் செய்யப்பட்டன.

இந்த உள்நாட்டு வியாபாரமானது பண்டமாற்று வாணிகமாகவும், நாணயமாற்று வாணிகமாகவும் நடைபெற்றமையை சங்க நூல்கள் ஆங்காங்கே குறிப்பிட்டிருக்கின்றன.

**‘பண்ட பரிவர்த்தனை முதலில் பக்கத்திலிருக்கும் சமூகங்களுக் கிடையிலும், அதற்குப் பிறகு சமூகத்திற்குள்ளேயும் தொடங்கி சமூகத்தின் உறுப்பினர்களின் உடமை மற்றும் வர்க்க ரீதியான வகைப்படுத்துதலை வளர்த்தது’**53 என்று பொருளாதார வல்லுநர்கள் கூறுகின்றார்கள்.

### 3.3.6.1 பண்டமாற்று வாணிபம்

ஐவகை நிலங்களாகிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவற்றில் மருதநிலத்தில் தான் தமிழரின் நாகரீகமும், பண்பாடும் தழைத்தோங்கியிருந்தன. ‘மேல்நாட்டு ஆராய்ச்சியாளர்கள் தமிழ்நாட்டின் கடற்கரையிலே கடலில் மூழ்கிய நகரத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்து அந்த நகரம் மிகவும் பழமையான நாகரீகம் உள்ள மனிதர்கள் வாழ்ந்தது சுமார் 7000 ஆண்டுகள் பழமையானது என்று கணித்துக் கூறுகின்றார்கள். சரித்திரத்திலே பழமையான நாகரீகம் என்று கூறப்பட்ட மொகஞ்ஜதாரோ, ஹரப்பா நாகரீகங்கள் 500 ஆண்டுகள் பழமையானவை. அதற்கும் 2000 ஆண்டுகள் முன்பாகவே அந்த அளவு நாகரீகத்துடன் நம் நாடு இருந்துள்ளது.’54 என்று வரலாற்று ஆய்வாளர்கள் கூறுகின்றார்கள்.

தங்கள் நிலத்தில் கிடைத்தப் பொருட்களை அல்லது தமது உழைப்பின் மூலம் கிடைத்தப் பொருட்களை, வேற்று நிலத்தவரிடம் கொடுத்து அதற்குப் பதிலாக தமக்குத் தேவையான பொருள்களைப் பெற்றுக் கொண்டமையே பண்டமாற்று முறையாகும். இம்முறையே சங்ககால மக்களிடம் பரவி இருந்திருக்கிறது.

**‘கான்உறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்**
**மான்தசை சொரிந்த வட்டியம், ஆய்மகன்**
**தயிர்கொடு வந்த தசும்பு நிறைய**
**ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்**
**குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்**
**முகந்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்**55

என்ற கோவூர்க்கிழார் பாடல் வரிகள் வேட்டுவர், மான்கறியையும், ஆய்மகன் தயிரும், உழவர் வீட்டில் கொண்டு வந்து தருவர். அதை ஏரினால் வாழ்பவரின் பெண்கள் குளத்திற்கு கீழ்ப்புற வயல்களில் விளைந்த களங்கொண்ட வெள்ளை

நெல்லை முகந்து முகந்து அவ்வட்டியும், பானையும் நிறைய கொடுத்ததையும், அவரும் அதைப் பெற்று மகிழ்ந்து சென்றதையும் எடுத்துக் கூறுகின்றது.

சங்ககாலத் தமிழர்களைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அதற்கு மதிப்பு கொடுத்த போதிலும் அதை ஓர் அத்தியாவசியப் பொருளாகவே கருதவில்லை என்பதை,

**'அளவிலை உணவிற் கிளையுட னடுத்தி**
**நெய்விலைக் கட்டி பசும்பொன் கொள்ளாள்**
**எருமை நல்லான் கருநாகு பெறூஉம்**
**மடிவாய்க் கோவலர்'56**

என்ற பெரும்பாணாற்றுப் பாடலால் விளங்கும். அதாவது மோரை விற்று பெற்ற நெல் முதலான உணவுப் பொருட்களைக் கொண்டு தன் உறவினர்கள் அனைவருக்கும் உண்ணக் கொடுத்து பின்பு நெய் விற்றதற்குப் பொருளாக பசுமையான கட்டித் தங்கத்தை பெறாமல் அதற்காக பசுக்களையும், எருமைகளையும் கோவலர்கள் பெற்றுக் கொண்டதை எடுத்துரைக்கிறது.

பால், அரிசி, கேழ்வரகு, வரகு, திணை ஆகியவற்றிற்கு கூழ் பெற்றதையும், தயிருக்கும், மோர்க்கும் தானியம் பெற்றதையும்,

**'பாலொடு வந்து கூழொடு பெயரும்**
**ஆடுடை இடை மகன் சென்னி57**

என்ற பாடல்களால் அறியலாம்.

தன் நாட்டில் விளைந்த நெல்லுக்கு உப்பினை பெற்றுக் கொண்டமையை

**'நம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து**
**பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி58**

என்று மீனையும், உப்பையும் கொடுத்து நெல்லையும், கள்ளையும் பால் பொருள்களையும், தேனையும் பிரதிப்பொருளாக பெற்றமையை

**'பசுமீன் நொடுத்த வெண்நெல் மாஅத்**
**தயிர்மீதி மிதவை ஆர்த்துவம் நினக்கே59**

பசுமையான மீனுக்கு விலையாக அரிசிமாவு பெறப்பட்டதை குறிப்பிடுகின்றது.

நெய்தல் நிலத்து பரதவர் போல மருத நிலத்து நீர் நிலைகளிலே மீன் பிடித்து விற்கும் தொழிலை பாணர் மேற்கொண்டிருந்தனர்.

பாண்மகள் மீனை வட்டில் நிறைய கொடுத்து, அதற்கு ஈடாக பெரும்பயறு (பயிறு வகையில் ஒன்று) வட்டில் நிறைய பெற்றுச் சென்றதை

**'முள்ளெயிற்றுப் பாண்மக வின்கெடிறு சொரிந்த**
**வகன்பெரு வட்டி நிறைய மனையோ**
**ளரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர**
**மாணிழை யாய மறியுநின்**
**பாணன் போல'60**

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

மீனைக் கொடுத்து பழைய நெல்லை வாங்கியதையும்

**'வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்**
**யாண்டுகழி வெண்ணெ விறைக்கு மூர்61**

**'அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்**
**சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்62**

என்ற பாடல் வரிகள் இவற்றை உணர்த்தும்.

**3.3.6.2 பணம்**

பண்டங்கள் வாங்கும் பொழுது அதற்கான செலுத்துத் தொகையாக பொதுவாக மக்களால் ஏற்றுக் கொள்ளப்படும் எதனையும் பணம் என வரையறை செய்யப்பட்டது. கடற்பாசிகள் முதல் தோல் காசுகள் வரை பணமாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. **'பணம் எவற்றையெல்லாம் செய்யவல்லதோ அதுவே பணம்' 63** என்று வாக்கர் வரையறை செய்கிறார். 'செல்வச் சுழற்சிக்கும் மதிப்பை அளவிடவும் உதவுகின்ற கருவியே பணம்'65 என ஆல்பிரட் மார்ஷல் கூறுகிறார்.

காசு, கானம், பொன் என்ற சொற்கள் சங்க இலக்கியத்தில் பயன்பட்டிருப்பதிலிருந்து இதை அறிய முடிகிறது. பெரும்பாலும் காசு என்பது பெண்கள் இடையில் அணியும் ஆபரணத்தைக் குறிப்பதாக இருந்தது.

**'பல் காசு நிரைத்த'65**

**'பொலங்காசு நிரைத்த'66**

என்ற தொடர்கள் இதனை தெளிவுப்படுத்துகிறது.

இப்பாடல் வரிகள் நகர்ப்புறங்களில் செம்பு, வெள்ளி, பொற்காசுகள் பயன்பாட்டிலிருந்ததைக் குறிப்பிடுகின்றது.

**'களங்காய் கண்ணி, நார்முடி சேரலைப் பாடிய காப்பியாற்றுக் காப்பியனருக்கு நாற்பது நூறாயிரம் பொன் (4 இலட்சம்) அவன் பரிசாகக் கொடுத்தான் என்று பதிற்றுப்பத்தில் 4ஆம் பத்து பதிகம் கூறுகிறது. இங்கு பொன் என்பது பொற்காசு என்று தோன்றுகிறது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மேல் 6ஆம் பத்து பாடிய காக்கைப் பாடினியார் நச்செள்ளையாருக்கு அவ்வரசன் நகை செய்து அணிவதற்காக ஒன்பது காசுப்பொன்னையும் நூறாயிரம் கானமும் (கானம் - அக்காலத்தில் வழங்கிய பொற்காசுகள்) கொடுத்தான். செல்வக் கடுங்கோ வாழியாதனை பாடிய கபிலருக்குப் பரிசாக அவ்வரசன் நூறாயிரம் கானம் வழங்கினான் என்று ஏழாம்பத்து பதிகம் கூறுகிறது. தகடூர் நெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை தன்னைப் பாடிய பெருங்குன்றூர் கிழாருக்கு முப்பதாயிரம் கானம் பரிசாக கொடுத்தான் என்பதை ஒன்பதாம் பத்து பதிகம் கூறுகிறது'67**

பட்டினப்பாலை பாடிய கடியலூர் உருத்திரகண்ணனாருக்கு சோழன் கரிகாலன் நூறாயிரம் கானம் பரிசாக வழங்கினான் என்ற இலக்கிய சான்றுகள் மூலம் கானம் என்னும் பொற்காசு வழக்கத்தில் இருந்ததை அறிவிக்கிறது.

செங்கம் என்னும் ஊரில் (தொண்டைநாடு) ஈயக் காசுகள் வழக்கத்தி லிருந்ததை அங்கிருந்து கிடைத்த பழங்காசுகளிலிருந்து அறிகிறோம். அந்த ஈயக்காசுகளில் பிராமின் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருப்பதனால் அவை கடைச்சங்க காலத்தில் கி.பி. 2ம் நூற்றாண்டிற்கு முன்பு வழங்கி வந்தது என்பது தெரிகிறது. அதை போல் **'பழைய தமிழ்நாடான சேரநாட்டிலே திருவனந்த**

**புரத்துக்கு வடக்கே 150 மைல் தூரத்திலுள்ள பூஞ்சாரிலும், திருச்சூருக்கு வடமேற்கே 22 மைல் தூரத்திலுள்ள எய்யாவிலும், 1945ஆம் ஆண்டில் ரோம தேசத்து பழங்காசுகள் கிடைத்தன. கொங்கு நாட்டில் கரூர், காட்டன்கன்னி, குளத்துப் பாளையம், பென்னார், பொள்ளாட்சி, வெள்ளத்தூர் முதலான இடங்களிலும் பாண்டிய நாட்டின் மதுரை, கலியம்புத்தூர், கரிவலம், வந்தநல்லூரிலும் புதுக்கோட்டையை சார்ந்த கருக்காகுறிச்சியிலும், தஞ்சாவூர், மகாபலிபுரம் முதலான ஊர்களிலும் யவன நாணயங்கள் (ரோமாபுரி பழங்காசுகள்) கிடைத்துள்ளன. இக்காசுகள் அக்காலத்தில் நடந்த தமிழக யவன வாணிகத்திற்கு சான்றாக இருக்கின்றன.68**

### 3.3.6.3 அயல்நாட்டு வாணிகமும், கடல் வாணிகமும்

கடல் கடந்து சென்று வாணிபம் செய்தனர். இதற்கு மரக்கலங்களையும், நாவாய்களையும் பயன்படுத்தினர்.

**‘பண்டைய தமிழர்கள் சோம்பித் திரிந்தவர்கள் அல்லர். உழைத்து, உழைத்து, வாழ்க்கையில் இன்பம் காணுவதிலேயே கண்ணும், கருத்துமாய் விளங்கியவர்கள். அவர்கள் மழைகளுடனும் காடுகளுடனும், கடலுடனும் கலந்து உறவாடினார்கள். மேற்கு கிரீஷ், ரோம், எகிப்து, பாலஸ்தீனம், மெசபமோனியா, பாபிலோனியா ஆகிய நாடுகளுடன் பண்டைய தமிழர்கள் வாணிபத் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தனர்’69**

அரிக்கமேடு பழம்புதையல் பொருள்களினால் வரையறுக்கப்படும் காலநிர்ணய ஆதாரத்தையும், பண்டைய தமிழ் நூல்களிலிருந்து கிடைக்கும் வரலாற்றுக் குறிப்புகளையும், அறிவிலும், ஆராய்ச்சியிலும் சிறந்த, அயல்நாட்டுப் பிரயாணிகள் வரைந்து வைத்த கருத்துக்களையும், நில வல்லுநர்கள் கண்ட முடிவுகளையும் சீர்தூக்கிப் பார்த்தால் கி.பி. முதல் நூற்றாண்டுக்குள் தமிழ் நாகரிகம் சிறந்த முற்போக்கு நிலையை அடைந்திருக்கிறது எனத் தெரிகிறது.

**‘பாலஸ்தீனத்தை கி.மு. 8வது நூற்றாண்டில் ஆட்சிப் புரிந்த சாலமனுக்கு மூன்றாண்டிற்கு ஒருமுறை பல அரிய பொருள்கள் பரிசுகளாகக் கப்பலில் அனுப்பப்பட்டு வந்தன. அவை தங்கம், வெள்ளி, தந்தம், குரங்குகள், மயில்கள், சந்தனக் கட்டைகளும் தமிழகத்திலிருந்து சென்றிருக்க வேண்டும். ஏனென்றால் அவற்றை குறிக்க ஹிப்ரோ மொழியில் வழங்கும் சொற்களாகிய துக்கீம்,**

**ஆல்மக் என்பன முறையே தமிழ்ச்சொற்களாகிய தோகை, அகில் என்பனவற்றிலிருந்து தோன்றின என்பதற்கு அய்யமில்லை'70** என்று வரலாற்று ஆய்வாளர்கள் உறுதிப்படுத்தினர்.

ஐரோப்பாவோடு தென்னிந்தியா ஏறத்தாழ கி.மு. 500 முதல் வாணிகம் தொடங்கியதாக ஆய்வாளர்கள் குறிப்பிடுகிறார். தென்னிந்தியப் பொருள்களை மேற்கு ஆசியாவிலிருந்து பெற்று ஐரோப்பாவிற்கு எடுத்துச் சென்று விற்பனை செய்தவர்கள் கிரேக்கர்களே. ஆகையால் தென்னிந்தியப் பொருள்கள் பலவற்றில் தமிழ்ப்பெயர்கள் கிரேக்க மொழியில் புகுந்தது.

சோபாக்கிளிஸ், அரிஸ்டோமேனிஸ் முதலியோர்களின் நூல்களில் இப்பெயர்கள் நுழைந்து விட்டன. தமிழ் **'அரசி'யிலிருந்து கிரேக்க ஒரிசியும், கறுவாயிலிருந்து கற்பியலும். இஞ்சி வேரிலிருந்து சிக்கி பெரோஸ்ம், பிப்பிலியிலிருந்து பெப்பரியும் அவ்விதம் பெயர்ந்து சென்ற மொழிகளாகும்'71**

**'தென் இந்தியாவில் பல இடங்களில் தோண்டியெடுத்த நாணயங்களும், ஐரோப்பாவோடு நடந்த வாணிகத்தை விளக்குகின்றன. மலபார் கடற்கரையில் பல துறைமுகங்கள் திகழ்ந்தன. அவற்றுள் டிண்டிஸ் (தற்போதைய பொன்னானி), முசிறி (கிராங்கனூர்), நெல்கின்றா (கோட்டயம்), குமரி முதலியன சிறந்தவையாம். கிழக்கு கரையில் கொல்கோய் (கொற்கை), நிகமா (நாகப்பட்டினம்), காமறா (காவிரி பூம்பட்டினம்), பொதுகை (புதுச்சேரி), சொபத்மா (மரக்காணம்), ஒரிஸ்ஸாவிலுள்ள தசார்ணா முதலியவையாகும். மேற்குகரையில் தொண்டி, முசிறி தவிரப் பந்தரையும், கிழக்குக் கரையில் காவேரி பூம்பட்டினத்தையும், சாலியூரையும், சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன'72**

மேல் நாடுகளோடு வாணிகம் செய்ததுமன்றி, அதே காலத்தில், இந்தியர் கீழ் நாடுகளோடும் வாணிகம் ஊக்கமாய் நடத்தி வந்தனர். **'கிழக்கில் சீனாவோடு தென் இந்தியா நீண்ட காலத்திற்கு முன்னமே வாணிகம் தொடங்கியது. கி.மு. ஏழாவது நூற்றாண்டிலேயே சீனாவிற்கு இந்தியப் பொருள்கள் சென்றதாகச் சீன வரலாறுகள் கூறுகின்றன. தமிழில் பட்டுக்கும் சீனமென்றும், சர்க்கரைக்குச் சீனி என்றும் வழங்கி வரும் பெயர்கள், சீன நாட்டுடன் சோழர்கள் வெகுகாலமாக கடல் வியாபாரத்துக்குப் பேர் போனவர்கள். அவர்களுடைய மெல்லிய வஸ்திரங்கள் பிறநாட்டினரால் பெரிதும் விரும்பப்பட்டன. அவர்களுடைய**

**துறைமுகப்பட்டினமாகிய காவிரிப் பூம்பட்டினத்தில் கப்பல்கள் சரக்குகளை ஏற்றிக் கொண்டு தூர தேசங்களுக்கு ஓயாமல் போய் வந்து கொண்டிருந்தன. அங்கே யவனர் அல்லது கிரேக்கர்களின் குடியேற்றம் இருந்ததாக தெரிகிறது. மகாபாரதமும் சோழர்களைப் பற்றி பேசுகிறது'73**

யவனர்கள் பொன்னைக் கொடுத்து நமது நாட்டில் விளைந்த மிளகினைக் கொண்டு சென்றதை

**'யவனர் தந்த வினைமான் னன்கலம்**
**பொன்னொடு வந்து கறியோடு பெயரும்' 74**

என்றும்,

**உலகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்**
**புலவுத்திரைப் பெருங்கடல் நீர்இடைப் போழ்'75**

என்று நாவாய்களைக் கொண்டு இரவும் பகலும் பாராமல் கடல் வாணிகம் செய்ததை எடுத்துரைக்கின்றது.

வடநாட்டவர் வட்டக்கல் கொண்டு வந்து தமிழ்நாட்டில் விற்றதையும், யவன நாட்டில் வாழ்பவர்களால் செய்யப்பட்ட தொழில் நுணுக்கம் உடைய பாவை தன் கையில் ஏந்தியிருக்கின்ற அழகு பொருந்திய விளக்கினை விற்றதையும் சங்க இலக்கியங்கள் தெளிவுப்படுத்துகின்றன.

**'வடவர் தந்த வான்கேழ் வட்டம்'76**

**'குடபுல உறுப்பின் கூட்டு நிகழ்த்திய**
**வண்டிமிர் நறுஞ்சாந்து அணிகுவம்' 77**

**'யவனர் இயற்றிய வினைமாண் பாவை**
**கையேந் தையகல்'78**

**'பாவை விளக்கு பசும்பொற் படாகை'79**

என்ற வரிகளாலும் அறியலாம்.

யவன நாட்டு ஓதிம மற்றும் பாவை விளக்குகள் வருவற்கு முன் தமிழக மக்கள் மண் மற்றும் இரும்பால் செய்த விளக்குகளையே பயன்படுத்தினர்.

**‘இரும்புசெய் விளக்கு’80**

யவன வணிகர்கள் மட்டுமின்றி இலங்கை மற்றும் அரபு தேசத்தைச் சேர்ந்த வணிகர்களும் மற்றும் பல மொழிகள் பேசும் வணிகர்களும் தமிழகத்திற்கு வந்து வியாபாரம் செய்ததை

**‘புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்**
**முட்டாச் சிறப்பிற் பட்டினம்’81**

என்ற பாடல் பறைசாற்றுகிறது.

ஒருமித்த சில சொற்களைப் பார்க்கும் பொழுது தமிழர்களுக்கும் பிரெஞ்சு நாட்டவர்க்கும் ஆதிகாலத்திலே தொடர்பு இருக்கும் என எண்ணத் தோன்றுகிறது.

கி.மு. 8-ம் நூற்றாண்டிற்கு முன்பே தமிழர் கடல் வாணிகம் செய்து கொண்டிருந்தார்கள்.

**‘எங்கோ வாழிய குடுமி தங்கோச்**
**செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த**
**முந்நீர் விழவின் நெடியோன்**
**நன்னீர்ப் ப∴றுளி மணலினும் பலவே’82**

என்ற பாடல் சங்ககால பாண்டியர்களில் ஒருவர் மூன்று நீர் சேருமிடத்தில் (கடல்) கடற்தெய்வத்திற்கு விழா எடுத்தது என்று தெரிய வருகிறது.

தமிழக துறைமுகங்களான பூம்புகார், கொற்கை, தொண்டி மற்றும் சோபட்டினம் ஆகிய இடங்களிலிருந்து நாவாய்க்களின் மூலம் கிழக்கு கடற்கரை ஓரமாகச் சென்று நெல்லூர், கலிங்கப்பட்டினம் தம்ரலிப்தி, முதலிய பட்டினங் களுக்குச் சென்று வணிகம் செய்திருந்தனர். கங்கையாறு கடலில் கலக்கிற புகார் முகத்தின் ஊடே கங்கையாற்றில் நுழைந்து கங்கைக் கரையில் இருந்த பாடலிபுத்திரம், காசி முதலான ஊர்களில் வாணிகம் செய்து திரும்பியதை

**‘கங்கை வங்கம் போகுவர் கொல்லோ’83**

என்று நற்றிணை கூறுகிறது.

**‘வேறு பல் நாட்டில் கால்தரவ ந்த**
**பல் உறு பண்ணியம் இழிதரு நிலவுமணல்’84**

என்ற நக்கீரனார் பாடல் வரிகள் பல நாட்டிலிருந்தும் களங்களைக் காற்றால் செலுத்தி வந்திருந்த பலவகை பண்டங்களைக் குறிப்பிடுகின்றது.

#### 3.3.6.3.1 கடல் வாணிகர்

'நாவாயில் கடல் வாணிகம் செய்தவர் நாவிகர் எனப்பட்டனர். இவர்கள் பெரிய நாவிகள், மாநாவிகள்' என்று பெயர் பெற்றனர். மாநாவிகள் என்னும் பெயர் மருவி மாநாய்கன் என்ற வழங்கப்பட்டது. (நாவாய் - மரக்கலம்) நாவாய்களில் வாணிகம் செய்தவன் நாவிகன். நாவிகன் என்பது நாய்கன் என்று மருவிற்று'.

ஒரு மாநாய்கனுடைய மகள்தான் சிலப்பதிகார காவியத் தலைவி கண்ணகி என்பதை

**மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்**
**ஈகைவான் கொடியன்னாள் ஈராறாண் டகவையாள்**[85]

என்ற பாடலால் அறிய முடிகின்றது.

#### 3.3.6.3.2 கலங்கரை விளக்கம்

**'இரவின் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி**
**உரவுநீ ரழுவத் தோடுகலங் கரையுந்**
**துறைபிறக் கொழியப் போகி**[86]

என்ற பாடலானது இரவுப் பொழுதில் ஏற்றப்பட்ட விளக்கு எரிந்து பெருங்கடலில் திசை தவறிப் போன மரக்கலங்களைக் கரையை நோக்கி அழைக்கின்ற கலங்கரை விளக்கம் இருந்த நீர்ப்பாயல் துறைமுகத்தைச் சுட்டிக்காட்டுகிறது.

### 3.4 போக்குவரத்து

சங்க கால மக்கள் வாணிகத்திற்கு தரைவழிகளையும், கடல் வழியையும் பயன்படுத்தினர். ஏற்றுமதி, இறக்குமதி செய்வதற்காக துறைமுக வசதிகள் செவ்வனே இருந்ததை சங்க இலக்கிய வழி அறியமுடிகிறது.

### 3.4.1 தரைவழிப் போக்குவரத்து

சங்க காலத்தில் தரைவழி போக்குவரத்துக்கு எருது வண்டிகளையும், கழுதைகளையும், குதிரை வண்டிகளையும் பயன்படுத்தினர். பெரும்பாலும் அரசர்கள் தேர் இழுக்கவும், போருக்கு மட்டுமே குதிரைகளைப் பயன்படுத்தியதாக தெரியவருகிறது. வணிக நோக்கத்திற்காக பயன்பட்டதாகத் தெரியவில்லை.

அத்திரி என்ற வெளிநாட்டுக் கோவேறு கழுதைகள் செல்வந்தர்களின் ஊர்தியாகவும், பொதி சுமக்கவும், சரக்கு வண்டிகளை இழுக்கவும் பயன்பட்டது.

**'கழிச் சேற ஆடிய கணைக் கால் அத்திரி**
**குளம்பினும் சேயிறா ஒடுங்கின்87**

**'நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றைப்**
**புறம்நிறை பண்டத்துப் பொறை அசாஅக் களைந்த்88**

**''நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்**
**குறைக்குளம்பு உதைத்த கல்பிறழ் இயவின்'89**

என்ற சங்கப்பாடலால் அறியலாம்.

### 3.4.2. கடல்வழிப் போக்குவரத்து

உலகின் பிற பகுதி மக்கள் நிலையான வாழ்வின்றி அமைதியற்று வாழ்ந்த காலத்திலேயே தமிழர்கள் நல்ல அரசியல் அமைப்பினையும், சமுதாய ஒருமைப்பாட்டினையும், வாணிகச் சிறப்பினையும், இலக்கியச் செல்வத்தினையும் பெற்று வாழ்ந்ததாக தமிழாய்ந்த சான்றோர்கள் கூறுகிறார்கள்.

**'கடல், ஆர்கலி, முந்நீர்ப், பரலை, புணரி முதலிய கடலை உணர்த்தும் தூய தமிழ் சொற்களும், நாவாய், ஓடம், மரக்கலம், தோணி, தெப்பம், மிதவை, கலம், கப்பல் கட்டுமரம், திமில், அம்பி முதலிய மரக்கலத்தின் வேறு பெயர்களும் தமிழர் கடல் வாணிகத்தில் சிறப்புற்றிருந்தனர் என்பதற்கு சான்று பகரவல்லது'90**

மரக்கலம் வங்கம் எனப்பட்டது. இதனை

**'வால் இதை எடுத்த வளிதரு வங்கம்91**

என்ற வரியினால் அறியலாம்.

### 3.4.3. தமிழகத் துறைமுகப்பட்டினங்கள்

**‘மேற்கு கடற்கரை துறைமுகங்களாக நரவு துறைமுகப் பட்டினமும், தொண்டி துறைமுகமும், சேர நாட்டைச் சார்ந்த மாந்தையும், முசிறி துறைமுகமும், வைக்கரையும், பாண்டிய நாட்டில் விழிஞம் என்னும் துறைமுகப் பட்டினமும் இருந்திருக்கிறது்92**

துறைமுகங்கள் இருந்தது என்பதை சங்க இலக்கியமும் குறிப்பிடுகின்றது.

**‘தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத்**
**தொண்டியுள் தந்து கொடுப்பித்து்93**

என்று தொண்டி துறைமுகத்தை ஆறாம் பத்து பதிகம் குறிப்பிடுகின்றது.

**‘நல்நகர் மரந்தை முற்றத்து ஒன்னார்்94**

என்று மாந்தை துறைமுகத்தையும் குறிப்பிடுகின்றது.

**‘பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளம்கெழு முசிறி்95**

**‘புனல் அம் கள்ளின் பொலம்தார்க் குட்டுவன்**
**முழங்குகடல் முழவின் முசிறி்96**

என்று முசிறி துறைமுகப் பட்டினத்தையும், அங்கு ஏற்றுமதி இறக்குமதிக்காக குவித்து வைக்கப்பட்டிருந்த பொருள்களையும் குறிப்பிடுகின்றது.

**‘பொன் மலிந்த விழுப்பண்டம்**
**நாடார நண்கிழி தரும்**
**ஆடியற் பெருநாவாய்**
**மழைமுற்றிய மலைபுரையத்**
**துறைமுற்றிய துளங்கிருக்கைத்்97**

பெரிய கப்பல்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் மலை போல் குவித்து வைத்திருந்த நெல்லூர் துறைமுகத்தை இப்பாடல் சுட்டிக் காட்டுகின்றது.

இது மரூர்பாக்கம், பட்டினப்பாக்கம் என்னும் இரு பிரிவுகளை உள்ளடக்கியது. கடல் வாணிகம் பொருட்டு இங்கு சோனகர், சீனர், யவனர் இங்கேயே தங்கி தமிழர்களோடு இணக்கமுற பழகி வந்ததையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**'புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்**
**முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்'98**

என்ற பாடல் காவிரி பூம்பட்டினத்திற்கு வணிகத்தின் பொருட்டு பல நாட்டு மக்களும் குடியிருந்ததை எடுத்துரைக்கிறது.

**கொற்கை துறைமுகமும், முத்துத் தொழிலும்**

கொற்கைப் பட்டினத்தை ஒட்டியுள்ள கடலில் பரதவர் கொல்லும் தன்மையுடைய சுறாமீனை ஒதுக்கியவராக வலம்புரியில் முத்தினை எடுத்ததையும், அவர்களிடம் பெரிய படகுகள் இருந்ததையும் அதை எடுத்து வந்து கொற்கைப் பட்டினத்தில் சேர்த்த போது அவர்களுடைய அரிய தொழிற்பாட்டை கொற்கைபேரூர் ஆர்வமுடன் வரவேற்று போற்றிய சிறப்பினை

**'வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவற்**
**ஒலிதலைப் பணிலம் ஆர்ப்ப, கல்லென**
**கலிகெழு கொற்கை எதிர்கொள, இழிதரும்'99**

இப்பாடல் உணர்த்தும்.

கால வெள்ளத்தில் கொற்கைத் துறைமுகம் மண்மேடிட்டதாகக் கூறுகின்றனர். கொற்கையின் அருகில் கடலோடு கலந்த பொருநை நதி காலப்போக்கில் கொண்டு வந்த மண் கொற்கை துறைமுகத்தை மண் மேடாக செய்தது என வரலாற்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

கொற்கை கி.பி. 13ம் நூற்றாண்டிற்கு முன்பே தன் சிறப்பை இழந்து விட்டதாகவும் குறிப்பிடுகின்றனர்.

முத்துக்கள் கொடுக்கும் துறைமுகத்தில் பண்டங்கள் ஏற்றுமதி செய்வதற்கு மரக்கலங்கள் வந்து போக வசதியாக கடலில் பெரிய கால்வாய்கள் அமைக்கப்பட்டிருந்ததை

**‘கண்டிரன் முத்தம் பயக்கு மிருமுந்நீர்ப்**

**பண்டங்கொ னாவாய் வழங்குந் துறைவனே்100**

என்பதிலிருந்து உணரமுடிகிறது.

**தொண்டி**

சங்க இலக்கியத்தில் 23 பாடல்களில் தொண்டியைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. இவை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மேற்கு கடற்கரையிலிருந்த தொண்டி நகரமாகும்.

இப்பொழுது இராமநாதபுர மாவட்டத்திலிருந்து **“தொண்டி என்கிற கடற்கரை ஊர் உள்ளது. ஆனால் அந்தக் காலத்தில் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே மேற்கு கடற்கரையில் சேரனுக்குச் சொந்தமான ஒரு தொண்டி இருந்திருக்கிறது. இந்தியா வந்த கிரேக்கன் ஒருவன் எழுதிய பயண நூல் ‘பெரிப்ளுஸ்’. இது தோன்றிய காலம் கி.பி. 60 எனச் சொல்லப்படுகிறது. இதில் இந்த தொண்டியைப் பற்றி சிறப்பித்து சொல்லப் பட்டிருக்கிறது. கி.பி. 150ல் வாழ்ந்த டாலமின் என்பவர் எழுதிய நூலிலும் தொண்டி பற்றிய விவரணை வருகிறது.**

**விரைவிலேயே இந்த தொண்டியின் பெருவாழ்வு மங்கியது. ஆனால் அந்த நினைவு வெகுநாள் தமிழர்களின் நெஞ்சில் இருந்திருக்கிறது. இதன் விளைவாய் வாணிகம் செழிக்கக்கூடிய கடற்கரை பட்டிணங்களை தொண்டி எனப் பெயரிட்டு அழைத்திருக் கின்றனர். இப்படி சோழ நாட்டில் ஒரு தொண்டி தோன்றியிருக்கிறது. இது பற்றிய விவரம் சிலப்பதிகாரத்தில் காணப்படுகிறது. பாண்டிய நாட்டிலும் ஒரு தொண்டி கி.பி. 7ம் நூற்றாண்டில் தோன்றியிருக்கிறது. அதுவே இப்பொழுது இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள தொண்டி”101** என்கிறார் பேரா. வையாபுரிப்பிள்ளை.

தொண்டி கடல்முத்து உலகப் புகழ்ப்பெற்றது. **‘மூத்தம் (முத்து) முதலிய தமிழ்ச் சொற்கள் வடமொழியின் பழைய வேதமான இருக்கு வேதத்திலே இடம்பெற்றுள்ளன. ரோம் நாட்டு பெண்டிர் தமிழ்நாட்டு முத்தை பெரிதும் விரும்பினர். ஊலோலா என்னும் ரோம் நாட்டு அரசி 30000 தங்க நாணயத்திற்கு ஈடான முத்துக்களை அணிந்திருந்தாள். ரோம் நாட்டு மக்களின் இத்தகைய**

**ஆடம்பர வேட்கையால் அந்நாட்டுப் பொருளாதார நிலைமை மிகவும் பாதிக்கப் பட்டதாக 'பெரிப்ளுஸ்' நூல் குறிப்பிடுகிறது'102**

**'ஆண்டொன்றுக்கு ரோம் நாடு தான் இந்தியாவிலிருந்து பெரும் ஆடம்பர பொருளுக்காக மில்லியன் பவுனுக்கு ஈடான பொன்னை வாரி வழங்கி வறுமையுற்று விடுகிறதே என ரோம் நாட்டு வரலாற்று ஆசிரியர் வருந்திக் கூறினார்'103**

**எயில் பட்டினம் (மாமல்லபுரம்)**

**'மாமல்லபுரமே பல்லவர் காலத்தில் சிறந்த துறைமுகமாக் இருந்ததை யுவான்சுவாங் கூறியுள்ளதை'104**

**கலங்களியங் குல்மல்லைக்**
**கடன்மல்லைத் தலசயனம்'105**

என்ற பெரிய திருவந்தாதிப் பாடல் தொண்டைநாட்டில் மாமல்லபுரம் சிறந்த துறைமுகமாக இருந்ததை குறிப்பிடுகின்றது.

**எயில் பட்டினத்தின் சிறப்பை**

**கானல் வெண்மணல் கடலுலாய் நிமிர்தரப்**
**பாடல் சான்ற நெய்தல் நெடுவழி**
**மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய**
**பனிநீர்ப் படுவிற் பட்டினம் படரின்'106**

என்று சிறுபாணாற்றுப்படை எடுத்துரைக்கிறது.

## 3.5 தொழில்கள்

தொழில் என்பது உற்பத்தி தொழில், விவசாயம், விவசாயம் சார்ந்த தொழில், வியாபாரம், போக்குவரத்து போன்ற பல செயல்களைக் குறிக்கின்றது. தனிநபர் செய்யும் தொழில் சுயத்தொழில் எனப்படுகிறது.

தொழில் என்பது மனித குலத்தின் தேவையான உணவு, உடை, இருப்பிடம், பிற வசதிகள் போன்றவற்றைப் பெறுவதற்காக மனிதர்கள் ஆற்றும் செயல்களை குறிக்கிறது. இந்த செயல்கள் மனித ஆற்றல் மட்டும் கொண்ட சேவைகள். பொருள்களின் உற்பத்தியும் அடங்கப்பெற்று அதன் மூலம் அவரவரது

செயலுக்கேற்றவாறு வெகுமதியும் கிடைக்கிறது. 'தொழில் என்னும் சொல் ஒருமையிலும், பன்மையிலும் பொதிந்து வருகின்றது.' உற்பத்தி என்பது உலகில் கிடைக்கும், மேலும் கண்டுபிடித்த இயற்கைப் பொருள்களையும், செயல்களையும் சேவைகளையும் உருமாற்றம் செய்து அவைகளை மனித இன வளர்ச்சிக்கு மீண்டும் பயன்படுத்தும் பணியே ஆகும்'.

**'உற்பத்தியில் பஞ்சபூதங்களான நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு போன்றவைகளின் பண்பு அளவிடற்கரியது. விவசாயப் பொருட்கள், காடுபடு பொருள்கள், கடல்படு பொருள்கள், கனிமப் பொருட்கள், உயிரினங்கள் போன்ற கணக்கிலடங்கா பொருள்கள் எல்லாம் உற்பத்தியின் வெளிப்பாடே. உபகரணங்கள் கருவிகள், இயந்திரங்கள், எழுத்து, எழுத்து வடிவை ஒத்த மேலும் வழித்தோன்றல்களான சிந்தனைகளெல்லாம் உற்பத்திக்கு துணை நிற்கின்றன'107** என்று சத்தியமூர்த்தி அவர்கள் குறிப்பிடுகின்றார்.

**வரும் வைகல் மீன்பிறளினும்**
**வெள்ளமா றாது விளையுள் பெருக**
**நெல்லி னோதை அரிநர் கம்பலை**
**ஒலியோவாக் கலியாணர்**
**முதுவெள்ளிலை...'108**

என்ற மதுரைக்காஞ்சி பாடல் தமிழக கிராமங்களில் இருந்த தொழில் வளத்தைக் குறிப்பிடுகின்றது.

### 3.5.1. திணைச் சார்ந்த தொழில்கள்

குறிஞ்சி நில மக்கள் திணை பயிரிடுதல், வேட்டையாடல், தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், கிளி ஓட்டுதல், ஆகிய தொழில்களையும், முல்லை நில மக்கள் ஒரு சாமை பயிரிட்டும், கால்நடையால் கிடைக்கும் பால், தயிர், வெண்ணை விற்றும் வந்தனர். மருத நில மக்களுக்கு வேளாண்மையே முதன்மை தொழில், எருதுகளையும், எருமைகளையும் கொண்டு நிலத்தை உழுது பண்படுத்தினர்.

**‘பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பிற்**
**காரேறு பொருத கண்ணகன் செறுவின்**
**உழாஅ நுண்டொளி நிரவிய வினைஞர்109**

என்ற பாடல் வரிகள் இதனை மெய்ப்பிக்கும்.

நெய்தல் மக்கள் கடலில் மீன்பிடித்தல், அவற்றை உலர்த்துதல், உப்பு எடுத்தல், அதனை விற்பது, முத்துக் குளித்தல் போன்ற தொழிலும் செய்தனர். பாலை மக்களாகிய எயினர்களுடைய தொழில் வழிபறி செய்தல், பகைவர்களின் கால்நடைகளை கவர்தல், கொள்ளையிடுதல் முதலியனவாம்.

**‘அத்தஞ் செல்வோர் அலறத் தாக்கிக்**
**கைப்பொருள் வெளவுங் களவேர் வாழ்க்கைக்**
**கொடியோ’110**

என்ற பாடல் இதனைக் கூறும்.

நானிலங்களுக்குப் பொதுவானவர்கள் பாணர்களும், புலவர்களும் ஆவர். இவர்கள் தத்தம் கலைதிறமைகளினால் பிறரை மகிழ்விக்கும் தொழில் மேற்கொண்டு வளம்பெற்றனர்.

**3.5.1.1 உழவுத் தொழில்**

சங்ககால உழவர்கள் வேளாண்மாந்தர்கள் எனப்பட்டனர்.

இதனை,

**‘வேளாண்மாந்தர்க்கு உழுதூண் அல்லது**
**இல்லென மொழிப பிறவரை நிகழ்ச்சி111**

என்கிறார் தொல்காப்பியர்.

**‘ஈகைக்கு பெயர்போன வேளாண்மை என்னும் சொல் அவ்வீகைக்கு கருவியான பயிர்த்தொழிலுக்கு பெயராயிற்று பின்னர் இவ்விரண்டும் தொழில்களையும் ஆள்பவரான வேளாளருக்குப் பெயராயிற்று112** என்று வேளாண்மைக்கு மறைமலை அடிகள் பொருள் உரைக்கிறார்.

**நச்சினார்க்கினியர்**

**'மேல்நில வேளாளர், கீழ்நில வேளாளர் என்று இருபிரிவினர் இருந்தனர்'**113 என்கிறார். இதில் கீழ்நிலை வேளாளர்களே உழவர்களாக கருதப்பட்டனர்.

உழவுத் தொழிலைச் சார்ந்தே பிறத் தொழிலும் இருக்கிறது. உழவுத் தொழில் நசிவுற்றால் உலகில் அனைத்து தொழில்களும் நசிந்துவிடும். மழை சரியான நேரத்தில் வரவில்லையெனில் வறட்சி நிலவும். இதனை

**'.....எஞ்சாது**
**உலகுதொழில் உவந்து, நாஞ்சில் துஞ்சி**
**மழைகால் நீங்கியமாக விசும்பில்**114

என்ற வரிகள் பறைசாற்றுகின்றன.

மருத மக்கள் உழவுத் தொழில் மேற்கொண்டிருந்தனர். இவர்கள் உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் என்று அழைக்கப்பட்டனர். உழவர், உழத்தியர் என்போர் சொந்த நிலமுடையவராகவும், கடையர், கடைசியர் என்போர் கழனிகளில் வேலை செய்யும் தொழிலாளி எனவும் அறிய முடிகிறது. இவர்களுக்கென்று சொந்த நிலம் இருந்ததாக தெரியவில்லை. சங்ககால அரசு உழவரின் கலப்பையை நம்பியே இருந்திருக்கிறது. எனவே உழவே தலையாய தொழிலாகவும் இருந்திருக்கிறது.

**'பொருபடை தரூஉங் கொற்றமும் உழுபடை**
**ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே**115

என்ற புறநானூறு பாடல் சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளி வளவனை வெள்ளைக் குடிநாகனார், விளைச்சல் இல்லாத காலத்தும் வரி கேட்பதை எதிர்த்து அறம் உரைக்கும் போது இவ்வாறு கூறியிருக்கிறார். ஏர்தொழில் இல்லாவிட்டால் உலகில் உள்ள ஏனைய தொழில்களும் சீர் கெட்டுப் போகும் என்பதை சங்கத்தமிழர் அறிந்திருந்தனர்.

விவசாயத்திற்கு உதவும் மன்னனின் புகழே நீடித்திருக்கும் என்பதை

**''நிலன்கெளி மருங்கின் நீர்நிலை பெருகத்**
**தட்டோர் அம்ம இவண்தட் டோரே**
**தள்ளா தோர் இவன் தள்ளா தோரே'**116

என்ற பாடல் மூலம் மன்னருக்கு புலவர்கள் அறிவுறுத்தினர்.

“மேழிச் செல்வம் கோழைப் படாது” என்பது தமிழ்நாட்டவர்க் கொள்கை. சங்ககால மக்கள் உழைப்பாலும், ஒழுக்கத்தாலும், ஒற்றுமையாலும் சிறப்புற்று வாழ்ந்தனர். குறிப்பாக உழவுத் தொழிலுக்கு முக்கியத்துவமும், மரியாதையும் தரப்பட்டது.

**வாழ்க என வாழ்த்தினார் மற்றொரு முனிவர். ஔவையார் எழுந்தார், அரசே உன்நாட்டில் வரப்பு உயர்க என்று வாழ்த்தினார். ஒருவரையொருவர் வெறித்து நோக்கினர். அதைக்கண்ட ஔவையார் தம் வாழ்த்துரையின் கருத்தை விரித்துரைப்பாயினர். ‘சபையோரே வரப்பு உயர்க என இளவரசரை நான் வாழ்த்தினேன். விளை நிலத்தில் வரப்பு உயர நீர் உயரும். நீர் உயர நெல் உயரும் நெல் உயர குடி உயரும், குடி உயர கோன் உயர்வான் என விளக்கம் கூறினார்’117**

**வார்சான்ற கூந்தல், வரம்புயர வைகலும்**
**நீர்சான் றுயரவே நெல்லுயருஞ் - சீர்சான்**
**தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரும்**
**ஓவா துரைக்கும் உலகு’118**

என்ற சிறுபஞ்ச மூலமும் இதனைக் கூறும்.

திருவள்ளுவர் உழவருக்கென்று ஒரு அதிகாரமே ஒதுக்கியிருக்கிறார். உழுது பயிரிடுகிறவன் உடம்பு வருத்தத்தை பார்த்து அத்தகைய தொழிலைச் செய்யாமல் பிற தொழிலைச் செய்கிறவர்களும் பிறகு உண்கிறதற்காக உழவரையே நாடி வரவேண்டுமென்பதை

**‘சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை’119** என்கிறார் வள்ளுவர்.

மேலும் உழவே உலகத்தோர்க்கு அச்சாணி என

**‘உழவார் உலகத்தார்க்கு ஆணி’** என்றும்

**‘உழவர்களே உரிமையுடன் வாழ உரியவர்கள்’120** என்றும்,

மற்றவர்களெல்லாம் தாம் வாழ்வதற்காக பிறரைக் தொழுது பின் நிற்பர் என்பதை

**‘உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்**
**தொழுதுண்டு பின் செல்பவர்’ 121**

என்ற குறளில் எடுத்துக் கூறுகிறார். மேலும் உழவரின் பெருமையைக் கூறுமிடத்து,

**‘இரவார் இருப்பார்க்கொண் றிவர்கர வாது**
**கைசெய்தூன் மாலை யவர்’122**

என்று உழைப்பின் பயனை உண்ணும் உழவர் எவரிடமும் இரவார். எதையும் கேட்பவர்க்கு மறைக்காமல் கொடுப்பார் என்கிறது.

கிள்ளி வளவனின் சோழ நாட்டில் நெற்களத்தைக் காக்கின்ற உழவர்கள், தாங்கள் குவித்து வைத்திருக்கும் நெற்போரில் ஏறி நாவினால் ஓ.. என்று அழைக்கும் காலை நேர ஒலியானது யானை மீது அமர்ந்து போர் செய்யும் வீரர்களை அழைக்கின்ற குரலோசையை ஒத்திருக்கும் என்கிறது முத்தொள்ளாயிரம்.

**‘காவல் உழவர் களத்தகத்துப் போரேறி**
**நாவலோஓ வென்றழைக்கும் நாளோதை – காவலன்றன்**
**கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே**
**நல்யானைக் கோக்கிள்ளி நாடு’123**

மழைக்காலத்தில் காலை நேரங்களில் ஏர்களால் உழுது இடம்படுத்த இரு மருங்கிலும் கீழ் மேலாக புரண்டிருக்கும் செம்மண் நிலத்தின் ஈரத்திலே, ஊனைக் கிழித்தார் போன்ற சிவப்பான மேட்டுநிலத்தைப் பிளந்து சென்ற நெடிய உழவு காலிடத்து விதைத்த இடங்களிலே விதைகள் பலவும் முளைத்து வளர்ந்தன. தலைக்குடைகளைச் சூடிய உழவர்கள் ஒலிக்கும் பறையின் ஒலி முறையோடு பூமியிலே இறங்கும்படி களைக்கொட்டுகளை இழுத்து வாங்கி களை வெட்டி தூய்மை செய்த பெரிய புனத்திலே வரகுகளும் விளைந்தன என்பதை

**‘பேர்உறை தலைஇய பெரும்புலர் வைகறை**
**ஏர்இடம் படுத இருமறுப் பூழிப்**
**புறம்மாறு பெற்ற பூவல் ஈரத்து**

**ஊண்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்**

**வித்திய மருங்கின் விதைபல நாறி'124**

என்ற இடைக்காடனார் பாடல் குறிப்பிடுகின்றது.

உழவு செய்திடல் வேண்டும் என்று சிறுபஞ்சமூலம் கூறுகிறது. அதாவது விளை நிலத்திலுள்ள வைக்கோலை தன்னிடத்துள்ளதாக திரட்டி நாள்தோறும் உழுமாடுகளைக் காப்பாற்றி புல்லிய நிலத்தை நன்செய்யாக திருத்தி எருவினால் அதனை போற்றிய பின்பு பண்படுத்தல், களப்பையால் உழுதல், என்ற இவைகளை உரமேற்றிய நிலத்தினிடத்தே செய்பவன் உழுத் தொழிலில் சிறந்தவன் ஆவான் என்று உழவுநூலார் சொல்வார்கள் என உரைக்கிறது.

**'பண்கலப்பை யென்றிவை பாற்படுப் பானுழவோன்**

**நுண்கலப்பை நூலோது வார்'125**

விடியற்காலத்திலே உழவர்கள் நெற்பயிரினை நட்டு முடித்த வயல்களிலுள்ள ஏர்களை உழவர் தலைக்குனிந்த கட்டிகளை உடைய தோட்டங்களிலே சேர்ப்பர் என்றும் ஆராய்ந்த பகடுகளை உடைய உழவர்கள் சிலர் அரிதாளை உடைய நிலத்தைப் பிளந்து மண் பிறழும்படியாக உழுவர். அவர்களது ஏர் மங்கள ஓசையாகிய தெளிந்த ஒலியானது இடந்தோறும் பறக்கும் அழகான காடு என்பதை

**'னவரு புலர் விடியல் மை புலம் பரப்ப**

**நெடுநெல் அடைச்சிய கழனி ஏர் படுத்து**

**குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர்'126**

எனக் குன்றியனார் பாடல் சுட்டுகிறது.

போர் வீரர்கள் தேடித்தரும் வெற்றி அனைத்தும் கொழுமுனைக் கிழித்த விளைவயலின் சாலிடத்தே விளைந்த நெல்லின் பயனால் தான் என்பதை அரசன் மறக்கக் கூடாது. மழை இல்லையானாலும் விளைவு குறைந்தாலும் உலகம் காவலரையே பழிக்கும். எனவே உழவர் குடியினரை முதற்கண் பாதுகாத்து அதனால் ஏனைய குடியினரையும் காப்பாற்ற வேண்டும் என்ற வெள்ளைக் குடிநாகனார் தனது பாடலில் வலியுறுத்துகிறார்.

**“வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்**

**பொருபடை தரூஉங் கொற்றமும் உழுபடை”**127

### 3.5.1.1.1. கூல பயிர்கள்

**‘கூலம் எல்லாம் புலம்பு உக நாளும்**128

என்ற மலையனார் பாடல் சாரலில் உள்ள கொள்ளைகள் தோறும் பதினாறு வகை கூலமும் (நெல், புல், வரகு, சாமை, திணை, கிறங்கு, தோரை, இராகி, எள்ளு, கொள்ளு, பயிறு, உளுந்து, அவரை, துவரை, கடலை, மொச்சை) விதைக்கப்பட்டு பொலிய வளப்பமுடையதாக இருந்திருக்கின்றது. சில பாடல்கள் கூலங்களை 18 வகையாக கூறுகிறது. அதாவது சோளமும், கம்பும் சேர்த்து ‘பதினெண் கூலமும் லவர்க்கு மிகுக’ என்றார். பிறரும்

**“நீலத் தன்ன விதைப்புன மருங்கின்**

**மகுளி பாயாது மலிதுளி தழாலின்’** 129

என்ற பாடல் மழைத் தொடர்ந்து பெய்ததால் எள்ளின் காய்கள் அரக்கு நிறம் படியாமல், கருமைக் கொண்டு ஒரு அளவுள்ள தண்டில் ஏழு காய்கள் உண்டாகுமாறு மிகுந்த எண்ணையுடன் வளர்ந்திருந்ததை எடுத்துக் கூறுகின்றது.

**“வாதிகை யன்ன கவைக்கதிர் இறைஞ்சி**

**இரும்புகவர் வுற்றன பெரும்புன வரகே’**130

### 3.5.1.1.2 மிளகு

**‘இதை கறி என்றும் அழைத்தனர். ஒருங்கிணைந்த சங்க தமிழ்நாட்டில் சேர நாட்டிலும் (இன்றைய கேரளா), துலு நாட்டிலும் (இன்றைய தென் கன்னடம்) மிகுதியாக மிளகு விளைந்தது. இங்கு விளைவிக்கப்பட்ட மிளகு வணிக நோக்கில் எல்லா நாடுகளுக்கும் பயன்பட்டது. குறிப்பாக யவனர்கள் மிக விரும்பி வாங்கிச் சென்றனர். அதனாலே மிளகுக்கு யவனப்பிரியா என்று பெயர் உண்டாயிற்று’**131 சங்கப் பாடல்களில் மிளகு விளைச்சலைப் பற்றி பரவலாகப் பேசப்படுகிறது.

**‘துறகல் நண்ணிய கறி இவர் படப்பை**132

**‘கறி இவர் சிலம்பின்’**133 என்றும்

**‘கறி வளர் சாந்தம்’**134 என்றும் அகநானூறு குறிப்பிடுகின்றது.

**‘கறிக்கொடிக்’**135 எனவும்

**‘கறிவளர் அடுக்க’**136

**‘பைங்கறி நிவந்த பலவின் நீழல்’**137

**‘கறிவளர் அடுக்க’**138

என்று இலக்கியப் பாடல் வரிகள் மிளகு விளைச்சலையும், அதன் முக்கியத்துவத்தையும் உணர்த்துகிறது.

பாரசீகம், எகிப்து, கிரேக்க நாடுகளுக்கும் மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டது. இதனால் தமிழகத்தில் அந்நிய செலவாணி அதிகரித்தது.

**3.5.1.1.3. பருத்தி**

சங்க காலத்தில் பருத்தித் தொழில் சிறப்புற்றிருந்தது. பருத்தியிலிருந்து பஞ்செடுத்து நூல் நூற்று ஆடை வடிவமைத்ததை சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. பருத்தித் துணி ஏற்றுமதியும் செழித்திருந்தது.

**‘கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த**
**மூடைப் பண்டம் மிடைநிறைந் தன்ன’**139

**‘பருத்தி வேலிச் சீறூர் மன்னன்’**140

**‘காஞ்சியின் அகத்து கரும்பு அருத்தி யாக்கும்**
**தீம்புனல் ஊர்’**141

**‘கல் சேர்பு இருந்த கருவாய்க் குரம்பைத்**
**தாழிமுதற் கலித்த கோழிலைப் பருத்தி’**142

என்ற பாடல் வரிகளாலும் அறியலாம்.

**‘ஆள் இல் பெண்டிர் தாளின் செய்த**
**நுணங்கு நுண் பனுவல்’**143

என்று ஆதரவு இல்லாத பெண்கள் நூல் நூற்கும் தொழிலைச் செய்ததும், இரவில் சிறு விளக்கு வெளிச்சத்தில் நூல் நூற்றதை

**‘பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து’144**

என்ற வரிகளும் எடுத்துக் கூறுகின்றது.

### 3.5.1.1.4 கரும்பு

சங்க காலத்தில் விவசாய விளைப் பொருட்களில் முக்கியப் பங்கு வகித்தது கரும்பு ஆகும். இதனை அதியமான் வேற்று நாட்டிலிருந்து கொண்டு வந்து தமிழ்நாட்டில் பயிர் செய்ததை

**‘அரும்பெறல் அமிழ்தம் அன்ன**
**கரும்பு இவண் தந்தோன் பெரும்பிறங் கடையே’145**

என்ற ஔவையார் பாடலால் புலனாகிறது.

மேலும் இந்தக் கரும்பை அதியமானுக்கு முன்பே அவன் பரம்பரையைச் சார்ந்த ஒருவன் தேவலோகத்திலிருந்து கொண்டு வந்து பயிரிட்டதாக கூறுவர், என்ற செய்தியை

**‘அமரர் பேணியும் ஆவுதி அருத்தியும்**
**அரும்பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்**
**நீர் அக இருக்கை ஆழி சூட்டிய**
**தொன்னிலை மரபின் நின் முன்னோர் போல’146**

என்ற பாடலால் அறியலாம்.

சங்க காலத்தில் கரும்பை சாறு பிழிந்து காய்ச்சி வெல்லக் கட்டிகளாக தயாரித்தும் இருக்கிறார்கள். இதற்காக இயந்திரம் பயன்பட்டிருக்கிறது.

**கரும்பின் எந்திரம் களிற்றேதிர் பிளிற்றும் தேர்வன் கோமான் தேனூரர்** என்று பாண்டிய நாட்டு தேனூரில் கரும்பை சாறு பிழியும் எந்திரம் இருந்து வெல்லம் செய்யப்பட்டதை ஐங்குறுநூறு கூறுகிறது.

**‘எந்திரஞ் சிலைக்குந் துஞ்சாக் கம்பலை**
**விசய மடூஉம் புகைசூழ் ஆலைதொறும்’147**

**‘ஆலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே’148**

**‘மழைகண் டன்ன ஆலைதொறு ஞெரேசெனக்**

**கழைகண் ணுடைக்குங் கரும்பி னேத்தமும்’**149

என்ற வரிகள் எந்திரம் மூலம் சாறு எடுத்து வெல்லம் தயாரித்தது உறுதிப்படுத்துகிறது.

**‘வெல்லம், சர்க்கரை விற்ற வணிகர்க்கு பணித வாணிகர் என்பது பெயர். மதுரைக்கு 13 கல் தூரத்தில் அழகர் மலைக்கு அருகில் கிடாரிப்பட்டி என்னும் இடத்தில் இருக்கும் ஒரு மலைக்குகையில் கி.மு. 2ஆம் நூற்றாண்டில் பௌத்த ஜைன முனிவர்கள் தவம் செய்து வருகையில் அவர்களுக்கு செல்வந்தர்கள் சிலர் கற்படுக்கைகளை அமைத்து தந்திருக்கிறார்கள் என்று அக்குகையிலே பிராமி எழுத்தினால் எழுதப்பட்டுள்ளது. அப்படி கற்படுக்கை செய்து தந்தவர்களில் ஒருவர் பெயர் பணித வாணிகன் நெடுமூலன் என்று எழுதப்பட்டிருக்கிறது. பணித வாணிகன் என்றால் வெல்லக்கட்டி சர்க்கரை விற்கும் வணிகன் என்று பொருள். இந்த பிராமி எழுத்தின் அமைப்பை கொண்டு இது கி.மு. 2ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்று ஆராய்ச்சி அறிஞர்கள் கூறுகிறார்கள். எனவே அந்த பணித வாணிகன் நெடுமூலன் 1200 ஆண்டுகளுக்கு முன்னே கடைச்சங்க காலத்தில் இருந்தவன் என்பது தெரிகிறது’**150 என்று சீனி. வேங்கடசாமி குறிப்பிடுகிறார்.

**3.5.1.2 ஆநிரை மேய்த்தல்**

பெரும்பாலும் முல்லை நில மக்கள் ஆநிரை மேய்த்தல் தொழிலை மேற்கொண்டிருந்தார்கள்.

**‘ஆயர் வேட்டுவர் ஆடுஉத் திணைப்பெயர்**

**ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே’**151

என்பது தொல்காப்பியர் முல்லை நில மக்களைப் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

ஆயர்கள் கால்நடைகளை மேய்த்து அதனால் பெறப்பட்ட பொருள்களைக் கொண்டு தம் வாழ்க்கையினை செம்மைப் படுத்திக் கொண்டார்கள்.

கோவலர்கள் பால் பொருள்களான தயிர், மோர், நெய், வெண்ணெய் போன்றவற்றை விற்றும் பண்டமாற்று செய்து கொண்டும் பொருளீட்டி துன்பமில்லா வாழ்வு வாழ்ந்ததை

**‘ஆகாத்து ஓம்பி, ஆப்பயன் அணக்கு**

**கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்பாடு இல்லை152**

என்று சிலம்பும் குறிப்பிடுகின்றது.

நீர் வளத்தையும், பசும் புல்லையும் விரும்பி வாழும் எருமை இனம் மருதத்தாரின் உறுதுணைச் செல்வமாகவும், பார்பயன் அளிக்கும் பெருமை உடையதாகவும் விளங்கின. பெரும் வலிமையும், கடும் உழைப்புக்கேற்ற பாங்கும் கொண்டுள்ளமையால் எருமைகள் உழவுத் தொழிலாளரால் விருப்போடு இன்றும் பேணப்படுகின்றன. எருமைக்கென்றே ஐங்குறுநூறில் ‘எருமைப் பத்து’ என்ற தொகுதியை ஒதுக்கியதிலிருந்தும் அதன் பெருமை விளங்கும்.

**3.5.1.3 வேட்டையாடுதல்**

குறிஞ்சியில் குறவர் மக்களுடன் அதிக தொடர்புடைய விலங்கு காட்டுப் பன்றியாகும். இதனை கேழல் என்று இலக்கியங்கள் கூறுகின்றது. இதை உணவிற்காக வேட்டையாடினும் இக்காட்டுப் பன்றிகள் தமக்கு உதவி செய்ததாக கருதினர். திணை, புனை கொல்லைகளைக் கிளறிவிடுவதாலும், கோரைக் கிழங்குகளை தோண்டி உண்பதாலும் நிலத்தை பண்படுத்த உதவியதாக கருதினர், என்பதை

**“…மலர்ந்த காந்தள்**

**கொழுங்குகிழங்கு மிளிரக் கிண்டிக் கிளையொடு**

**கடுங்கண் கேழல் உழுத பூமி**

**நன்நாள் வருபதம் நோக்கிக் குறவர்**

**உழாஅது வித்திய பரூஉக்குரல் சிறுதிணை153**

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

**‘மென்றிணை மேய்ந்த தறுகட் பன்றீ154**

என்று ஐங்குறுநூறும் குறிப்பிடுகிறது.

பாலை நிலத்தவர்களும் வேட்டையாடினார்கள். அங்கு நீர் கிடைப்ப தென்பது அரிதான செயலாதலால் மழை நீரை தேக்கி வைத்து பயன்படுத்த பல குழிகள் தோண்டப்பட்டிருக்கும். முதுவேனிற் காலத்தில் அக்குழிகளில் நீர் இருக்காது. அத்தகைய குழிகளில் இரவில் பதுங்கியிருந்து நீர் தேடிவரும்

காட்டுப் பன்றிகளை வேட்டையாடியிருக்கின்றனர். பகல் நேரங்களிலோ வேளியின் அருகில் வலைப்போட்டும் வேட்டை நாய்களின் உதவியோடும் முயல்களை வேட்டையாடினர்.

### 3.5.1.4 மீன்பிடித்தல்

நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தல் தொழிலை மேற்கொண்டிருந்தனர். அவர்கள் அதனைக் கொண்டு வருமானம் ஈட்டி தங்கள் வாழ்வினை நடத்தினர் மீனினைப் பிடிப்பதற்கு அழகிய வலைகளையும், கட்டு மரங்களையும், நாவாய்களையும் பயன்படுத்தியதை

**'நெடுங் கயிறு வலந்த குறுங் கண் அவ்வலை**
**கடல் பாடு அழிய, இன மீன் முகந்து**
**…**
**…**
**பாடு பல அமைத்து கொள்ளை சாற்றி**
**கோடு உயர் திணி மணல் துஞ்சும் துறைவ'155**

**'வள்ளை நீக்கி வயமீன் முகந்து கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்'156**

இவர்கள் தூண்டில் கருவிகளைப் பயன்படுத்தியும் மீன் பிடி தொழில் செய்தனர். தூண்டில் கொண்டு நீர் நிலைகளில் மீன் பிடித்து தம் வாழ்வை வளம் செய்து கொண்டனர்.

**'வானம் வேண்டா வறன்இல் வாழ்க்கை**
**நோன்ஞான் வினைஞர் கோள்அறிந்து ஈர்க்கும்'157**

என்று அகநானூறு மீன்பிடிக்க தூண்டிலைப் பயன்படுத்தியதைக் குறிக்கிறது.

பரதவப் பெண்கள் தங்கள் ஆண் மகன்கள் கொண்டு வந்த மீன்களைச் சுமந்து சென்று விற்றனர். சில பெண்கள் மீதியிருந்து மீன்களைக் காயவைத்து கருவாடு ஆக்கும் தொழிலை மேற்கொண்டனர்.

**'பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்**
**இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த**

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி**

**என்றூழ் விடர குன்றம் போகும்158**

என்று அகநானூறு பாடல் எடுத்துரைக்கிறது.

தம் தமையன்மார் பிடித்து வந்த வலிய ஆற்றலுடைய மீன்களை அவர்களின் தங்கையர் விழாக்கள் நிகழ்கின்ற ஊர்த் தெருக்களில் கொண்டு சென்று 'இன்னவிலை' எனக்கூறி விற்றதை

**"ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக் கொளீஇ**

**திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்'159**

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

### 3.5.1.4.1 மீனவர் வாழ்க்கை

வலிமையான தூண்டிற் கயிற்றினை உடையவர் மீன் பிடித்து உண்பவரான வலைஞர்கள். அவர்கள் மழை வளத்தை வேண்டி நிற்றல் இல்லாத வறுமையற்ற வளமான வாழ்வையும் உடையவர்கள். மீன்கள் நிறைந்துள்ள நீர் நிலைகளிலே தூண்டிலிட்டு, தூண்டிலிலே மீன் பற்றியதை அறிந்து அதைப் பிடிப்பவர்கள்.

### 3.5.1.4.2 மீன்பிடி தொழில் செய்த பாணர்கள்

பாணர்களும் மீன்பிடி தொழிலில் ஈடுபட்டனர். மீன் பிடிக்கும் பாணர்கள் வாழும் சேரி "மீன் சீவும் பாண்சேரி" எனப்பட்டது. பாணர் பிடித்து வரும் மீன்களை பாண் மகளிர் கொண்டு போய் விற்று வருவர் மீனுக்கு பதில் பழைய நெல்லும், பயிர்களும் பெற்றதை

**'முள்ளெயிற்றுப் பாண்மக ளீன்கெடிறு சொரிந்த்'160**

**'வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்161**

என்ற பாடல் வழி அறியலாம்.

### 3.5.1.5 ஆறலைத்தல்

ஆறலைத்தல் என்பது பிறர்பொருளை வலுக்கட்டாயமாகக் கைக்கொள்ளு வதைக் குறிக்கும். பாலைப் பகுதியில் வாழ்ந்த ஆண்கள் இதையே தம் தொழிலாகக் கொண்டு வருமானம் ஈட்டினர். இத்தகைய செயலை அவர்கள்

படுபாதகமாக நினைக்கவில்லை. தங்களுடைய குலத்தொழில் போல் கருதி இதை ஒரு வேலையாகவே செய்து வருமானத்தைப் பெருக்கிக் கொண்டனர் என்பதை சங்க இலக்கிய பாடல்கள் எடுத்துரைக்கிறது.

இவர்களின் பிரதான தொழிலே களவுதான் என்பதை

**'பெருந்தலை எருவையொடு பருந்து வந்து இறுக்கும்**
**அருஞ் சுரம் இறந்த கொடியோர்க்கு அல்கலும்**
**இருங் கழை இறும்பின் ஆய்ந்து கொண்டு அறுத்த**
**நுணங்கு கண் சிறு போல் வணங்குஇறை மகளிரொடு'162**

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

இவர்கள் கைப்பற்றிய ஆநிரைகளைக் கொண்டு வந்து அவற்றின் கொழுத்தக் கன்றினை தம் குலதெய்வமான கொற்றவைக்குப் பலியிட்டபிறகு சுற்றத்தாருடன் சமைத்து உண்டு மகிழ்ந்திருந்ததை

**''அரலை வெண்காழ் ஆலியின் தாஅம்**
**காடுமிக நெடிய என்னார் கோடியர்''163**

என்ற பாடலால் அறியலாம்.

ஆறலைக் கள்வர்கள் கொடிய செயல்களை செய்த போதிலும் சுற்றம் தழுவலில் சிறந்திருந்தனர். ஒரு சிலர் இளகிய மனமும் படைத்திருந்தனர்.

வில்லாகிய தம்முடைய ஏரினாலே கொள்ளையிடலாகிய உழவைச் செய்து வாழ்பவர் ஆறலைப்போர். அவர்கள் காட்டிடத்தே உயரமான பகுதிகளிலே உள்ள கவர்ந்த வழிகளை அல்லாமல் மழை வளத்தினை ஒரு போதும் வேண்டுவதில்லை என்று,

**'கான் உயர் மருங்கில் கவலை அல்லது**
**வானம் வேண்டா வில்ஏர் உழவர்'164**

என்று மருதநில நாகனார் கூறுகிறார்.

**'செல்சாத்து எறியும் பண்புஇல் வாழ்க்கை**
**வல்வில் இளையர் தலைவர்'165**

வணிகச் சாத்தினை கொல்லும் வலிய வில்லை உடையவர்கள் என்றும்,

**‘தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்**

**நாகுஆ வீழ்த்து, திற்றி தின்ற’166**

என மழவர்கள் மயிலின் தோகையிலுள்ள இறகினை மாலையாகத் தொடுத்து அணிந்ததையும், கன்றினை உடைய பசுவைக் கொன்று அதன் ஊனை சுட்டுத் தின்றதையும் குறிப்பிடுகின்றது.

ஆறலைக் கள்வர் வில்லிலே தொய்த்து எய்த கணையால் வழிப்போக்கர்களாகிய புதியவர்கள் வீழ்ந்ததை

**‘சிலைஏ நட்ட கணைவீழ் வம்பலர்’167**

என்று எயினந்தை மகன் இளங்கீரனார் தமது பாடலில் ஆறலைக் கள்வர் பற்றி கூறுகிறார்.

### 3.5.2 கைத்தொழில் - நிதி ஆதாரம்

**‘எண்ணிக்கையற்ற தொழிலடியே இந்த**

**புண்ணிய பூமியுங் கண்டதடி’168**

என்கிறார் நாமக்கல் கவிஞர்.

வேளாண்மையில் முழு அளவில் யாரும் ஈடுபட முடியாத நிலையில் ஓய்வு நேரத்தில் தங்களுக்குத் தேவையான பொருட்களை தாமே செய்யத் தொடங்கினார். பின்னர் ஒவ்வொரு சாதியினரும் ஒருவகைத் தொழிலில் ஈடுபட ஆரம்பித்தனர். கொல்லர்கள், குயவர்கள், தையல்காரர், ஆசாரி, போன்ற பல கைவினைஞர்கள் தோன்றினர். தங்களது வீட்டிலேயே, தங்களது குடும்பத்துடன், தங்களது கருவிகளை வைத்து பொருள்களை உற்பத்தி செய்தனர். குறைந்த அளவுதான் உற்பத்தி செய்ய முடிந்தது. மிகக் குறுகிய அங்காடியே இருந்தது. பரம்பரை தொழிலை செய்து வந்தனர். இதனால் சிறப்புத் தேர்ச்சிப் பெற்றனர்.

ஓரளவு வேலைப் பகுப்பு இருந்தது நுகர்வோருக்கும், உற்பத்தியாளருக்கும் நேரடி தொடர்பு இருந்தது. இடைத்தரகர்கள் அருகில் உள்ளூரில் உள்ளவர் களுக்கே பொருள்களை விற்பனை செய்தனர். இதனால் ஒவ்வொரு கிராமமும் தன்னிறைவுப் பெற்று விளங்கியது. சிலவகைப் பொருள்கள் நுட்பமும் அழகும்

பொருந்தியவனாய் இருந்தன. எடுத்துக்காட்டாக **'இந்திய மஸ்லீம் துணியைக் கூறலாம்'169** என்பார் ம.ப. குருசாமி.

சங்க காலத்தில் விவசாயத்தில் மட்டுமின்றி பல்வேறு தொழில்களும் சிறப்புற்று இருந்தது. குறிப்பாக கைத்தொழில் கொண்டு தமது வருவாயைப் பெருக்கிக் கொண்டமையை சங்க நூல்கள் தெளிவுப்படுத்துகின்றன.

**'....படம்புக்குப்**
**பொருகணை தொலைச்சிய புண்தீர் மார்பின்**
**விரவுவாக் கச்சின்'170**

என்ற பாடல் அக்கால தையல் கலைஞர்களை குறிப்பிடுகின்றது. குழந்தைகள் விளையாட பாவை செய்தமையை

**'..... மட மங்கையர்**
**வரி.. மணல் புனை பாவை'171**

என்ற பாடலும் குழந்தைகளுக்கு அழுகையை நிறுத்த கிலுகிலுப்பை செய்து தரப்பட்டதை

**'கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்'172**

என்ற வரிகளும் ஓலை கொண்டு குடை, கூடை, பாய், முறம் முதலியன செய்யப்பட்டதை.

**'உறைப்புழி ஓலை போல'173**

**'அவல் வகுத்த பசுங்குடையான்'174**

என்ற புறநானூறு பாடலால் விளங்கும்.

மேலும் மகளிர் விளையாட கழங்கு, பந்து போன்றவை தயார் செய்யப்பட்டதை

**'வான்றோய் மாடத்து வரிப்பந் தசைஇத்**
**கைபுனை குறுந்தொடி தத்தப் பைபய**
**முத்து வார்மணற் பொற்கழங் காடும்'175**

என்று பெரும்பாணாற்றுப் படை குறிப்பிடுகிறது.

பெண்கள் நெட்டியை கொண்டு மலர்மாலைகள், பொம்மைகள் செய்து விற்றதை

**'தோள் முறையான் விறுமுற்றவும்'176**

என்று மதுரைக்காஞ்சியும்

தகைசெய்தீம் சேற்று இன்நீர் பசுங்காய் நீருகொடி இலையினர் கோடுசுடு நுற்றினர் என்ற வரிகளும் கருங்காலியை சீவி காய்ச்சி அதனைப் பாக்குடன் கலந்து சாயப்பாக்கு தயாரிக்கும் தொழில் நடைபெற்றதை குறிப்பிடுகின்றது.

கயிறு திரிக்கும் தொழில் நடைபெற்றதை

**'கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கில்**
**பெருங்கை யானை'177**

புறநானூறு குறிப்பிடுகிறது.

**'விறகுஒய் மாக்கள் பொன்பெற் றன்னதோர்'178**

என்ற வரி விறகு வெட்டும் தொழில் செய்ததையும்

**'வேய்ப்பெயல் விளையுள் தேக்கள் தேறல்'179**

என கள் விற்றதையும் கூறுகிறது.

மேலும் தச்சர், கொல்லர், பொற்கொல்லர், நெசவர், போன்றோர் தொழில்களே அன்றைய அரசின் பொருளாதாரத்தை உயர்த்தியது.

**3.5.2.1.1 தச்சர்**

கை உழைப்பிற்கான உறுப்பு என்பது மட்டுமல்ல உழைப்பின் விளைபயன் அதுவே என்பார்கள். அத்தகைய உழைப்பினை தச்சர்கள் தமது திறமையினால் வெளிப்படுத்தினர்.

சங்க காலத்தில் தச்சர்களின் பணி சிறப்புற்றிருந்தது. தேர்களையும் வண்டிகளையும், கப்பல் கட்டுவதற்கும், இவர்கள் பெருந்துணையாற்றி இருக்கின்றனர்.

**'எம்முளும் உளன் ஒரு பொருநன் வைகல்**
**எண்தேர் செய்யும் தச்சன்'180**

என்ற புறநானூற்று பாடல் ஒரு நாளைக்கு எட்டு தேர்கள் செய்யும் திறன் வாய்ந்த தச்சர்கள் இருந்ததை எடுத்துரைக்கிறது.

**‘ஆடியற் பெருநாவாய்**
**மழைமுற்றிய மலைபுரையத்181**

என்று மதுரைக்காஞ்சி தச்சர்கள் கப்பல் கட்டும் தொழிலில் சிறந்து விளங்கியதை கூறுகிறது.

நெடுநல்வாடையில் அரண்மனையின் அமைப்பை அழகோவியமாக நக்கீரர் காட்டுவதிலிருந்து அக்கால கட்டிடக் கலைஞனாகிய தச்சரின் திறமைகள் வெளிப்படும்.

எல்லாத் திசைகளிலும் தன் கதிர்களைப் பரப்பி ஒளி கொடுக்கக் கூடிய சூரியனின் கதிர்கள் நிலத்தில் ஊன்றப்பட்ட இரு கோல்களின் மீதும் பட்டு அக்கோல்களின் நிழல் வடக்கிலோ தெற்கிலோ சாயாமல் இருக்கின்ற நாட்களான சித்திரை மாதம் பத்தாம் நாள் தொடங்கி இருபதாம் நாளுக்குள்ளாக ஒரு நாளில் பதினைந்து நாழிகைக் காலத்தில் சிற்பநூல் கற்றறிந்தவராகிய தச்சர் நூலை நேரே பிடித்துத் திசைகளை அளந்து குறித்துக் கொண்டு திசைகளுக்குரிய தெய்வங்களையும் சரியாக உணர்ந்து கொண்டு அரசர்கள் வாழ்வதற்கு ஏற்ற மனைகளையும் அதற்குண்டான வாயில்களையும், மண்டபங்களையும் இன்னும் பலவற்றையும் இங்கிங்கு அமைய வேண்டும் என அமைத்துக் கொண்டு அதனைச் சுற்றி எழுப்ப வேண்டிய உயர்ந்த மதிலின் அமைப்பினையும் அளந்து கொள்வர்.

ஆணிகளும் இருப்புச் சட்டங்களும் கொண்டு இரும்பினால் கட்டப்பட்டு நன்றாக இழைக்கப்பட்ட மரத்தில் சாதிலிங்கம் கொண்டு செம்மை நிறம் நன்றாகத் தீட்டப்பட்டு இரண்டு கதவுகளும் செருகப்பட்ட உத்திரத்தின் மேல்பகுதியில் குவளை மலர் உருவங்களையும், யானையின் உருவத்தையும் அமைத்து இரண்டு கதவையும் ஒன்றாகச் சார்த்தும் போது இரண்டல்ல ஒன்றே என எண்ணுமாறு தச்சனின் வேலைப்பாடு அமைந்திருந்தது. நிலைக்கதவு ஐயவி என்னும் சிறுகடுகும், நெய்யும் அப்பப்பட்டு உயர்ந்து விளங்கியது. நிலையில் வாழும் தெய்வத்திற்காய் அவை அப்பப்பட்டன.

**‘வென்றெழு கொடியொடு வேழஞ் சென்றுபுகக்**
**குன்றுகயின் றன்ன ஓங்குநிலை வாயில்182**

என்ற வரிகள் அரண்மனை வாயில்கள், மன்னன் போரில் பெற்ற வெற்றியை அறிவிக்கும் முகமாக யானையின் மேல் அமர்ந்து உயர்த்திப் பிடித்த

கொடிகளுடன் உள்ளே செல்லும்படி உயர்ந்தனவாக இருந்தன. மலையைப் பிளந்து வழி அமைத்தது போன்ற கோபுர வாயில்களைக் கொண்டு விளங்கின, என்பதைக் காட்டுகிறது.

### 3.5.2.1.2 கொல்லர்

சங்க காலத்தில் கொல்லர்கள் அரசுக்கு வேண்டிய போர்க்கருவிகளையும், மக்களுக்கு வேண்டிய பொருள்களையும் செய்து தந்தனர்.

இவர்கள் இரும்பு கொண்டு அழகான வேல்கள் செய்ததை

**'கருங்கைக் கொல்லனை இரக்கும்**
**திருந்திலை நெடுவேல் வடித்தசின் எனவே' 183**

எனப் புறநானூறும்,

பல்வேறு உலோகங்களைக் கொண்டு பாத்திரங்கள் செய்து விற்கப்பட்டதை

**'விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி184**

என்ற பாடலால் அறியலாம்.

**'இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்185**

**'...கொல்லன்**
**விசைத்துவாங்கு துரத்தி' 186**

என்ற வரிகள் யானையை மறைந்திருந்து கொல்பவனாகிய கானவன் இரும்பினாலோ வடித்து செய்தமைப் போல விளங்கும் கடுமையான வலிய கைகளை உடையவன் என்று மேற்கோள் கூறுவதிலிருந்து இரும்பினால் பலதரப்பட்ட பொருட்களைச் செய்திருக்கலாம் எனத் தெரியவருகிறது.

கொல்லர்கள் தோல்துரத்தியை காலால் மிதித்து தீ உண்டாக்கியதையும், அவர்கள் குறட்டினை பயன்படுத்தியதையும்

மிதியுலைக் கொல்லன் முடிகொடியற்றன்ன கவைத்தாள் அலவன் எனவும் கொல்லன் இரும்பைக் காய்ச்சி சம்மட்டியால் அடித்ததை

**'கருங்கைக் கொல்லன் இரும்புவிசைத் தெறிந்த**

**கூடத் திண்ணிசை'187**

என்று பெரும்பாணாற்றுப் பாடலால் அறியலாம்.

**‘பொன் எறி பிதிரின் சுடர வாங்கி**
**குரம்பி கொண்டும் பெருங்கை ஏற்றை**
**இரும்பு செய் கொல் எனத் தோன்றும்’188**

என்ற அகப்பாடல் வரியானது. மழைக்காலத்து இரவில் மின்மினி மொய்த்த புற்றினை கரடி ஒன்று சிதைத்த போது அதிலிருந்து மின்மினிப் பூச்சிகள் சிதறி ஓடியது கொல்லன் உலைகலத்தில் சம்மட்டியால் அடிக்கும் பொழுது தீப்பொறி சிதறுவது போல் இருந்ததென குறிப்பிடுகின்றது.

….உரறிக் கொல்லன் ஊதலைக் குருகின், ‘இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த என்ற நற்றமனார் பாடல் வரிகளும் கொல்லர்களின் முக்கியத்துவத்தை எடுத்துரைக்கிறது.

#### 3.5.2.1.3 பொற்கொல்லர்

பொன்னை உருக்கி அழகிய ஆபரணங்கள் செய்பவர்கள் பொற் கொல்லர்கள். இவர்களை விஸ்வகர்மாக்கள் என்றும், தட்டான் என்றும், கம்மாளர் என்றும், கம்மியன் என்றும் அழைக்கப்படுகின்றனர்.

பொற்கொல்லர்களின் பணி சங்ககாலத்தில் இன்றியமையாததாக இருந்ததை வரலாற்று குறிப்புகளில் காணப்படும் அரசர், அரசியர் அணிகலன்கள் வாயிலாக அறியலாம். இவர்கள் பல அழகிய விலை மதிப்புள்ள கற்களை வைத்து வெள்ளி மற்றும் தங்கத்திலான ஆபரணங்கள் செய்வதில் வல்லவர்களாக இருந்தனர்.

**‘பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய**
**மாலை பயந்த காமரு மணியும்**
**இடைபடச் சேய வாயினும் தொடைபுணர்ந்து**
**அருவிலை நன்கலம் அமைக்கும்’189**

**‘உறு வினைக்கு அசாவா உலைவு இல் கம்மியன்**
**பொறி அறு பிணைக் கூட்டும் துறை மணல் கொண்டு’190**

என்ற வரிகள் இவர்களின் நுணுக்கமான தொழிற்திறமையை எடுத்துரைக்கிறது.

**‘பொன் உரை கட்டளை கடுப்பக் காண்ரெ்191**

**‘பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்192**

**‘…பொன்னின்**

**உரைதிகழ் கட்டளை்193**

என்ற வரியானது பொற்கொல்லர் பொன்னின் தரத்தை அறிய உரைக்கல்லை பயன்படுத்தி உரைத்து பார்த்ததைக் காட்டுகிறது.

**3.5.2.1.4 குயவர்**

சங்க காலம் மண்பாண்டங்களின் பொற்காலம் எனலாம். குயவர் கைவண்ணத்தில் அழகிய தண்ணீர் குடுவைகள், உணவுப் பொருள் சேமிப்புக் கலங்கள், சமையல் பாத்திரங்கள் போன்றவைச் செய்யப்பட்டன. சமையலுக்கு மண்பாண்டங்கள் பயன்படுத்தப்பட்டதை

**‘மான்தடி புழுக்கிய புலவு நாறு குழிசி194**

**‘முரவுவாய்க் குழிசி முரியடுப் பேற்றி195**

என்ற வரியினால் அறியலாம்.

இவர்கள் ஈமத்தாழிகளையும் செய்ததை

**‘கவிசெந் தாழிக் குவிபுறத்து இருந்த்196**

**‘வியன்மலர் அகன்பொழி ஈமத் தாழி**

**அகலிது ஆக வனைமோ்197**

**‘அச்சுடைச் சாகாட்டு ஆரம்்198**

என்ற புறநானூற்று வரிகளால் அறியலாம்.

குழிசி, தசும்பு, மண்டை, சாடி, கலன், போன்ற மண்பாண்டங்களும் தயார் செய்யப்பட்டன. பெரிய சூளைகளில் பெரிய யானைகளும் பிற கலன்களும் சுடப்பட்டன.

**‘இருள்திணந் தன்ன குரூஉத்திரள் பரூஉப்புகை**

**அகல் இரு விசும்பின் உன்றுஞ் சூளை்199**

சங்க காலத்தில் பொது நிலத்தில் இருக்கும் குயவர்களே அவ்வூரில் நடக்கும் திருவிழாவை வீடுவீடாகச் சென்று அறிவித்தனர் என்பதை

**'யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்**
**சாறு என நுவலும் முது வாய்க் குயவ்200**

என்ற பாடல் வரியால் அறியலாம்.

**'மணிக் குரல் நொச்சித் தெரியல் சூடி**
**பலிக் கள் ஆர் கைப்பார் முது குயவன்201**

என கோயில்களில் பலிக்கொடுக்கும் வேலையினையும் குயவர்களே செய்துள்ளதை கயமனார் சுட்டிக்காட்டுகிறார்.

**3.5.2.1.5 சலவைத் தொழில்**

சலவைத் தொழிலாளிக்கு காழியர் என்றும் பெயர்.

**'.....கழியர்**
**கவ்வைப் பரப்பின் வெவ் உவர்ப்ப்202**

சலவைப்பெண் பலைத்தி எனப்பட்டாள்

வறனில் புலைத்தி எல்லித் தோய்த்த புகார்ப்புகள் கொண்ட புன்பூங் கலிங்கமொடு என்ற வரியே இதை உணர்த்தும்.

களர் நிலத்தில் கிணறுகளைத் தோண்டி துணிகளை வெளுத்தனர்.

**'கனர்ப்படு கூவல் தோண்டி நாளும்**
**புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை**

என்பதால் அறியலாம்.

சலவைத் தொழிலில் பெண்களும் ஈடுபட்டனர். ஆடை ஒலிப்பவள் எனப்பட்டாள். அவள் நெடுநேரம் பிசைந்து கஞ்சி ஊட்டிய துணிகளை அழகாக்கியதையும், அவள் ஆடைகளின் கறைகளை சிதைத்ததால் கறைப் பொருந்திய கூர்மையான நகத்தினைப் பெற்றிருந்ததையும், கஞ்சிப் பசை விளங்கும் விரல்களையும் கொண்டிருந்ததையும் அவள் வீட்டு சிறுபிள்ளைகள்,

உவர் மண் அரித்ததாலே மயிர்கழிந்து போய் புண்களையுடைய தலையோடு இருந்ததையும் அகநானூறு குறிப்பிடுகின்றது.

> **'பூக்கண் பறைந்த புன்தலைச் சிறாஅரொடு**
> **அவ்வரி கொன்ற கறைசேர் வளஉகிர்ப்**
> **பசைவிரல் புலைத்தி நெடிதுபிசைந்து ஊட்டிய**
> **பூந்துகில்'203**

### 3.5.2.1.6 உமணர் தொழில்

சங்க காலம் கொண்டு தற்காலம் வரை உப்பு தொழில் தனி ஒரு இடத்தைப் பெற்றிருக்கிறது. இத்தொழிலை மேற்கொண்டவர்கள் உமணர்கள் எனப்பட்டனர். உமணர் என்னும் சொல் உவர் மண்ணர் என்பதன் திரிபு என்பர். உப்பு வியாபாரம் பெரும்பாலும் தமிழ்நாட்டுக்கு உள்ளேயே நடைபெற்றிருக்கிறது.

உப்பு வணிகப் பொருளாகவும், உணவு பொருளாகவும், உற்பத்திப் பொருளாகவும் இருக்கிறது.

நெய்தல் உப்பளங்கள் அமைத்து உப்பு உற்பத்தி செய்ததை,

அடுவெயில் கொதித்த கல்விளை உப்பு என்கிறது நற்றிணை. மேலும் உப்பு விளைவிப்பவர்களை உப்பு உழவர் என அழைக்கப்பட்டனர். அவர்கள் ஏர் உழாமல் வயலில் பாத்தி கட்டி உப்பு நீரை பாய்ச்சி, வெயிலில் நீர் ஆவியான பிறகு உப்பு வெட்டியதால். 'உவர்விளை உப்பின் உழாஅஉழவர்' எனப்பட்டனர்.

பெரும்பாலும் உமணர் பெண்களே கிராமத்திற்குள் சென்று உப்பு வணிகம் செய்தனர். மேலும் கழுதைகள் மீதும் நீர்நிலைச் சார்ந்த ஊர்களுக்கு படகின் மூலமும் உப்பினைக் கொண்டு சென்று விற்பனை செய்தனர் என்பதை கீழ்வரும் சங்கப் பாடல்கள் உறுதிப்படுத்துகின்றன.

> **''தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து**
> **பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி'204**

> **''உவர்வழரள உப்பின் கொள்ளை சாற்றி**
> **அதற்படு பூழிய, சேண்புலம் படரும்'205**

**“வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி**

**நெல்லொடு வந்த வல்வாய்ப் ப.்.றீ’206**

**3.5.2.1.7 நெசவுத்தொழில்**

பண்டைய கால மக்கள் மரப்பட்டைகள் மற்றும் இலைத் தழைகளையும், மான்தோல், புலித்தோல் முதலியவற்றையுமே ஆடையாக கொண்டனர். நாகரீக வளர்ச்சியடைந்த சங்க காலத்தில் பருத்திப் பட்டு இவற்றை நூற்று ஆடையாக நெய்து அணிந்துள்ளனர்.

**‘பாம்புரி யன்ன வடிவின் காம்பின்**

**கழைபடு சொலியி விழையணிவாரா**

**நோக்குநுழை கல்லா நுண்மைய்207**

**‘கொட்டைக் கரைய பட்டுடை’208**

**‘நீலக் கச்சைப் பூவார் ஆடை’209**

என்ற பாடல் வரிகள் அழகிய ஆடைகள் நெய்தமையை குறிப்பிடுகின்றது.

**‘ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம்210**

**‘புகைவிரிந் தன்ன பொங்குதுகில்211**

என நெசவுத்தொழிலில் சிறந்த வலலுனர்கள் இருந்ததை எடுத்துக் காட்டுகின்றது.

பொதுமக்களிடையே சட்டை அணியும் பழக்கம் இருந்ததாக தெரியவில்லை.

**‘உண்பது நாழி உடுப்பவை இரண்டே’212**

என்கிறது புறநானூறு.

பலதரப்பட்ட ஆடைகள் தமிழகத்தில் உற்பத்தி செய்யப்பட்டது. முரட்டுத்தனமான துணிகள், மிக மெல்லிய துணிகள், பாம்புதோல் போன்ற அழகிய துணிகள் என பலதரமான ஆடைகள் வடிவமைக்கப்பட்டதை

**‘காம்பு சொலித் தன்ன அறுவை்**

**‘இழை மருங்கறியா நுழை நூற்கலிங்கம்213**

**'பாம்புஉரித் தன்ன பொன்பூங் கலிங்க'214**

**'போதுவிரி பகன்றைப் புதுமலர் அன்ன**

**அகன்றுமடி கலிங்கம்'215**

என்ற பாடல்களால் அறியலாம்.

### 3.5.3. பெண் தொழிலாளர்கள்

**வினையே ஆடவர்க்கு உயிர் வானுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்**

என்பது ஆண்களுக்கு உழைப்பின் மேல் இருந்த ஆர்வத்தைக் காட்டுகிறது. இருப்பின் பெண்களும் சங்ககாலம் தொட்டு இன்றுவரை உழைப்பாளிகளாக இருக்கின்றதை மறுப்பதற்கில்லை.

சங்ககால நானிலத்து மகளிரும் பல்வேறு தொழில்களைத் தம் துணைவருடன் இணைந்தும், தனித்தும் செய்து வருமானம் ஈட்டியதை இலக்கியங்கள் எடுத்துரைக்கிறது.

#### 3.5.3.1 தினைப்புனம் காத்தல்

தினைப்புனம் காக்கும் பணியினை பெரும்பாலும் பெண்களே மேற்கொண்டிருந்தனர். தினைப் பிற்படியும் கிளிகளை ஓட்டுதல் பொருட்டாக புனத்துக்குக் காவல் காத்தனர்.

**'பைம்புறப் படுகிளி யோப்பலர்**

**புண்புல மயக்கத்து விளைந்தன தினையே'216**

**'பின்னிருக் கடந்த னண்ணுதற் குறமகன்**

**மென்றினை நுவணை யுண்டு தட்டையி**

**னைவனச் சிறுகிளி கடியு நாட'217**

#### 3.5.3.2 மோர் விற்பனை

பெண்கள் மோர் விற்கப்போவதைக் கேவலமாக நினைக்கவில்லை. அப்படி கேட்பவரிடம் மோர் விற்று வருவது அஃதொன்றும் வருத்தம் அல்லவே. நாங்கள் ஆயத்தியர். மோர் விற்பது எங்கள் மரபு தானே அது என்று பெருமிதத்துடன் கூறியதை கலித்தொகை குறிப்பிடுகிறது.

**‘அகலாங்கண் அளைமாறி அலமந்து பெயருங்கால்**

**நகை வல்லேன் யான் என்று என் உயிரொடு படை கொட்ட**

**இகலாட்டி!....**

**அ.ஃ.து அவலம் அன்னு மன**

**ஆயர்எமர் ஆனால் ஆய்த்தியேம்யாம்’218**

**3.5.3.3. பூ விற்பனை**

உழவர் மகள் மலர்களைத் தெருக்களில் விற்பனை செய்து

துய்த்தலை இதழ வைங்குருக் கத்தியொடு பித்திகை விரவுமலர் கொள்ளீ ரோவென என்றும் பாதிரி மலர்களை தட்டுகளில் வைத்து விற்பனை செய்ததை

**“புதுமலர் தெருவுதொறு நுவலும்’219** என்று நற்றிணை கூறுகிறது.

**3.5.3.4 அப்பம் விற்பனை**

பாகுடன் பிறப் பொருள்களும் கலந்து சேர்த்து பிடித்து அப்பம் செய்து பெண்கள் விற்பனை செய்தனர். இதனை பெரும்பாணாற்றுப்படை வழி அறியலாம்.

**‘காரகற் கூவியர் பாகொடு பிடித்த**
**இழைசூழ் வட்டம் பால்கலந் தவைபோல்**
**நிழல்தாழ் வார்மண னீர்முகத் துறைப்ப’220**

**3.5.3.5 கள் விற்பனை**

கள் விற்கும் ஊர் கள்ப்பாக்கம் எனப்பட்டது. கள்ளுக் கடைகளை அடையாளம் காட்டுவதற்கு பலவண்ணக் கொடிகள் பறக்கவிடப்பட்டதை

**‘நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து’221**

என்றும்

**‘அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பில்**
**மகிழ்நொடை பெறஅ ராகி, கவுள்’222 என்று**

**‘தினைக்கள் உண்ட தெறிகோல் மறவர்’223 என்றும்**

**‘தீம்பழுப் பலவின் சுளைவிளை தேறல்’224**

என்றும் சுட்டிக் காட்டப்படுகின்றன. கபிலர் பாடல்வரி பலாச்சுளையில் இருந்தும் கள் வடித்ததை வெளிப்படுத்துகின்றது.

### 3.5.3.6 மீன் வற்றல் (கருவாடு)

கடலிலிருந்து ஆண்கள் கொண்டு வரும் மீன்களை வற்றலாக்கி கருவாடாக்கும் பணியினைப் பெண்கள் மேற்கொண்டிருந்தனர்.

**'பல்மீன் உணங்கற் படுபுள் ஒப்புதும்'225**

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

மீனிலிருந்து எண்ணெய் தயாரித்து அதை விற்பனை செய்ததும், விளக்கேற்றுவதற்கு பயன்படுத்தியதையும் பெண்களாலேயே மேற்கொள்ளப்பட்டது. இதனை

**'மீன் நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய**
**சிறு தீ விளக்கில்' 226**

**'மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண் சுடர்'227** என்பதனாலும் அறியத்தகும்.

### 3.5.4 பிறத் தொழில்கள்

சங்க இலக்கியங்களில் வேறு சில தொழில்களும் ஒரு சில இடங்களில் குறிப்பிடப்படுகின்றது. பாறை உடைத்தல், சுரங்கத் தொழில், சங்கு வலை தொழிலும், அந்தணர் தொழிலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

### 3.5.4.1 பாறை உடைத்தல்

**'தோட் பதன் அமைத்த கருங்கை ஆடவர்**
**கனை பொறி பிறப்ப நூறி, வினைப் படர்ந்து**
**கல்லுறுத்து இயற்றிய வல் உவர்ப் படுவில்'228**

என்ற குடவாயிற் கீரத்தனார் வரிகள் ஆடவர்கள் பாறைகளைத் தகர்த்து தோண்டி துறை செய்த தொழிலை (கிணறு வெட்டும் தொழில்) செய்தமையை தெரிவிக்கிறது.

### 3.5.4.2 சங்கு – வளை தொழில்

சங்கிற்கு வளை என்ற சிறப்பு பெயரும் உண்டு. அந்த நாளில் மிகப்பெரிய கைத்தொழிலாக சங்கு அறுத்து வளையல் செய்வது இருந்திருக்கிறது. சிலர் தம் குலத்தினை சங்கறுப்போர் குலம் என்று சங்கப்பாடல் கூறுவதிலிருந்து தெளிவாகிறது. நெய்தல் நிலப் பெண்கள் மட்டுமின்றி பிற நிலப் பெண்களும் சங்கு வளையல்களையும் சங்கினால் செய்யப்பட்ட பிற ஆபரணங்களையும் சங்க காலத்தில் அணிந்திருந்தனர்.

**'கடற்கோடு செறிந்த வளைவார் முன்கைக்'229**

**'கடற்கோ டறுத்த வரம்போ டிவ்வளை'230**

என்று கடற் சங்கினை அறுத்து அறத்தால் போழ்ந்து செய்யப்பட்ட அழகான வளையல்களை குறிப்பிடுகின்றது.

சங்கிடத்தே பிறக்கும் முத்துக்களைப் பிறநாட்டவர்க்கு விலைக்கூறி விற்கும் தொழிலையும் பரதர்கள் செய்தனர்.

**'வளைபடு முத்தம் பரதவர் பகருங்'231**

சங்குகளை வளையல்களாக மட்டுமின்றி பல்வேறு அணிகலன்களாகவும் செய்து விற்றனர். குறிப்பாக காது குழைகள் (தோடு), மோதிரம், முதலியனவும் செய்து விற்கப்பட்டது.

**'…வல்லோன்**
**வாள் அரம் பொருத கோள் நேர் எல் வளை'232**

**'கற்கோடு அறுத்த அரம்போழ் அவ்வளை'233**

**'கோபீர் எவ்வளை'234**

என்ற வரியால் அறங்கொண்டு ராவி அழகிய பூ வேலைப்பாடுகளுடைய வளையல் செய்யப்பட்டதைக் கூறுகிறது.

**'இலங்காரம், பொருஉம் வெள்ளளை போழ் நாரோடு**
**இலங்குமனி வினைஞர் இரீஇய மறுகும்'235**

#### 3.5.4.3 அந்தணர் தொழில்

சங்க காலத்தில் மன்னர்களை விட அந்தணர்களே தலைமையும் பெற்றிருந்தனர். இவர்கள் தொழில்கள் ஓதுதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல்.. ஈதல், ஒற்றல், என அறுவகைத் தொழிலை செய்தனர் என்று பதிற்றுப்பத்து தெரிவிக்கின்றது.

**'ஓதல், வேட்டல், அவை பிறர்ச் செய்தல்**
**ஈதல், ஏற்றல், என்று ஆறு புரிந்து ஒழுகும்**
**அறம் புரி அந்தணர் வழி மொழிந்து ஒழுகு'236**

வேள்வி, யாகம் முதலிய தொழில்களையும் செய்தனர். வைகறை பொழுதில் வேதம் ஓதும் தொழிலைச் செய்தவர்கள் ஓதல் அந்தணர் எனப்பட்டனர்.

**'ஓத லந்தணர் வேதம் பாட' 237**

பார்ப்பணர் தூது செல்லும் தொழிலை செய்ததை

**'தூதுஒய் பார்ப்பான் மடிவெள் ஓலைப்' 238**

என்ற அகப்பாட்டு வரியினால் அறியலாம்.

### 3.5.5 இயந்திர தொழில்

சங்க கால மக்கள் திணை சார்ந்த தொழிலையும், இனம் சார்ந்த சில தொழிலையும் மேற்கொண்டிருந்ததோடு அவர்கள் நவீன யுக்திகள் பலவற்றையும் தம் தொழிலில் கையாண்டிருக்கின்றனர். மேலும் அத்தகைய யுக்திகளை பயன்படுத்தி வாகனங்களையும் இயக்க இருக்க வாய்ப்பு இருந்திருக்கலாம்.

#### 3.5.5.1 மரத்திரிகை

**'ஐதுஉணங்கு வல்சி பெய்து முறுக்கு உறுத்த**
**திரிமரக் குரல் இசை கடுப்ப'239**

என்ற பாடல் பெண்கள் பதமாய் காய்ந்த அரிசியை மரத்திருகிலிட்டு மாவு அரைத்ததைக் குறிப்பிடுகின்றது.

### 3.5.5.2 கத்தரிக்கோல்

பெண்கள் கூந்தலை அழகாகக் கத்தரித்துக் கொள்ள கத்தரிக்கோல் பயன்படுத்தியதை

**'எ∴கு இடைதொட்ட கார்க் கவின் பெற்ற ஐம்பால் போல்'240** என்ற கலித்தொகை பாடல் எடுத்துரைக்கின்றது.

### 3.5.5.3 கரும்பு சாறு பிழியும் இயந்திரம்

**'கரும்பி னேந்திரங் களிற்றெதிர் பிளிற்றுந்'241**

என்று கரும்பு பிழியும் இயந்திரம் இருந்ததை குறிப்பிடுகின்றது.

### 3.5.5.4 தராசு அளவை

சங்க காலத்தில் பொருளை அளவிட பல்வேறு முறைகள் பின்பற்றப் பட்டிருக்கின்றன. பொருள்களின் நிறையினை தெரிதற்கு துலாக்கோல் (தராசு) பயன்பாட்டில் இருந்திருக்கிறது. இதனை,

தெரிகோல் அன்ன செயிர்தீர் செம்மொழி - தெரிகோல் என்பது தராசை குறிக்கிறது.

**'ஓர்வு உற்று ஒரு திறம் ஒல்காத நேர்கோல்'242**

என்று தராசு கருவி பயன்பாட்டை கலித்தொகையும் குறிப்பிடுகிறது.

வாணிபமும், தொழில்களும் என்ற இவ்வியலில் பொருளாதாரம் பற்றிய பொருளியலாளர்களின் கருத்துக்கள், தத்துவங்கள் - சங்க இலக்கியத்தில் காணப்படும் பொருளியல் சிந்தனைகள் மற்றும் வாணிப முறைகள். வாணிப பொருள்கள், உள்நாட்டு, அயல்நாட்டு வாணிபம் செய்ததற்கான சான்றிதழ் ஏற்றுமதி, இறக்குமதி மற்றும் துறைமுக பட்டினங்கள், நிலம் சார்ந்த தொழில்கள், பொது தொழில்கள், உழைப்பு, உற்பத்தி கூலி முதலியவை விளக்கப்பட்டுள்ளன.

**அடிக்குறிப்புகள்**

1. அரசியல் பொருளாதாரத்தின் இளமைக்காலம், பக். 23-24
2. பொருளாதார பேராசிரியர் பெருமாளிடம் கேட்டறிந்தது
3. நுண்ணினப் பொருளியல் (சடகோபன்) பக். 1
4. நுண்ணினப் பொருளியல் (தேவ இரக்கம் - ஜெயசூர்யா) பக். 56
5. மேலது பக். 63
6. மேலது பக். 72
7. மேலது பக். 91
8. மேலது பக். 86
9. Principle of the Economics Pg. 2
10. மேலது பக். 11
11. மேலது பக். 22
12. நுண்ணினப் பொருளியல் தேவ இரக்கம், பக். 65
13. என் கடிதம், 69
14. திருக்குறள், பாடல் எண். 247
15. வியாசர் பாரதம் முதல் பாகம், பக். 486
16. வியாசர் பாரதம் இரண்டாம் பாகம், பக். 946
17. இன்னா நாற்பது, பாடல் எண் 16
18. மேலது, பாடல் எண். 27
19. மேலது, பாடல் எண், 36
20. நாலடியார் பாடல் எண் -1
21. மேலது பாடல் எண். 2
22. மேலது, பாடல் எண் 135 : 1
23. மேலது, பாடல் எண் 216:1
24. குறுந்தொகை, பாடல் எண். 12:1-3
25. மேலது, பாடல் எண், 39:1-3
26. அகநானூறு, பாடல் எண். 187:3-4
27. நான்மணிக்கடிகை, பாடல் எண் 32:1

28. மேலது, பாடல் எண். 35:3

29. மேலது, பாடல் எண் 70:1-2

30. இன்னிலை, பாடல் எண். 14:1-2

31. மேலது, பாடல் எண். 19:1-3

32. மேலது, பாடல் எண். 34

33. திருக்குறள், குறள் எண். 752

34. மேலது, குறள் எண். 754

35. கம்பனின் அரசியல் கோட்பாடு, 100

36. இனியவை நாற்பது பாடல் எண், 11:2

37. மேலது, பாடல் எண் 21:1

38. பன்னாட்டுப் பொருளியல் பக். 91

39. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 120-122

40. மகாகவி பாரதியார் கவிதைகள் பக். 43

41. பட்டினப்பாலை பாடல் வரி, 210-211

42. ஐந்திணை ஐம்பது பாடல் எண் 21:1-2

43. சிலப்பதிகாரம், பாடல் எண் 5:34-35

44. பட்டினப்பாலை பாடல் வரி, 184-195

45. மதுரைக்காஞ்சி பாடல் வரி 503-506

46. பரிபாடல் புறத்திரட்டு பாடல்வரி 22-29

47. மேலது பாடல் வரி 35-41

48. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 426-430

49. மேலது, பாடல் வரி 543-544

50. மேலது, பாடல் வரி 536-542

51. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 511-522

52. பட்டினப்பாலை, பாடல் வரி 183

53. இந்திய பொருளாதாரம், (ஆ.இ. மெதவோய்) பக். 341

54. சிந்திப்போம் சிந்திக்க வைப்போம், பக். 65

55. புறநானூறு பாடல் எண் 33:1-6

56. பெரும்பாணாற்றுப்படை, பாடல் வரி 163-166
57. குறுந்தொகை பாடல் எண் 221:3-4
58. பெரும்பாணாற்றுப்படை, பாடல் வரி 155-156
59. நற்றிணை பாடல் எண் 183:1-2
60. அகநானூறு, பாடல் எண் 340:14-15
61. ஐங்குறுநூறு பாடல் எண் 1:5:47:1-3
62. மேலது, பாடல் எண் 1:5:48:2-3
63. உலக சரித்திரம் பக். 163
64. உலக சரித்திரம் பக். 174
65. அகநானூறு, பாடல் எண் 269:15
66. அகநானூறு, பாடல் எண் 75:19
67. பழங்கால தமிழர் வாணிபம், பக். 111
68. மேலது, பக். 269
69. மேலது, பக். 271
70. தமிழக வரலாறும் பண்பாடும் பக். 72
71. பழங்கால தமிழர் வாணிபம் பக். 91
72. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக். 113
73. தென்னிந்திய வரலாறு பக். 21
74. பட்டினப்பாலை பாடல் வரி 116-117
75. மேலது, பாடல் வரி 164-165
76. அகநானூறு பாடல் எண் 255:1-2
77. அகநானூறு பாடல் எண். 255:1-2
78. நெடுநல்வாடை, பாடல் வரி, 101-102
79. சிலப்பதிகாரம், 5:154
80. நெடுநல்வாடை, பாடல் வரி 42
81. பட்டினப்பாலை பாடல் வரி, 217-281
82. புறநானூறு பாடல எண் 9:8-11
83. நற்றிணை பாடல் எண். 172

84. மேலது பாடல் எண் 189:5

85. மேலது பாடல் எண் 31:8-9

86. அகநானூறு பாடல் எண். 343:12-14

87. சிலம்பு பாடல் வரி 111-112

88. பெரும்பாணாற்றுப்படை பாடல்வரி 349

89. நற்றிணை பாடல் எண் 278-7-8

90. பழங்காலத் தமிழர் வணிகம் பக். 82

91. அகநானூறு பாடல் எண் 343:12-13

92. தமிழ் இலக்கிய வரலாறு பக். 64

93. பதிற்றுப்பத்து பாடல் 6:3-4

94. மேலது பாடல் 6:9

95. அகநானூறு, பாடல் எண் 127:6

96. மேலது, பாடல் எண் 149:10-11

97. புறநானூறு, பாடல் எண் 343:9-10

98. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 81:85

99. அகநானூறு, பாடல் எண் 350:11-13

100. ஐந்திணை எழுபது, பாடல் எண் 589:1-2

101. தமிழ் இலக்கிய (வழி) வரலாறு பக். 42

102. Histiory of the tamil P.T. Srinivasa Iyangar "The extravagant Impartation of luxuries from the east without adequate production of commandities to after in exchange was the main cause of the successive depredication and degradation of the Roman Currency leading finally to its total repudiation. p. 206

103. So that Pliny complained in 70AD that India drained gold to the value of heavy a million pounds a year giving back her out wares which are gold among us et fully a hundred times their first cost – Ibid p. 305.

104. Pallavan of Kanchi – R. Copalan

105. பெரிய திருமொழி, பாடல் எண் 2:6:6

106. சிறுபாணாற்றுப்படை, பாடல் வரி 150-153

107. தொழில் வியாபாரம் விவசாயம் கடன் வாங்கும் முறைகள் பக். 279

108. மதுரைக் காஞ்சி, பாடல் வரி 118-119

109. பெரும்பாணாற்றுப்படை, பாடல்வரி, 209-211

110. மேலது, பாடல் வரி 39-41

111. தொல். பொருள். 530

112. வேளாளர் நாகரீகம் பக். 64

113. தொல்.பொருள். நச்சி உரை 632

114. அகநானூறு பாடல் எண் 141:4-6

115. புறநானூறு, பாடல் எண் 35:25-26

116. மேலது பாடல் எண் 18:28-30

117. தமிழின்பம் பக். 92

118. சிறுபஞ்சமூலம், பாடல் எண். 46

119. திருக்குறள், குறள் எண் 1031

120. மேலது, குறள் எண் 1032

121. மேலது, குறள் எண். 1033

122. மேலது, குறள் எண். 1035

123. முத்தொள்ளாயிரம் பாடல் எண் 27

124. அகநானூறு பாடல் எண். 194:1-5

125. சிறுபஞ்சமூலம், பாடல் எண் 60

126. அகநானூறு பாடல் எண் 216:1-5

127. புறநானூறு பாடல் எண். 35:24

128. நற்றிணை பாடல் எண் 93:3

129. மலைபடுகடாம் பாடல் வரி 102-103

130. மேலது, பாடல் வரி 112-113

131. பழங்கால தமிழர் வாணிகம் பக். 77

132. அகநானூறு பாடல் எண் 272:10

133. அகநானூறு பாடல் எண் 112:114

134. மேலது, பாடல் எண் 2:6

135. திருமுருகாற்றுப்படை பாடல் வரி 309

136. புறநானூறு பாடல் எண் 168:2

137. சிறுபாணாற்றுப்படை, பாடல் வரி 43

138. குறுந்தொகை, பாடல் எண் 288:1

139. புறநானூறு பாடல் எண் 393:12-13

140. மேலது பாடல் எண் 299:1

141. மேலது பாடல் எண். 156:6-7

142. மேலது பாடல் எண். 129:6-8

143. நற்றிணை பாடல் எண் 353:1-2

144. புறநானூறு பாடல் எண் 326:5

145. மேலது பாடல் எண் 392:20-21

146. புறநானூறு பாடல் எண் 99:1-4

147. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 260-261

148. மலைபடுகடாம், பாடல் வரி 119

149. மேலது பாடல் வரி 340-341

150. பழங்காலத் தமிழர் வாணிபம் பக். 108

151. தொல்.நூ எண். 23

152. சிலம்பு. பாடல் வரி 120-121

153. புறநானூறு பாடல் எண் 168:2-6

154. ஐங்குறுநூறு பாடல் எண் 261

155. அகநானூறு பாடல் எண் 30:1-11

156. மதுரைக்காஞ்சி பாடல் வரி, 255-256

157. அகநானூறு பாடல எண் 186:1-2

158. மேலது, பாடல் எண் 140:1-4

159. மேலது பாடல் எண் 320:1-2

160. ஐங்குறுநூறு, பாடல் எண் 47:1

161. மேலது, பாடல் எண். 48:1-3

162. அகநானூறு பாடல் எண் 97:7-10

163. மேலது, பாடல் எண். 309-8-9

164. மேலது பாடல் எண். 193:1-2

165. மேலது பாடல் எண். 245:6-7

166. மேலது, பாடல் எண். 249:12-13

167. மேலது, பாடல் எண். 289:1

168. நாமக்கல் கவிஞர் பாடல்கள் 38-39

169. தொழில் பொருளாதாரம் பக். 91

170. பெரும்பாணாற்றுப்படை, பாடல் வரி 69-71

171. புறநானூறு பாடல் எண். 11:2-3

172. சிறுபாணாற்றுப்படை, பாடல் வரி 81

173. புறநானூறு பாடல் எண் 290:7

174. மேலது, பாடல் எண். 352:3

175. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 333-335

176. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 54

177. புறநானூறு, பாடல் எண். 3:10-11

178. மேலது, பாடல் எண் 70:17

179. மலைப்படுகடாம், பாடல் வரி 171

180. புறநானூறு பாடல் எண் 87:2-3

181. மதுரைக்காஞ்சி பாடல் வரி 83-84

182. நெடுநல்வாடை, பாடல் வரி 87-88

183. புறநானூறு பாடல் எண் 180:12-13

184. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 244

185. அகநானூறு, பாடல் எண். 172:6

186. மேலது பாடல் எண் 224:2-3

187. பெரும்பாணாற்றுப்படை எண் 437-438

188. அகநானூறு பாடல் எண் 72:4-6

189. புறநானூறு பாடல் எண் 218:1-4

190. நற்றிணை பாடல் எண் 363:4-5

191. அகநானூறு பாடல் எண் 178:11

192. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 220

193. குறுந்தொகை பாடல் எண் 192:3-4

194. புறநானூறு பாடல் எண் 168:9

195. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 99

196. புறநானூறு பாடல் எண் 238:1

197. மேலது பாடல் எண் 256:5-6

198. மேலது பாடல் எண் 256:2

199. மேலது பாடல் எண் 228:2-3

200. நற்றிணை பாடல் எண் 200:3-4

201. மேலது பாடல் எண் 293:1-2

202. அகநானூறு பாடல் எண் 89:7-8

203. அகநானூறு பாடல் எண் 387:4-7

204. மேலது பாடல் எண் 183:1-2

205. அகநானூறு பாடல் எண் 390:1-2

206. பட்டினப்பாலை பாடல் வரி 29-30

207. பொருநராற்றுப்படை பாடல் வரி 82

208. மேலது பாடல் வரி 155

209. புறநானூறு பாடல் எண் 274:1

210. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 469

211. புறநானூறு பாடல் எண் 398:20

212. மேலது, பாடல் எண். 189:5

213. சிறும்பாணாற்றுப்படை பாடல் வரி 236

214. புறநானூறு பாடல் எண் 397:17-18

215. மேலது, பாடல் எண் 393:17-18

216. ஐங்குறுநூறு பாடல் எண் 3:6:260:3-4

217. மேலது, பாடல் எண் 3:9:285:1-3

218. முல்லை பாடல் வரி 8:5-9

219. நற்றிணை பாடல் எண் 118:10

220. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 377-379

221. அகநானூறு பாடல் எண் 196:1

222. மேலது பாடல் எண். 245:9-10

223. மேலது பாடல் எண். 284:8

224. மேலது பாடல் எண். 182:3

225. மேலது பாடல் எண் 80-6

226. நற்றிணை பாடல் எண் 175 : 3-4

227. மேலது பாடல் எண். 215:5

228. அகநானூறு பாடல் எண். 79:1-3

229. மேலது, பாடல் எண் 2:10:191:1

230. மேலது, பாடல் எண். 2:10:194:1

231. மேலது, பாடல் எண். 2:10:195:1

232. நற்றிணை பாடல் எண் 77:8-9

233. ஐங்குநுறூறு பாடல் எண் 194:1

234. மேலது, பாடல் எண். 196:1

235. மணிமேகலை, பாடல் எண். 28:44-45

236. பதிற்றுப்பத்து, பாடல் எண் 24:6-8

237. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 656

238. அகநானூறு பாடல் எண் 337:7

239. அகநானூறு பாடல் எண் 224:12-13

240. கலித்தொகை பாடல் எண் 31:1

241. ஐங்குறுநூறு பாடல் எண் 1:6:55:1

242. கலி. குறிஞ்சி பாடல் வரி 6:14

## இயல் 4

# மக்களின் மனச்செம்மை

இலக்கியம் என்பது பல்வேறு காலக்கட்டத்தில் வாழ்ந்த பல படைப்பாளிகளின் அறிவும் கற்பனையும் கலந்த வெளிப்பாடு ஆகும். **'வாழ்க்கையில் மனிதர்கள் கண்டதை அவர்கள் அனுபவிப்பதை நம் அனைவருக்கும் உடனடியாகக் கவர்ச்சி ஊட்டுபவை, நின்று கவர்ச்சி ஊட்டுபவை எவையோ அவற்றை குறித்து அவர்கள் சிந்தித்தவை உணர்ந்தவை இவைப் பற்றி அறிவிற்கும் உயிர்ப்பு மிக்க பதிவேடு இலக்கியம் ஆகும்'1** என்கிறார் ஹட்சன்.

இலக்கியம் என்பது வாழ்க்கையின் விமர்சனம் என்று மாத்யூ அர்னால்டு கூறுகிறார்.

**'இலக்கியம் என்ற சொல்லை இலக்கு இயம் என்று பிரிப்பதாக இருந்தால், இலக்கம் (இலக்கு) என்ற சொல் தொல்காப்பியத்தில் காணப்படுகிறது. இலக்கு – விளக்கம், நோக்கம், கொள்கை, குறிக்கோள் எனப் பொருள் கொண்டு, இயம் - ஒலிப்பது, கூறுவது, வெளிப்படுத்துவது எனப் பொருள் கொள்ளின், நம் குறிக்கோள்களையும் கொள்கைகளையும் இயம்புவது – விளக்குவது இலக்கியம் என்று கொள்ளலாம்'2**

இத்தகைய இலக்கியங்கள் நம் முன்னோர்களின் வாழ்வியலைப் பிரதிபலிக்கும் காலக்கண்ணாடியாக இருக்கிறது. சங்ககால மக்களின் வாழ்வாதாரங்களை நம் கண்முன்னே கண்டு வந்து நிறுத்துகிறது. சங்க கால மக்களிடம் செழுமையும் இருந்தது. அதே நேரம் பலர் வறுமையில் உழன்றனர் என்பதும் தெரிய வருகிறது.

### 4.1 குடிகளின் வறுமையும் வள்ளன்மையும்

சங்க கால மக்களில் ஒரு சில இனத்தவர்கள் மட்டும் ஏழ்மை நிலையில் உழன்று இருக்கின்றனர். குறிப்பாக அவர்கள் வசிப்பதற்கு கூட சரியாக வசிப்பிடங்கள் இல்லை. அவர்கள் வசித்த சேரிப்பகுதியோ சுகாதாரமற்றதாகவே இருந்திருக்கிறது. அங்கு புல்லால் வேயப்பட்ட குடிசைகளையும் புலால்

நாற்றமுடனும் அது ஓர் ஊர் என்று உணர்தற்கும் ஆகாததாய் இருந்திருக்கின்றது என்பதை,

**“நிலாவின் இலங்கு மணல்மலி மறுகில்**
**புலால் அம் சேரிப்பு புல்லோய் குரம்பை**
**ஊர் என உணராச் சிறுமையொடு.”3**

என்ற உலோச்சனார் பாடல் வரிகளால் அறியலாம். (இப்பாடலை நக்கீரர் பாடியதாகவும் பாடம் பேதம் உண்டு.)

மூங்கிலைப் பரப்பி அதன்மேல் மென்மையான கிளைகளை வைத்து தாழை நாரால் கட்டப்பட்டு மேலே தருப்பைப் புல்லால் வேயப்பட்ட குடிசையினை

**“வேழம் நிரைத்து, வெண்கோடு விரைஇத்**
**தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த**
**குறியிளறக் குரம்பை, பறியுடை முன்றில்”4**

என்ற பெரும்பாணாற்றுப் பாடல்களும் ஏழையின் குடிசையினை எடுத்துரைக்கின்றது.

**“நீதியை அநீதியும்**
**பலவீனத்தை பலமும்**
**அறியாமையை ஏய்ப்பும்**
**ஏழ்மையை செல்வமும்**
**ஆண்டுக் கொண்டிருக்கின்றது”5**

**“ஒட்டிய வயிறும்**
**குழிவிழுந்த கண்களும்**
**பரட்டைத் தலையும் கொண்ட**
**ஓர் அரிய இனம்**
**அருகி விடாமல் இருக்க**
**இந்த சேரிச் சரணாலயங்களை**
**இன்னும் எத்தனை ஆண்டுகள்**
**பாதுகாப்பது…?”6**

என்று ஏழைகளின் நிலைகளை விளக்குகிறார் ஒரு புதுக்கவிஞர்.

ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளை ஒக்கும் என்கிறது திருக்குறள். **'எளியோரை வலியோர் வாட்டினால் வலியோரை தெய்வம் வாட்டும்'7** என்பது பழமொழி

**'ஏழை ஒருவனுக்கு உதவி செய்யும் போது கடவுள் உனக்கு கடன்பட்டவராகிறார்' என்றும் 'என் சகோதரர்களில் வலியவனான ஒருவனுக்கு நீ செய்யும் உதவி எனக்கே செய்த (கடவுளுக்கே) உதவி என்று உறுதியாக நான் உனக்கு கூறுகிறேன்' என்று பைபிள் கூறுகிறது.8**

இதே கருத்தை தான் 'எல்லா உயிர்களிலும் நான் இருக்கிறேன்' என்று பகவத் கீதையில் கிருஷ்ணர் கூறுகின்றார்.

*கடவுளின் மாளிகைக்கு செல்வதற்கு மூன்று வழிகளை குர்ரான் சுட்டிக் காட்டுகின்றது.*

**முதல்வழி பிரார்த்தனை –** அது உன்னை பாதி தூரம் அழைத்துச் செல்லும்.

**இரண்டாம் வழி நோன்பு –** அது உன்னை மாளிகையின் வாயில் வரை அழைத்துச் செல்லும்.

**மூன்றாம் வழி –** ஏழைகளின் துன்பத்தை போக்குதல் - அது உன்னை மாளிகையின் உள்ளே அழைத்துச் செல்லும்.

பிரார்த்தனைகளை விட ஏழைகளின் துன்பத்தைப் போக்குகின்ற செயல் தான் கடவுளுக்கு மிகவும் பிடித்தமான செயல் என்று குர்ரானும் கூறுகின்றது. ஏழைகளின் துன்பத்தைப் போக்க வேண்டும் என்று எல்லா மதங்களும் வலியுறுத்துகின்றன. இருந்த போதிலும் அன்றிலிருந்து இன்றுவரை ஏழ்மை உயிர்ப்பித்து கொண்டே தான் இருக்கின்றது.

**'என் சுற்றமும் யானும் பசியால் உழன்று மருங்கு செத்து ஒழிய வந்து உன்னை வேண்டுகின்றோம். எனக்கோர் இரும்பு முகம் செறித்த ஏந்து எழில் மருப்பினை உடைய களிறு ஒன்று தருக. தவறாது அருள்க'10**

என ஊன்பொதி பசங்குடையார் பாடல் வரிகள் பசிக்குச் சோறு கேட்பதை விட்டுவிட்டு யானைக் கேட்கும் புலவரின் குணத்தை எப்படி புரிந்து கொள்வது.

**4.1.1. வறுமை**

உழவர் இல்லந்தோறும் வீடு வீடாகச் சென்று இரந்து உணவு உண்ணும் இரவன் மாக்களாயினோம். எம்மை பாதுகாத்தலை அருளோடு மேற்கொள்ளும் சான்றோர் யார்? என்ற பொருள்படும்.

> **'ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ**
> **ஊழ் இரந் துண்ணும் உயவல் வாழ்க்கைப்**
> **பரவு எதிர்ந்து கொள்ளும் சான்றோர் யார்?'** 11

என வள்ளல் ஆய் அண்டிரனைப் பார்த்து ஏணிச்சேரி முடமோசியர் பாடும் பாடல் வரிகள் புலவரின் வறுமையினைக் கண்முன்னே காட்டுகின்றது. மேலும்

> **'பனி பழுனிய பல் யாமத்துப்**
> **பாறுதலை மயிர் நனைய'** 12

> **'ஒண்பொறிச் சேவல் எடுப்ப ஏற்றெழுந்து**
> **தண்பசி உறைக்கும் பலரா நாங்கள்.'** 13

என்ற நப்பசலையார் கூறுவதிலிருந்தும் தெரிகிறது.

> **'ஒல்குபசி உழந்த ஒருங்குநண் மருங்குல்**
> **வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த**
> **குப்பை வேளை உப்பிலி வெந்ததை**
> **மடவோர் காட்சி நானிக் கடையடைத்து**
> **இரும்பேர் ஒக்கலொ டொருங்குடன் மிசையும்'** 14

ஏழ்மையில் இருப்பவன் என்றுமே

> **'வாழ்க்கையோடும் நாய்களோடும் தான் போராடுகிறார்கள் இவன் பசித்திருக்கிறான் உண்ண ஒன்றுமில்லாததால் விழித்திருக்கின்றான். பசி காதை அடைப்பதால் தனித்திருக்கின்றான். தேசம் இவனைப் புறக்கணிப்பதால் தேசம் பீடு நடை போடுவதாய் பிதற்றப்படும் போது இவன் கால்களோ தள்ளாடும். இந்தியாவின் சராசரி வருமானம் இவனது வருமானத்தோடு சேர்த்து தான் கணக்கிடப்படுகிறது. இவனது அறிவுப்பசி வயிற்றுப் பசியுடன் வாயடைத்து போகின்றது. 'வயிறு' இவனுக்கு**

**சுயவதைக்கான ஓர் உறுப்பே. இவனது எதிர்கால நம்பிக்கை தொல்பொருள் துறையினரது கைகளில் தான் இருக்கின்றது. காணாமல் போன மணிமேகலையின் அமுதசுரபி அகழ்வாராய்ச்சியில் ஒரு நாள் அகப்படாமலா போய்விடப் போகின்றது.'**15

என்று வறுமை நிலையை வெளிப்படுத்துகிறார் ஒரு புதுக்கவிஞர்.

**'வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த**
**துன்னற் சிதாஅர் துவர நீக்கி**
**நோக்குநழை கல்லா நுண்மைய பூக்கனிந்து'**16

என்றப் பொருநராற்றுப்படை வரிகள் கந்தலாடை அணிந்த ஈறும் பேணும் குடியிருந்த தலையினை உடைய அறிஞர்களை நம் கண் முன்னே காட்டுகின்றது.

**'இந்திய தேசப்படத்தில்**
**அட்ச ரேகைகளையும்**
**தீர்க்க ரேகைகளையும்**
**அழித்துவிட்டு**
**வறுமைக் கோடுகளை**
**இனிநாம் வரைவோம்'**17

**'வறுமைக்கென வழங்கப்படும்**
**உலகக்கோப்பைகளை**
**நாங்களே தொடர்ந்து**
**தக்க வைத்துக் கொண்டிருக்கின்றோம்'**18

என்ற வறுமையினை இந்த புதுக்கவிதை வரிகள் பிரதிபலிக்கின்றன. அதே நேரத்தில் சங்க தமிழகத்தில் வறுமையில் இருப்பவர்களைக் காப்பாற்ற வளமானவர்கள் மனமுவந்து உதவியதையும் பார்க்க முடிகிறது. வசதிப் படைத்தவர்கள் பல்வேறு தானம் தருமங்களையும் செய்திருக்கின்றனர். 'கோயிலில் உள்ள விக்கிரகத்திலே கடவுளைப் பார்க்கிறவர் பக்தியின் அடிமட்டத்திலே நிற்கிறான். **''ஒரு விதவையின் கண்ணீரைத் துடைப்பதிலே, பசியோடு இருக்கும் ஏழை ஒருவனுக்கு உணவளித்து அவன் பசியைக்**

**போக்குவதிலே கடவுளைப் பார்க்கிறவன் மேலே உயர்ந்து நிற்கிறான்19** என்ற விவேகானந்தர் கூற்றுக்கிணங்க அந்த காலத்திலேயே சிறந்து விளங்கியிருக்கிறது தமிழ்நாடு.

**'வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை20** அதுவும் நீ ஏழை என்று பிறர் வறுமையை பழிக்காமல் **'இழன் என்னும் எவ்வம் உரையாமை21** கொடுப்பதே உயர்ந்த குணம் என்ற திருக்குறள் கூறுகிறது. அதே நேரத்தில் அனைவரும் தானம் செய்ய வேண்டியதில்லை. தன்னிடம் பொருள் இல்லாதவன் பிறருக்குக் கொடுக்காமல் இருப்பின் அவனை எவனும் பழித்துரைக்க மாட்டார்கள் என்பதை 'வறியோன் வள்ளிய என்மை பழியார்'22 என்று முதுமொழிக் காஞ்சி உணர்த்துகின்றது.

வறுமையுற்றோர் என்று கூறிவரும் இரவலர்களுக்கு உதவும் பொருட்டே மிகுதியான பொருளை ஈட்டும் நினைவுடன் ஆண்கள் அனைவரும் வெளியூர்களுக்குப் பொருள் தேடிச் சென்றனர் என்பதை

> **'தம் நயந்து உறைவோர்த் தாங்கித் தாம் நயந்து**
> **இன்னமர் கேளீரோடு ஏமுறக் கெழீஇ**
> **நகுதல் ஆற்றார் நல்கூர்ந்தோர் என**
> **மிகுபொருள் நினையும் நெஞ்சமொடு அருள்பிரிது**
> **ஆபமன் வழி'23**

வறுமையுற்றவர்கள் வள்ளல்களை நாடிச் செல்லும் வழியில் ஐந்து வகை நிலங்களையும் கடக்க வேண்டிய கட்டாயச் சூழல் இருந்தது. அப்படி அவர்கள் செல்கையில் அனைத்து தரப்பு மக்களையும் சந்திக்க வேண்டி இருந்தது. அப்போது அவர்களுக்கு உதவிய அனைத்து வகை மக்களை பற்றியும் சங்க இலக்கியம் எடுத்துரைத்து இருக்கிறது. மேலும் பரிசில் பெற்று மீண்ட கலைஞர்களைப் பரிசு பெறப் போகும் கலைஞர்கள் வழியில் சந்திக்க நேர்ந்தால் அத்தகைய கலைஞர்களை புறக்கணிக்காமல் யாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறட்டும் என்ற உயர்ந்த நோக்கில் எங்கு யாரிடம் சென்றால் எத்தகைய உதவிகள் கிடைக்கும் என்று கூறி தன் பெருந்தன்மையினை வெளிப்படுத்திய பாங்கினையும் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது.

**4.1.2. வள்ளல்களை நாடிச் செல்லும் வழியில் ஐவகை நிலத்தாரின் உளப்பாங்கு**

சங்க கால மக்கள் புறத்தாரை உபசரிப்பதிலும் அவர்களுக்கு நல்வழி காட்டுவதிலும் நாட்டமுடையவர்களாக இருந்தனர்.

**'தமிழர்கள் தனி நிலையில் பொருள் ஈட்டவும் கல்விக்காகவும் பொது நிலையில் அரசன் பொருட்டும் போருக்காகவும் தூதராகவும் பலமுறை ஊர் விட்டு ஊர் சென்று பணியை மேற்கொண்டவர்கள் இவ்வாறு ஊர்விட்டு ஊச் சென்ற போது வழியில் பல இயற்கை தடைகளை அவர்கள் கடந்துச் செல்ல வேண்டியிருக்கிறது. அப்போது கட்டுச்சோற்றையும் உடன் கொண்டு சென்றிருக்க முடியாது. எனவே உணவிற்காக தாம் செல்லும் ஊரில் வாழும் மக்களைச்சார வேண்டியது அவர்களுக்கு தவிர்க்க முடியாததாய் இருந்தது. அவ்வாறே தம் ஊருக்கு புதிதாய் வருபவரை வரவேற்று உபசரிக்க வேண்டியது அவ்வூர் மக்களின் கடமையாகக் கருதப்பட்டது'24.**

ஆற்றுப்படை நூற்பாக்கள் தம் நிலம் வழியே பயணம் மேற்கொண்ட கலைஞர்களை எதிர்கொண்டு உபசரித்தலைப் பற்றி பேசுகின்றன. அதோடு மட்டுமின்றி கலைஞர்கள் பாலை வழிச் செல்லும் போது அவர்களுக்கு ஏற்பட போகும் அபாயங்களைக் கூறி வழிக்காட்டினர். மேலும் பரிசில் பெற்று மீண்ட கலைஞர்கள் பரிசில் பெறப்போகும் கலைஞர்களுக்குத் தேவையான உதவிகளை செய்து அவர்கள் எங்கு எப்படிப் போய் யாரைப் பார்த்தால் நலம் பயக்கும் என்பதையும் எடுத்துக் கூறினர். இத்தகைய செயலை ஐவகை நிலத்தில் வாழ்ந்தவர்களும் பின்பற்றினர்.

**4.1.2.1. குறிஞ்சி நில மக்களின் உளப்பாங்கு**

**'நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய**
**குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி**
**ஐவன வெண்ணெலொ டரில்கொள்பு நீடி**
**இஞ்சி மஞ்சட் பைங்கறி பிறவும்**
**பல்வேறு தாரமொடு கல்லகத் தீண்டித்25**

என்ற மதுரைக்காஞ்சிப் பாடலானது குறிஞ்சி நிலத்தின் வளத்தைச் சுட்டிக்காட்டுகின்றது.

**‘நிலைத்துறை வழீஇய மதனழிமாக்கள்**
**புனற்படு பூசலின் விரைந்து வல்வெய்தி**
**உண்டற் கினிய பூவுங்காட்டி**
**ஊறு நிரம்பிய வாறவர் முந்துற**
**நும்மி இனஞ்சத் தவலம் வீட்’26**

என்ற கூத்தர் வரிகள் குறிஞ்சி நிலம் வழியாகக் கடந்து செல்லும் பாணர்கள் வழியறியாத் திகைத்திருக்கும் தறுவாயில் குறவர்கள் அந்த கூத்தர்களுக்கு உதவ முன்வந்ததை சொல்லோவியமாகக் காட்டியிருக்கின்றது.

குறிஞ்சி நில மக்கள் தம்மை நாடி வருபவர்க்கு தாம் உண்ணும் உணவு எதுவாயினும் அவற்றை பகிர்ந்தளித்து மகிழ்ந்ததை

**‘மான விறல்வேள் வயிரிய மெனினே**
**நும்மில் போல நில்லாது புக்குக்**
**கிழவிர் போலக் கேளாது கெழீஇச்**
**சேட்புலம் பகல இனிய கூறிப்**
**பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு**
**குரூஉக்க னிறடிப் பொம்மல் பெறுகுவீர்27**

என்று பெருங்கௌசிகனார் குறிப்பிடுகிறார். மேலும்

**‘அகமலி உவகை ஆர்வமொ டளைஇ28**

எனத் தமக்கு முன்பின் அறிமுகமில்லாதவர்க்கும் உதவும் மனப்பான்மையை பெற்றிருந்ததைக் குறிப்பிடுகின்றது.

**4.1.2.2. முல்லை நில மக்களின் உளப்பாங்கு**

**‘… முள்ளுடுத்**
**தெழுகா டோங்கிய தொழுவுடை வரைப்பிற்**
**பிடிக்கணத் தன்ன குதிருடை முன்றிற்**
**களிற்றுத்தாள் புரையுந் திரிமரப் பந்தர்**
**குறுஞ்சாட் டுரளையொடு கலப்பை சார்த்தி**
**நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டிற்**

**பருவ வானத்துப் பாமழை கடுப்பக்**

**கருவை வேய்ந்த கவின் குடிச் சீறூர்29**

என்ற பெரும்பாணாற்றுப் பாடல் முல்லை நில வாழ்வியலையும்

**‘சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்பக்**
**கருங்கல் வரகின் இருங்குரல் புலர**
**ஆழ்ந்த குழும்பில் திருமணி கிளர**
**எழுந்த கடற்றி னன்பொன் கொழிப்பப்**
**பெருங்கவின் பெற்ற சிறுதலை கௌவி**
**மடக்கட் பிணையொடு மறுகுவன உகளச்**
**சுடர்ப்பூங் கொன்றை தாஅய நீழற்**
**பாஅ யன்ன பாறை யணிந்து**
**நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும்**
**வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்ந்து**
**கரிமுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய்**
**மணிமரு ணெய்தல் உறழக் காமர்**
**துணிநீர் மெல்லவற றொய்யிலொடு மலர**
**வல்லோன் தைஇய வெறிக்களங் கடுப்ப**
**முல்லை சான்ற புறவணிந் தொருசார்30**

என்ற மதுரைக்காஞ்சி முல்லை நிலத்தினை எடுத்துக் கூறுகின்றது.

முல்லை நில மக்கள் கால்நடை செல்வங்களைப் பெற்று வளமாக வாழ்ந்தவர்கள் திணைச் சோறும் பாலும் இவர்களின் முக்கிய உணவாகும். இவர்கள் ஆடு மாடுகளை மேய்ச்சலுக்கு விடும் இடத்தின் வழியே கலைஞர்கள் செல்லும் போது ஆய மகளிர் அவர்களின் களைப்பினைப் போக்க பசும்பால் கொடுத்ததை

**‘வேறு புலம் படர்ந்த ஏறடை இனத்த**
**வளையான் தீதம்பால் மிளைசூழ் கோவலர்**
**வளையோர் உவப்பத் தருவனர் சொரிதலின்**
**பலம்பெறு நசையொடு பதிவயிற் றீந்தநும்**
**புலம்புசேண் அகலப் புதவிர் ஆகவீர்31**

என்ற பாடல் கூறுகிறது. மேலும்

**‘கல்லென கடத்திடைக் கடலின் இரைக்கும்**
**பல்யாட் டினநிரை எல்லினிர் புகினே**
**பாலு மிதவையும் பண்ணாது பெறுகுவிர்32**

என்ற வரிகள் உணர்த்தும்.

மேலும் அவர்கள் கலைஞர்களை எதிர்கொண்டு வரவேற்று அவர்களுக்கு திணைச்சோறு வரகுச் சோறு அவரைப் பருப்பு ஆகிய உணவினை படைத்த மாண்பு போற்றுதற்குரியது.

மழையாகிய பயன்கெட்டு திசைகளெல்லாம் கொதிப்படையவும் புதியவரான வழிப்போக்கர் வருங்கால் அவர்களை பேணுபவராக இளைய எருதுகளின் கழுத்தில் கட்டியிருக்கும் மூங்கிற் குழாயினிடத்தேயுள்ள இனிதான புளிசோற்றினை அப்புதியவரின் பசியினாலே உண்டான காதடைப்புத் தீரும் படியாக தேக்கிலையில் வைத்துப் பகிர்ந்து அளித்து இருக்கின்றார்கள் என்பதை

**'இம்மை உலகத்து இல் எனப் பல்நாள்**
**பொம்ல் ஓதி நீவிய காதலொடு**
**பயம்தலை பெயர்ந்து மாதிரம் வெம்ப,**
**வருவழி வம்பலர்ப் பேணி, கோவலர்**
**மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி**
**செவிஅடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்**
**புல்லி நல்நாட்டு'33**

இப்பாடலால் அறியலாம்.

### 4.1.2.3 மருத நில மக்களின் உளப்பாங்கு

**'களிறுமாய்க்குங் கதிர்க்கழனி**
**ஒளிறிலஞ்சி அடைநிவந்த**
**முட்டாள சுடர்த்தாமரை**
**கட்கமழு நறுநெய்தல்**
**வள்ளிதழ் அவிழ்நீலம்**
**மெல்லிலை யரியாம்பலொடு**
**வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கைகீ34**

என்று மதுரைக்காஞ்சி மருதநிலம் நீர்வளமும், நிலவளமும் பெற்று செழித்திருந்ததை சுட்டிக் காட்டுகிறது.

வயலும், வயல் சார்ந்த இடமுமாகிய மருதநிலத்தில் வசித்த மக்கள் தம்மை நாடிவரும் பாணர் கூட்டத்திற்கு வயிறார உணவு அளித்து மகிழ்ந்ததைச் சிறும்பாணாற்றுப்படை எடுத்துரைக்கிறது.

ஆமூர் என்ற பகுதியை பாணர்கள் கடந்துச் செல்லும் போது அவர்களைத் தாமே எதிர்கொண்டு அழைத்து உபசரித்த பாங்கினை

**'.... ஆமூர் எய்தின்**
**வலம்பட நடக்கும் வலிபுணர் எருத்தின்**
**உரன்கெழு நோன்பகட் குழவர் தங்கை**
**பிடிக்கை அன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்**
**தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப**
**இருங்காழ் உலக்கை இரும்புமகந் தேய்த்த**
**அவைப்புமாண் அரிசி அமலைவெண் சோறு**
**கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுகுவிர்'35**

என்று சிறுபாணன் மற்றொரு பாணனிடம் எடுத்துக் கூறியதை இப்பாடல் உணர்த்துகிறது.

கரும்பாலையில் பணி புரிபவர்கள் அவர்களைக் கடந்துச் செல்லும் பாணர்களுக்குக் கருப்பஞ்சாறு கொடுத்து அவர்களின் வழிநடைத் துன்பத்தைக் குறைத்தனர். இதனை,

**'கரும்பின் தீஞ்சாறு விரும்பினிர் மிசைமின்'36**

மற்ற நாடுகள் பழமையான வறுமையில் வாட வறுமையைச் சிறிது கூட அறியாத குடிகளை உடைய வளம்மிகுந்த பெரிய ஊர்களில் தங்கினீர்கள் எனில் தொழில் செய்வதில் சோம்பல் கொண்டிருந்த உழவர்கள் தங்கள் உழைப்பினால் வந்த வெண்மையான நெல்சோற்றை அவர்கள் வீட்டில் வளர்த்தப் பெடைக் கோழிக் கறிக்கொண்டு சமைத்த பொறியலுடன் உணவிட்டு மகிழ்ந்த அவர்கள் உளப்பாங்கினை

**'தொல்பசி யறியாத் துளங்கா விருக்கை**
**மல்லற் பேரூர் மடியின் மடியா**

**வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி**
**மனைவா ழுளகின் வாட்டொடும் பெறுகுவீர்37**

என்ற பாடல் வெளிப்படுத்துகின்றது.

### 4.1.2.4 நெய்தல் நில மக்களின் உளப்பாங்கு

ஒலி எழுப்பும் கடல் கொடுத்த ஒளி நிரம்பிய முத்துக்களும் அரத்தால் அறுக்கப்பட்ட அழகான வளையமும் செட்டி இனத்தவர்கள் கொண்டு வந்த பல்வேறு பொருள்களும் உப்பங்களி பாத்திகளில் விற்கும் இனிமையான சுவையுடைய புளியும் அங்குக் கிடைக்கும் வெண்மை நிறமான உப்பும் மணற்குன்றுகள் நிறைந்திருக்கும் கடற்கரையில் வலிமையான கையினை உடைய பரதவர்கள் மீன்களை அறுத்து துடியின் கண் போன்று விளங்கும் கருவாடு காயும் இடங்களும் இப்பொருள்கள் ஏற்றப்பட்ட மரக் கலங்களும் எவனம் முதலான பல நாடுகளைச் சேர்ந்தவர்களும் பண்டமாற்று முறையில் தங்கள் நாடுகளுக்கு இப்பொருளைக் கொண்டு செல்லும் பொருட்டு கொண்டு வந்த குதிரை முதலான பொருட்களை வந்து குவிவதனால் பல செல்வமும் நிறைந்த பகுதியாக நெய்தல் நிலம் விளங்கியது. இதனை

**'முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்**
**அரம் போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை**
**பரதர் தந்த பல்வேறு கூலம்**
**இருங்கழிச் செறுவிற் றீம்புளி வெளளுப்புப்**
**பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்**
**கொழுமீன் குறைஇய துடிக்கண் துணியல்**
**விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர்**
**நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார்**
**புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொடனைத்தும்**
**வைகல் தோறும் வழிவழிச் சிறப்ப**
**நெய்தல் சான்ற வளம்பல பயின்றாங்கு**
**ஐம்பால் திணையுங் கவினி யமைவர்38**

என்ற மதுரைக் காஞ்சி பாடல் எடுத்துரைக்கின்றது.

கடற் சார்ந்த இடத்தில் வசித்த நெய்தல் நில மக்கள் தம் நிலத்தை கடந்த கூத்தர், பாணர், விறலியர்களுக்குத் தம் தொழிலால் கிடைத்த மீனையும் கள்ளையும் பக்குவப்படுத்தி கொடுத்ததை

**‘அலைநீர் தாழை அன்னம் பூப்பவும்**
**தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்**
**கடுஞ்சூல் முண்டகங் கதிர்மணி கழாஅலவும்**
**நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவும்’39**

**‘வறற்குழற் சூட்டின்’40**

வலைஞர்கள் நெல் அரிசிகள் தயாரித்து அதற்கு துணையாகச் சுட்ட மீனையும் தந்து பாணர்களை உபசரித்ததை

**‘அவையா வரிசி யங்களித் துழவை**
**மலர்வாய்ப் பிழாவிற் புலர வாற்றிப்**
**பாம்புறை புற்றிற் குரும்பி யேய்க்கும்**
**பூம்புற நல்லடை யளைஇத் தேம்பட**
**எல்லையு மிரவு மிருமுறை கழிப்பி**
**வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த**
**வெந்நீர் அரியல் விரலலை நறும்பிழி**
**தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவீர்’41**

என்ற பாடலால் அறியலாம்.

பெரிய களத்திலே தம் செயல்களின் வினைப்பயனான நெல்லைத் தொகுத்த உழவர்களைப் போல தம்மிடம் வந்து இரந்தவர்களுடைய வரிய களங்கள் எல்லாம் நிறையுமாறு மீன்களை வாரி வாரி சொறிவர். எஞ்சியவற்றை பலப்பலக் கூறுகளாக்குவர். அந்தக் கூறுகளை விலை கூறி விற்பர் என்று அவர்களின் கொடைத் திறனை அகநானூறு

**‘பெருங் களம் தொகுத்த உழவர் போல**
**இரந்தோர் வறுங் கலம் மல்க வீசி’42**

என்ற பாடலால் எடுத்துரைக்கின்றது.

**4.1.2.5 பாலை நில மக்களின் உளப்பாங்கு**

வறண்ட நிலப்பகுதியான பாலையில் வசித்தவர்கள் எயினர், எயிற்றியர் ஆவர். இவர்கள் வழிப்பறி செய்து வந்த பொருள்களால் வாழ்க்கையை நடத்தியவர்கள். இருப்பினும் இவர்கள் தம்மை நாடி வந்தோரை உபசரித்து உதவும் மனப்பாங்கு பெற்றவர்கள் எனச் சங்கப் பாடல்களால் அறிய முடிகிறது.

தம்மை நாடிவரும் வறுமை மிகுந்த பாணர்களுக்கு புல்லரிசி சோறு செந்நெல் சோறு மற்றும் உடும்புக் கறியுடன் அளித்து உதவியதை

**'கொடுவில் எயினக் குறும்பிற் சேப்பின்**
**களர்வளர் ஈந்தின் காழ்கண் டன்ன**
**சுவல்விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி**
**ஞமலி தந்த மனவுச் சூல் உடும்பின்**
**வறைகால் யாத்தது வயின்றொறும் பெறுகுவிர்'43**

என்ற பாடலால் அறியலாம்.

**4.2 பரிசில் பெற்று மீண்ட கலைஞர்கள் வழிகாட்டும் முறை**

மனிதனின் உயர்ந்த உள்ளத்துக்குச் சான்று பிறருக்கு உதவும் வகையில் வழிகாட்டுவதே ஆகும். பரிசில் பெற்று வருவோர் அவ்வாறே பரிசில் பெற விரும்புவோர்க்கும் அதற்கான வழித் துணைகளைக் கூறி வழிப்படுத்துவதே ஆற்றுப்படை இலக்கியங்களாகும். தாம் பெற்ற இன்பம் மற்றவர் பெற வேண்டும் என்ற மாண்பினை சங்க காலத்தார் பெற்று இருந்தனர்.

**'கூத்தரும் பாணரும் பொருநரும் விரலியும்**
**ஆற்றிடைக் காட்சி யுரழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க் கரிவுரீஇச்**
**சென்று பயனெதிர சொன்ன பக்கமும்'44**

என்ற இதனைத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

கூத்தர், பாணர், பொருநர், விறலி என தொல்காப்பியர் கூறியதோடு 'புலவர்' என்பாரையும் சேர்த்து ஐவராக்கிய பெருமை பன்னிரு பாட்டியலாரை சேரும்.

சங்க கால கலைஞர்கள் எந்த வகை பிரதிபலனும் பாராமல் தாம் செய்வது அறச் செயல் என்று கூட அறியாதவராக தன்னிச்சையாக ஆற்றுப் படுத்திய போக்குகளை சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றது. குறிப்பாக பாணர், பொருனர், கூத்தர் முதலியோர் மிகச் சாதாரண குடிகளாக வறுமையில் வாழ்ந்ததை ஆற்றுப்படை நூல்கள் விளக்குகின்றன. அவர்கள் மன்னர்களையும் வள்ளல்களையும் பாடியும், ஆடியும் மகிழ்வித்தும் அதனால் கிடைக்கப் பெற்றதை வைத்து வாழ்க்கை நடத்தினர். தாம் அவ்வாறு பெற்ற செல்வத்தைத் தனக்காக மட்டும் வைத்துக் கொள்ளாமல் தம்மை போல் இருக்கின்ற கலைஞர்களுக்கும் உதவியதோடு அவர்களைப் பார்க்கும் பட்சத்தில் 'இவரிடம் இதைப் பெற்றேன்' எனக் கூறி வழிகாட்டினார்கள்.

**'இன்னோர்க்கு என்னாது என்னொடும் சூழாது**
**வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே'45**

என்ற பாடல் குமணனிடம் சென்று பெற்ற பரிசினைப் பெருஞ்சித்திரனார் அயலாருக்கும் வறுமையில் வாடுவோருக்கும் உறவினர்களுக்கும் அளிக்குமாறு கூறியதை எடுத்துரைக்கின்றது.

சங்ககால கலைஞர்கள் வறுமையில் உழன்றாலும் பிறர்க்கு உதவும் மனப்பான்மையை பெற்றிருந்தனர் என்பதை

**'ஆடுபசி யழந்தநின் இரும்பே ரொக்கலொடு**
**நீடுபசி யொராஅல் வேண்டி னீடின்**
**றெழுமதி வாழி'46**

என்ற வரிகள் இதனை உணர்த்தும்.

பாலை நில வழியே செல்லும் பொது கள்வர்களால் துன்பம் நேர்ந்தாலும் நேரும் என்று கூறி அதற்கு ஆறுதல் சொல்லி ஆற்றுப் படுத்தும் பொருநர்

**'ஆறலைக் கள்வர் படைவிட அருளின்**
**மாறுதலை பெயர்க்கும மறுமின் பாலை'47**

என்று இடையில் கடக்க வேண்டிய பாலை நிலத்தில் கள்வர்களால் உமக்கு தீங்கு ஏதும் நிகழாது என்று அவர்களின் அச்சத்தைப் போக்கி ஆற்றுப்படுத்தியது தெரிகிறது.

அதே போல்

**‘தொடுத்த வாளியர் துணைபுனர் கானவர்**
**இடுக்கண் செய்யா தியங்குநர் இயக்கும்’48**

என்ற வரிகள் கலைஞர்கள் மலையும் காடும் நிறைந்த குறிஞ்சி நிலப்பகுதி வழியாக செல்லும் போது பல துன்பங்களை எதிர்கொள்ள நேரிடும். அப்போது அங்கு வசிக்கும் குன்றக்குறவர்கள் அதை தீர்த்து வைத்து பயணத்தைத் தொடர வழிகாட்டுவர் என்று கூறி அனுப்பியதை தெரிவிக்கின்றது.

ஆறுதலைப் பெற்ற கலைஞர்கள் தம்மைப்போல் பிற கலைஞர்களும் பயன் அடையட்டும் என்ற விகிதத்தில் யாரிடம் சென்றால் அவர்கள் வறுமை தீர வழிகிடைக்கும் என்று அறிவுரை வழங்கியதோடு வள்ளல்களின் இருப்பிடம் செல்வதற்கும் வழிகாட்னர்.

**‘கரந்துபாம் பொடுங்கும் பயம்புமா ருளவே**
**குறிக்கொண்டு மரங் கொட்டி நோக்கிச்**
**செறிதொடி விறலியர் கைதொழூஉப் பழிச்ச**
**வறிதுநெறி ஒரீஇ வலஞ்செயாக் கழிமின்’49**

என்ற பாடல் வரிகள் தாம் பரிசு பெற சென்ற போது தாம் சென்று திரும்பிய வழிகளில் பாம்பு, கவண் கற்கள், பாசிகள், காட்டாறுகள் குறுக்கிட்டதையும் அதிலுள்ள துன்பங்களையும் நீக்கி சென்று பரிசுபெறும் முறைகளையும் மற்றவர்களுக்கு கூறி வழிக்காட்டிய பொறுப்புணர்வு வெளிப்படுத்துகிறது.

### 4.2.1. பாணர் - வழிகாட்டும் முறை

சங்க காலத்தில் தமிழகமெங்கும் பல்வேறு பாணர் இனத்தால் பலப்பல நிலைகளில் வாழ்ந்து வந்திருக்கின்றனர். அவரவர் வாழ்க்கை முறைக் கொண்டு அவர்கள் பல்வேறு பெயர்களோடு விளங்கினர்.

**‘வாயில்களாதற்கு, உரியவர் எவரவர்’50**

என வரையறுத்து தொல்காப்பியர் பன்னிருவரை குறிப்பிடுகின்றார். அந்த பன்னிருவரில் பாணரும் ஒருவர். இந்தப் பாணர் எனும் வாயிலோன் தலைவனுக்கு நெருக்கமாக இருந்து அவனுடைய இன்பத்திற்கு துணை நின்று அதனால் பொருள் ஈட்டி தம் வாழ்வை நடத்தினான்.

பாணன், பாடினி, கூத்தர், விறலியர் என்ற இந்த நால்வர்களும் பாணர் குலம் சார்ந்தவர்களே என சங்க நூல் கொண்டு அறியலாம்.

பரணர், அவ்வையார், நற்செள்ளையார் போன்ற பெரும் புலவர்களும் வானக்கோ வரையரும் இந்த சமூகத்தை சார்ந்தவராவர். பாணர் குலத்தாரில் நாட்டுக்குத் தலைவனாகவும் இருந்தவர் உண்டு.

**'வாடா அது வல்லேறி பாணன் நன்நாடு'51**

என்ற பாடல் அன்றைய தமிழகத்தின் ஒரு பகுதியாகிய வடவெள்ளையிலே விளங்கிய நாட்டுத் தலைவன் பாணன் என்பதைக் குறிக்கின்றது.

பெரும்பாணப்பாடினியும் பான்மலையும் பாணர்களின் புகழ்பெற்ற ஊர்களாகும். பாணர்களில் சிலர் மீன்பிடித் தொழில் செய்து வாழ்வை நடத்தினர். அரண்மனை ஏவல் பணிகளிலும் சில பாணர்கள் நியமிக்கப்பட்டு இருந்தனர். இவர்கள் பண்ணிசைப்பதில் வல்லவர்களாகவும் அதனைக் கொண்டு வாழ்க்கை நடத்தியதும் தெரிய வருகிறது. இசையும், கூத்தும் தெரிந்த மற்றவர்களும் பிற்காலத்தில் பாணர்கள் எனக் கூறிக் கொண்டனர்.

**'சிறும்பாண், பெரும்பாண், எனப் புகழ்பெற்ற யாழ்ப்பாணர்களும் அகவுளுகர், கூத்தர், சோடியர், இயவர், பொருநர் எனவெல்லாம் காட்டப் பெரும் பாணர் குடியினரும் தம்முடைய கலைத்திறத்தாலே அரசரையும், செல்வரையும், மக்களையும் இன்புறுத்தி அவர்கள் உவந்து அளிக்கும் பொற்பூவும், அணிகளும், பிறவும் ஆன பரிசுகளைப் பெற்று வாழ்ந்து வந்தவர்கள் ஆவர்'52**

இவர்களுக்கு நிலையான வருவாய் இல்லாததால் இவர்களுக்கும் உதவி செய்வதை ஒரு கடமையாகவே பேணி வந்தனர் பெருங்குடியினர். இதனை 'பான் கடன்' என்பர். இவர்களை பேணிக்காப்பது மக்கள் கடன் என்பதை

**'துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று இந்நான்கு அல்லாது குடியும் இல்லை' 53** என்று வரும் புறநானூறு வரி புலப்படுத்துகிறது.

**'கைவல் சீறியாழ்ப் பாண'54**

**'கைவல் பாண'55**

**'நன்றா லம்ம பாணன தறிவே'56**

**‘நல்யாழ் பாண’57**

**‘நினக்கியாம் பாணரு மல்லே’58**

என்ற வரிகள் ஏவல் தொழிலை இனி செய்யப் போவதில்லை என்று உரிமையுடன தலைவனிடம் பாணன் கூறியதைத் தெளிவுப் படுத்துகின்றது.

பழந்தமிழ்க் குடிகளாகிய பாணரை தமிழ்நாட்டு குறுநில மன்னர்களும் பெருநில மன்னரும் ஆதரித்து வரிசை அறிந்து அவர்களுக்குப் பரிசு அளித்தார்கள். சோழ நாட்டு மன்னனாகிய கரிகால் வளவனும், தொண்டை நாட்டை ஆட்சிபுரிந்த இலந்திரையனும், குறுநில மன்னனாகிய நன்னில சோடனும், இனுவானர் குலத்தை ஆதரித்த செய்தி பத்துப் பாட்டில் கூறப்படுகிறது. சோழ நாட்டின் தலைநகராகிய காவேரி பூம்பட்டினத்தில் பெரும்பாணர் குலம் சிறப்புற்று வாழ்ந்தது என்பது சிலப்பதிகாரத்தால் நன்கு அறியப்படுகின்றது. எனவே முற்காலத்தில் தமிழிசையை இசைத் தொழிலுக்காக பயின்றவர் பாணர் குலத்தே என்பரும் அவர்களை ஆதரித்த பெருமை தமிழ்நாட்டு மன்னருக்கு உண்டு என்பதும் பண்டைய தமிழ் நூல்களால் விளங்குவன ஆகும்.

பாணர்கள் பசுவின் கன்றுகளைக் கொன்று உணவாகக் கொண்டனர் என்பதை,

**‘களிறு பெறுவல்சிப் பாணன்’59**

என்ற பரணர் பாடலால் அறியலாம்.

வளம் பெற்று வரும் ஒரு பாணர் அவ்வளம் பெற விளையும் மற்றொரு பாணனுக்கு வழிகாட்டும் முறையாக தனக்கு பொருள் அழித்த தலைவனிடம் செல்லுமாறு அதற்கான வழி கூறி நெறிப்படுத்துகிறார்.

**‘கிள்ளி வளவற் படர்குவை யாயின்**
**நெடுங்கடை நிற்றலும் இலையே கடும்பகல்**
**தேர்வீசு இருக்கை ஆர நோக்கி**
**நீஅவற் கண்ட பின்றைப் பூவின்**
**ஆடுவெண்டு இமிராத் தாமரை**
**சூடாய் ஆதல் அதனினும் இலையே’60**

என்ற பாடல் வறுமையில் வாடும் பாடனை ஆலத்தூர் கிழார் என்ற புலவர் கிள்ளி வளவனிடம் சென்றால் நடக்கும் நன்மைகளைக் கூறி வழி நடத்தியதைக் குறிப்பிடுகிறது.

**'கொடுமணம் பட்ட நெடுமொழி ஒக்கலொடு**
**பந்தர்ப் பெயரிய பேர் இசை மூதூர்**
**கடன் அறி மரபின் கை வல் பாண**
**தெண் கடல் முத்தமொடு நன்கலம் பெறுகுவை**

**……..**

**…….**

**பறை பண் அழியும் பாடு சால் நெடுவரைக்**
**கல் உயிர் நேரிப் பொருநன்**
**செல்வக் கோமாற் பாடினை செலினே61**

என்று கபிலர் செல்வக் கடுங்கோவாழியாதலின் கொடைத்திறத்தைப் பாணன் ஒருவனுக்கு கூறி வழிகாட்டியதைப் புலப்படுத்துகிறது.

ஒரு பாணன் வறுமையின் கொடுமையை அனுபவித்தல் அறிந்திருந்ததால் தான் அவனால் மற்றொரு பாணனின் வறுமையை புரிந்து கொண்டு உதவ முடிகிறது. இதனை தன் வறுமையைத் தீர்த்த நல்லியங்கோடனைப் பற்றி

**'குறிஞ்சிக் கோமான், கொய்தளிர்க் கண்ணிச்**
**செல்லிசை நிலைஇய பண்பின்**
**நல்லியக் கோடனை நயந்தனிர் செலினே62**

எனக் கூறி அறிமுகப்படுத்தி அவர்களுக்கு வழிகாட்டுகின்றன.

**'பரிசுப்பெற்று திரும்பும் பாணன் வறுமையில் வாடும் பாணனின் மான உணர்வை உணர்ந்த நிலையில் தானே தேடிச் சென்று தலைவனிடம் செல்லுமாறு வழி நடத்துகின்றான்.'63** என்று மு. வரதராசனார் விளக்க மளித்துள்ளார்.

வறுமையே ஒருவனை நல்ல பண்புள்ள மனிதனாக மாற்றும் என்பார்கள். அதே நேரத்தில் அதற்கு எதிர்மாறாகக் கூட ஒருவனை அது மாற்றிவிடும். ஆனால் சங்ககால கலைஞர்கள் தாம் வறுமையில் உழன்றவர்களாக இருப்பினும்

தன்னைப் போல் மற்றவர்கள் துன்பப்படக் கூடாது என்ற உயரிய நோக்கில் பிறருக்கு உதவும் மனப்பான்மை உள்ளவர்களாக இருந்திருக்கின்றனர் என்பது தெளிவாகிறது.

நன்னனைப் பாடி பரிசுப்பெற்று திரும்பும் பாணர் வழியில் கண்ட பாணர்களையும் விறலியர்களையும் பார்த்து நீங்கள் செல்லும் நாடு மலைநாடு ஆகையால் பல துன்பங்களை அனுபவிக்க நேரிடும் இருப்பினும் அதனைப் பொருட்படுத்தாமல் நான் கூறும் வழியில் சென்று நன்னனை சந்தித்து நான் பெற்ற பரிசுகளைப் போல் நீங்களும் பெற வேண்டும், என்று உயர்ந்த நோக்கில் வழிகாட்டுவதைக்

**'கயம்புக் கன்ன பயன்படு தண்ணிழல்**
**புனல்சாய் கழீஇய மணல்வார் புறவில்**
**புலம்புவிட் புகுந்த புனிறில் காட்சிக்'64**

**'நன்னன்செய் நன்னற் படர்ந்த கொள்கையொடு**
**உள்ளினிர் சேறிர் ஆயிற்'65**

**'கோடு பல முறஞ்சிய சோளி ஆலத்துக்**
**கூடு இடத்து அன்ன குரல் புனர் புள்ளி**
**நாகுநான் நனந்தலை குரல் புணர் அகன் மீன்'66**

என்ற பாடலும் உணர்த்துகிறது.

சங்க காலத்தில் பொருள் நிலையில் தாழ்ந்திருப்பினும் மன நிலையில் உயர்ந்து இருந்த கலைஞர்களின் குணநலத்தைச் சங்கப் பாடல்கள் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றன.

**4.2.2 பொருநன் வழிகாட்டும் முறை**

பொருநர்கள் மூன்று வகையாகப் பிரித்துக் கொள்வதும் உண்டு. அதாவது

**பொருநர்**

ஏர்களம் பாடுபவர், போர்க்களம் பாடுபவர், பரணி பாடுபவர்

எனத் தமிழாய்ந்தச் சான்றோர்கள் பலர் கூறியிருக்கின்றனர். வறுமைக்கு வாழ்க்கைப்பட்ட ஒரு பொருநன் தன் மனைவி மற்றும் சுற்றத்தாருடன் ஒரு

வள்ளலை நாடி செல்கின்றார். வழி நடைச் சோர்வு ஏற்படாமல் இருக்கும் பொருட்டு பாடினி யாழினை இசைத்துப் பாடுகிறார். அந்தச் சமயம் அவ்வழியே வந்த மற்றொரு பொருநர் அவர் நிலையறிந்து தான் கரிகால் பெருவளத்தானைச் சந்தித்துப் பரிசு பெற்று திரும்பியச் செய்தியைக் கூறி ஏழைப் பொருநனையும் அவ்வாறு அவனிடம் சென்று பரிசு பெறக் கூறுவதை

**'போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந**
**ஆடுபசி யுழந்தநின் இரும்பே ரொக்கலொடு**
**நீடுபசி யொராஅல் வேண்டி னீடின்**
**றெழுமதி வாழி ஏழின் கிழவ்67**

என்ற பாடல் தெரிவிக்கிறது.

### 4.2.3 கூத்தர் வழிகாட்டும் முறை

கூலியாகப் பெற்ற பொருட்களைச் சேமிக்க மனமின்றி இடையறவின்றி உண்டு தீர்க்கும் பண்பினர் பொருளினை விரும்பி வேற்றூருக்குச் செல்பவராய் நீரில் வாழ்வதான முதலை வாய் பிளந்தாற் போல தோன்றும் ஆரைக் கால்கள் வேயப் பெற்றதும் ஒலிக்கும் இடனுடையதுமான சக்கரங்களை உடைய வண்டிகளிலே கூத்தர்கள் செல்வர்கள்.

'எம்மூர் இது' என்று யாதொரு ஊரையும் குறித்துச் சொல்வது அன்றி எல்லா ஊரையுமே தமதாகக் கொண்டு வாழும் துயரமற்ற வாழ்க்கையை வாழ்ந்தவர்கள் அவர்கள். சுய நெறியின் தொடக்கத்தே தம் வழிநடை வருத்தத்தை மரத்தடிகளில் தங்கிப் போக்கிக் கொள்வார்கள்.

பரிசுப் பெற்றுத் திரும்பும் கூத்தன் வழியிலே வறுமையில் வாடி நின்ற மற்றொரு கூத்தனை நன்னன் என்னும் மன்னனிடம் செல்லுமாறு கூறி வழிகாட்டியதை இரணிய முட்டத்து பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் இயற்றிய கூத்தராற்றுப்படை (மலைபடுகடாம்) பாடல்கள் கூறும்.

### 4.2.4 புலவர்கள்

**'சங்ககால தமிழ்ப் புலவர்கள் தாம் பெறுதற்குரிய பரிசுப் பொருளையே பெரிதென நம்பி தகுதியில்லாதவரைப் பாடும் இயல்பினரல்லர். தமக்கு இயல்பாய் அமைந்த பலமைத் திறனையோ அன்றி தாம் பரிசில் பெற விரும்பிய**

**தலைவனையோ அவனால் அளிக்கப் பெறும் பரிசில் பொருளையோ கருதாமல் தம்மால் பாடுதற்குரிய நல்லியல்பாக அத்தலைவன் பால் அமைந்துள்ள ஒழுகலாறு ஒன்றையே தம் பாடலுக்குரிய நற்பொருளாகக் கொண்டிருந்தார்கள். அக்காலத் தலைமக்களும் இத்தகைய புலவர்களால் நன்கு மதிக்கப்பெறும் சிறப்பினையே வாழ்க்கையில் தாம் பெறுதற்குரிய நற்பெயராகப் பெரிதும் விரும்பினார்கள். ஆகவே இங்ஙனம் புலவரால் பாடப்பெறும் நற்பண்புகளை ஆளுதற்றன்மையாகிய தகுதி சங்ககால தமிழ்மக்கள் பால் நன்கு அமைவதாயிற்று'68** என்பர் வெள்ளை வாரணர்.

**'சங்க நூல்கள் அக்கால அரசியல் அமைப்பு முறைகளைப் பார்க்கினும் மக்கள் வாழ்க்கை நிலையையே மிகத் தெளிவாய் படக்காட்சி போல் எடுத்துக் காட்டுகின்றன. பண்டைய தமிழ் புலவர் மண்ணுலகில் பிறந்த மண்ணாழர் மக்கள் அறிந்தவாறு அண்ணார் வாழ்க்கையில் கண்ட வாய்மைகளைத் திரைப்படத்தில் உருவாக்குவது போல் எடுத்துக் காண்பிப்பதில் அப்புலவர் இகல் கொண்டனர் எனக் கூறுகின்றார் பி.டி. சீனிவாச ஐயங்கார் தனிப்பட்ட ஆறுதலையோ இகழ்ச்சிகளையோ புனைந்துரைக்கும் செயற்கு நடுவே சமுதாய பழக்க வழக்கங்களையும் சமைய அனுட்டானங்களையும் நுண்கலை வளர்ச்சியையும் கலை வளர்ச்சியையும் கல்வி பெருக்கத்தையும் இப்புலவர்கள் எடுத்துரைத்து உள்ளனர். அவர் சொற்கள் எவ்வளவு தற்செயலாகவும் மறைமுகமாகவும் அமைந்துள்ளனவோ அவ்வளவு உண்மையாகவும் இயல்பாகவும் படம் போல தெளிவுற புலப்படுத்துகின்றன'69**

பழங்காலத்தில் வாழ்ந்த புலவர்கள் தம்மை மதியாத மன்னர்கள் அளித்த பரிசு பொருட்களை அடியோடு வெறுத்தார்கள். வாங்க மறுத்தார்கள்.

> **'முற்றிய திருவின் மூவர் ஆயினும்**
> **பெட்பின் றிதல் யாம்வேண் டலமே'70**

என்கிறார் பெருந்தலைச் சாத்தனார். காரணம் கோடைமழைத் தலைவன் நெடுவேட்டுவனை காண வந்தவரை உரிய காலத்தில் பரிசு அளிக்காமல் காலம் தாழ்த்தினர். எனவே புலமையின் பெருமையை அறிந்து கொடுக்கின்ற கொடை மட்டுமே பெறுவேன். அன்பற்றவர் யாராயினும் அது முடியுடை வேந்தனே

ஆனாலும் அவர் தரும் பரிசினை ஏற்றுக் கொள்ள மாட்டேன்' என்று அவனை விட்டு நீங்கியதை இப்பாடல் வரிகளால் அறிய முடிகிறது.

தமக்குப் பரிசுப் பொருள் கிடைக்காவிட்டாலும் அதற்குத் தர மறுத்த மன்னரைப் புலவர்கள் வைததில்லை. அதற்கு பதில் 'தாம் புறப்பட்ட நேரம் சரியில்லை' என்றே கருதினர் என்பதை

**'புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை**
**உள்ளிச் சென்றோர்ப் பழியலர் அதனால்**
**புலவேன் வாழியர் ஓரி விசும்பின்**
**கருவி வானம் போல**
**வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே'71**

என்ற காலத்தின் யானையால் பாடல் வரிகள் புலப்படுத்துகிறது.

சங்ககாலப் புலவர்கள் பெரும்பாலும் மன்னர்களை வாழ்த்தியும் அவர்களைத் 'தூற்றியும்' அவர்களுக்குப் 'புத்திமதி சொல்வது' போல் பயமுறுத்தியும் அவர்கள் 'இறப்பு நிலையை' எடுத்துக் கூறியும் பாடல்களைப் பாடி பிழைத்தது புறநானூற்று பாடல்களால் அறியலாம்.

இரவலர்க்கு ஊனும் சோறும் கொடுக்கப் பல கலன்களம் சிறப்புத் தந்தான். எல்லாம் எதற்காக, இடுகாட்டிலே தனக்கும் இடம் மெல்ல மெல்ல தயாராகி வருவதை உணர்ந்து உயர்ந்தோர் நாட்டிற்குப் புகழ் உடம்போடும் செல்வதற்கே அவன் இவையெல்லாம் செய்தனன் என அறிவீராக எனப் பொருள்பட,

**'இடம் சிறிது ஒதுங்கல் அஞ்சி**
**உடம்பொடும் சென்பார் உயர்ந்தோர் நாட்டே'72**

என்ற வரிகள் உடைய சிறுவெண் தேரையார் பாடல் வலியுறுத்துகிறது.

மேலும் கூகைக்கோழியார் அரசனைப் பார்த்து சொல்கிறார் 'மறப்போரிலே வல்ல என் தலைவனே! பாடினி பெரிய பொன்மாலை அணியவும் பாணன் பொற்றாமரை பூ சூடவும் ஆட்டுக் கிடாவை நெருப்பிலிட்டுப் பக்குவமாக வெந்த இறைச்சியும் கள்ளும் உண்டு அவர்தம் நாவின் திறமையெல்லாம் காட்டிபாட நாளும் உண்டு திண்ணும் இரவலர்க்குத் தந்தும் மகிழவெல்லாம் வருக.

இறந்தோர் உடல்களை விட்டுப் புதைத்தும் முதுமரப் பொந்திலே கூகைகோழி இருந்து கூவுவதுமான இடுகாட்டை அடைந்த பின் இ∴தெல்லாம் செய்வதற்கு அரியன பெருமானே அறிவாயாக' என்று கூறுவதிலிருந்தும் அறியலாம்.

**'முதுமரப் பொந்தின் கதுமென இயம்பும்**
**கூகைக்கோழி ஆனாத்**
**தாழிய பெருங்காடு எய்திய ஞான்றே'73**

இக்கருத்தையே சோதமனார் பாடலும், ஔவையார் பாடலும் வலியுறுத்துகிறது.

**'காவு தோறிழைத்த வெறிஅயர் களத்தில்**
**இடம்கெடத் தொகுத்த விடையின்**
**மடங்கல் உண்மை மாயமோ அன்றே'74**

**'பாசிழை மகளிர் பொலம்கலத்து ஏந்திய**
**நாரரிதேறல் மாந்தி மகிழ்சிறந்து**
**இரவலர்க்கு அருங்கலம் அருகாது வீசி**
**வாழ்தல் வேண்டும்இவண் வரைந்த வைகல்**
**வாழச் செய்த நல்வினை அல்லது**
**ஆழுங் காலைப் புனைபிறிது இல்லை'75**

அதியமானைக் கண்டு பரிசுபெற்று வந்த பெருஞ்சித்திரனார் என்னும் புலவர்க்கு அவருக்குரிய பரிசு பொருளைப் பணியாளர்கள் மூலம் கொடுத்து அனுப்பியதைக் கண்ணுற்ற புலவர் கோபம் கொண்டார். நான் அதியமானிடமே நேரில் பரிசு பெற வந்தேன். புலமையின் சுவை அறிந்து அவன் திணையளவு பரிசு தந்தாலும் அதைப் பெரிதாக மதித்து அகம் மகிழ்ந்து இருப்பேன். ஆனால் அவன் பாராமுகமாகக் கொடுத்தனுப்பிய பரிசினை 'நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன்' என்று உணர்ச்சி ததும்ப கூறிய பாடல்கள் புலவர்களின் வறிய வாழ்க்கையிலும் செம்மைத் தழைத்திருந்ததை விளக்கும்.

மக்களின் மனச் செம்மை என்ற இவ்வியலில் குடிகளின் வறுமையினையும், அவர்களின் வள்ளன்மையும், ஐவகை நிலத்தாரின் உளப்பாங்கும், பரிசில் பெற்று மீண்ட கலைஞர்கள் வழிகாட்டிய முறைகளும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. இலக்கிய விமர்சனம் பக். 12
2. தமிழ் இலக்கியக் கொள்கை ஓர் அறிமுகம் - தொகுதி 1 பக்.4
3. அகநானூறு – பாடல் எண் 200:1-3
4. மேலது, பாடல் வரி 263 – 265
5. எழுபது கோடியில் இவனும் ஒருவன் பக். 72
6. மேலது பக். 83
7. சிந்திப்போம் சிந்திக்க வைப்போம் 25
8. மேலது பக். 31
9. மேலது பக். 10
10. புறநானூறு பாடல் எண் 320
11. மேலது பாடல் எண் 375 : 6-8
12. மேலது பாடல் எண் 377: 1-2
13. மேலது பாடல் எண் 383:1-2
14. சிறுபாணாற்றுப் படை பாடல் வரி 135-139
15. எழுபது கோடியில் இவனும் ஒருவன் பக். 16-19
16. பொருணராற்றுப்படை பாடல் வரி 80-82
17. எழுபது கோடியில் இவனும் ஒருவன் பக். 52
18. மேலது பக். 69
19. சிந்திப்போம் சிந்திக்க வைப்போம் பக். 24
20. திருக்குறள் குறள் எண் 221
21. மேலது, குறள் எண் 223
22. முதுமொழிக் காஞ்சி, பாடல் எண் 9
23. அகநானூறு பாடல் எண் 151:1-5
24. சங்க பேழை பக். 22
25. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 286 – 290

26. மலைபடுகடாம், பாடல் வரி 280-285
27. மேலது பாடல் வரி, 164-169
28. மேலது, பாடல் வரி 184
29. பெரும்பாணாற்றுப்படை, பாடல் வரி 184-191
30. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 271-285
31. கூத்தாற்றுப்படை, பாடல் வரி, 408-412
32. மேலது, பாடல் வரி, 415-417
33. அகநானூறு பாடல் எண். 311:6-12
34. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 248-254
35. சிறுபாணாற்றுப்படை, பாடல் வரி 188-195
36. பெரும்பாணாற்றுப்படை, பாடல்வரி 262
37. மேலது, பாடல் வரி 253 – 256
38. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 315 – 326
39. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி, 146-149
40. மேலது, பாடல் வரி, 163
41. பெரும்பாணாற்றுப்படை, பாடல்வரி 275 – 283
42. அகநானூறு, பாடல் எண் 30:8-9
43. பெரும்பாணாற்றுப்படை, பாடல் வரி 129-133
44. தொல்காப்பியம், நூ. 1037
45. புறநானூறு, பாடல் எண் 163:5-7
46. பொருநராற்றுப்படை, பாடல் வரி 61-63
47. மேலது, பாடல் வரி 66-73
48. கூத்தாற்றுப்படை, பாடல் வரி 17-18
49. மேலது, பாடல் வரி 199-202
50. தொல் பொருள். நூ.193
51. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 160
52. ஐங்குநுறூறு பாடல் எண் 664

53. மேலது, பாடல் வரி 296
54. ஐங்குநுறூறு, பாடல் எண். 472:1
55. மேலது, பாடல் எண். 473:5
56. மேலது, பாடல் எண். 474:6
57. மேலது, பாடல் எண். 478:5
58. மேலது, பாடல் எண். 480:1
59. நற்றிணை, பாடல் எண் 310:9
60. புறநானூறு பாடல் எண் 69 : 16-21
61. பதிற்றுப்பத்து, பாடல் வரி 67:1-4, 21-23
62. சிறுபாணாற்றுப்படை, பாடல் வரி 267-269
63. தமிழ் இலக்கிய வரலாறு பக்.
64. கூத்தாற்றுப்படை பாடல் வரி 47-49
65. மேலது, பாடல் வரி 64 – 65
66. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 160-163
67. பொருநராற்றுப்படை, பாடல் வரி 60-63
68. தென்னிந்திய வரலாறு 69
69. தமிழ் இன்பம் பக். 17
70. புறநானூறு பாடல் எண். 204:10-15
71. மேலது பாடல் எண். 362 : 21 - 22
72. மேலது பாடல் எண். 364 : 11 - 13
73. மேலது பாடல் எண். 366 : 21 - 23
74. மேலது பாடல் எண். 367 : 6 - 11
75. மேலது பாடல் எண். 371: 8-13

## இயல் 5

## வளமும் வள்ளல்களின் வளமையும்

பண்டைய இந்தியத் தத்துவ ஞானி கபிலர் 2500 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். அவர் 'நிரந்திரமானது எதுவுமில்லை' எந்தவொரு பொருளும் வெற்றிடத்திலிருந்து தோன்றுவதில்லை. மற்ற பொருள்களிலிருந்து, அதாவது அழிந்துவிட்ட மற்ற பொருள்களிலிருந்து தான் தோன்றுகிறது. ஏனெனில் அழிகின்ற பொருள்கள் ஒன்றுமில்லாமல் போவதில்லை. புதிய பொருள்கள் தோன்றுவதற்கான ஆதாரப் பொருளாக அவை அமைகின்றன. எனவே எதிலிருந்து புதிய பொருள்கள் தோன்றுகின்றனவோ அது எப்போதும் இருந்து கொண்டுதான் இருக்கிறது. எனவே படைக்கப்பட முடியாத அழிக்கப்பட முடியாத மூலப்பொருள் இருந்து வருகிறது, எனவும், இதிலிருந்து தான் எல்லா வஸ்துகளும் அதாவது பருப்பொருள் தோன்றுகிறது எனவும் முடிவு செய்தார் கபிலர்.

கபிலரைப் போலவே, பருப்பொருள் பற்றிய கருத்தை நோக்கி மற்ற பண்டைய தத்துவஞானிகளும் வந்து அடைந்தனர். ஏறக்குறைய கபிலர் காலத்தில் வாழ்ந்த பழம் கிரேக்கத் தத்துவஞானிகள் இயற்கையில் நேரடியாக நம் முன் உள்ள பொருள்களில் இப்பருப்பொருளைத் தேடினர். இவர்களில் ஒருவரான தாலெஸ் (Thales) எல்லாப் பொருள்களுக்கும் மூலம் தண்ணீர் அல்லது ஈரம் என்று கருதினார். மற்றொரு தத்துவஞானியான அனாக்சிமேனஸ் (Anaximenes) இம்மூலம் காற்று என்றார்.

**ஹெராக்ளிடஸ் நெருப்பு என்றார். எம்பேடக்ளிஸ் எல்லாவற்றுக்கும் மூலம் காற்று, தண்ணீர், நெருப்பு, மண் என்ற நான்குமே என்றார். பின்னர் வந்த பொருள்முதல்வாதத் தத்துவஞானியான டெமாக்ரிடஸ். கண்ணால் காணவோ, தொட்டறியவோ முடியாத மிகச் சிறு வஸ்துக்களான அணுக்கள் (கிரேக்க மொழியில் 'atom' என்னும் சொல்லுக்குப் "பிரிக்க முடியாதது" என்று பொருள்) என்ற நிரந்தரமான, அழிக்க முடியாத, மாற்ற முடியாத வஸ்துக்களிலிருந்து தோன்றுவதுதான் பருப்பொருள் என்றார். அணுக்கள் உறுதியானவை, குறிப்பிட்ட பருமன், வடிவம், எடை இயக்கம் ஆகியன கொண்டவை. அனைத்தும் குறிப்பிட்ட முறையில் இணைந்த அணுக்களைக் கொண்டவை. அணுக்களின் குறிப்பிட்ட இணைப்பு உடையும் போது அந்த வஸ்து அழிந்து போகிறது. இயற்கையில்**

**பலவிதமான வஸ்துக்கள் காணப்படுவதற்குக் காரணம் அணுக்கள் பலப்பல விதங்களில் இணைந்து இருப்பதே என்றார் டெமாக்ரிடஸ். ஒரு வஸ்துவின் மேற்பரப்பிலிருந்து மிக நுண்ணிய அணுக்களின் அடுக்குகள் வெளிப்படுகின்றன என்றும், இந்த அடுக்குகள் எந்த வஸ்துவிலிருந்து பிரிந்ததோ அந்த வஸ்துவின் வடிவத்தை அப்படியே இவை பெற்றிருக்கின்றன என்றும், இந்த அடுக்குகளே நமது புலன்களில் தட்டுப்படுகின்றன என்றும் டெமாக்ரிடஸ் சொன்னார். இதன் விளைவாக நமக்குப் புலனுணர்வு ஏற்படுகிறது என்றும், புலனுணர்வின் அடிப்படையில் கருத்துருவங்கள் உண்டாகின்றன என்றும், எனவே வஸ்துக்களின் மேற்பரப்பிலிருந்து வெளிப்படுகின்ற அணு அடுக்குகளின் பதிவுகளே நமது புலனுணர்வுகளும் கருத்துருவங்களும் ஆகும் என்றும் அவர் போதித்தார்."**[1]

பலப்பொருள்களைத் தாங்கி உள்ளது வளம் எனும் சொல். வளத்தினை இயற்கைவளம், மனித வளம் எனப் பகுத்தோமானால் மலைகள், மண்வகைகள், நீர்நிலைகள், காற்று, அருவி, தட்பவெப்பநிலை, தாவரங்கள், விலங்குகள் போன்றவை இயற்கை வளமாகக் கொள்ளலாம். மனித வளம் என்று அவன் சிந்தனையைச் சொல்லலாம். தனி மனித ஆற்றலே மனித வளம் எனப்படுகிறது.

எந்தவொரு நாடும் எண்ணிலடங்கா இயற்கை வளத்துடன் இருப்பினும் அந்த நாட்டில் மனிதவளம் இல்லாமல் போனால் எந்தப் பயனும் இல்லை. மனித வளமானது நாட்டுக்கு நாடு காலத்திற்குக் காலம் மாறுபடும் தன்மையானது. இயற்கையோடு இணைந்தும் தனித்தும் ஆளுகின்ற ஆற்றலுடையது.

### 5.1 இயற்கை வளமும் பொருளாதார நிறைவும்

சங்ககால தமிழகம் இயற்கைவளம் நிரம்பியதாக இருந்திருக்கிறது. மலை வளமும், மண் வளமும், காடு வளமும், நீர் நிறைகளும் செழிப்புற்று இருந்தன. நல்ல தட்பவெப்பநிலை நிலவியது. இதனால் தாவரங்களும், விலங்குகளும் செழிப்புடனே இருந்தன. காற்றும் தூய்மையாக இருந்தது.

#### 5.1.1. மலை வளம்

மலையும் மலை சார்ந்த இடங்களும் வளமாக இருந்தது. அதில் மா, பலா, வாழை எனப் பழமரங்களும் அகில், சந்தனம், சிறு மூங்கில், பெரு மூங்கில், சுரப்புன்னை போன்ற மரங்கள் செறிந்த காடுகளையும் கொண்டிருந்தது. யானை, புலி, கரடி, காட்டுப்பன்றி, காட்டுப்பசு, வரையாடு, குரங்கினங்கள்

முதலியனவும், மிளகு செடிகள், நீர் அருவிகள் என அனைத்து வளங்களையும் கொண்டிருக்கின்றது.

திருமுருகாற்றுப்படை மலை அருவியின் மாண்பினையும் அழகினையும் நயம்பட எடுத்துக்காட்டுகிறது.

**வேறுப.். றுகிலின் நுடங்கி அகில் சுமந்து**
**ஆர முழுமுதல் உருட்சி வேரல்**
**பூவடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு**
**விண்பொரு நெடுவரைப் பரிதியில் தொடுத்த**
**தண்கமழ் அலரிறால் சிதைய நன்பல**
**….**
**….**
**இழுமென இழிதரும் அருவிப்**
**பழமுதிர் சோலை மலைகிழ வோனே்2**

என்று மலையின் வளத்தை அதிலிருந்து விழும் அருவி நீர் கொண்டு அழகுபட எடுத்துக்காட்டுகிறது.

### 5.1.2 மண்வளமும் காட்டின் வளமும்

நானிலங்களுக்கும் ஏற்ப மண் வளமும் நிறைந்திருந்தது. அதனால் காடுகளும் சிறப்புற்றிருந்தது. ‘ஒரு நாட்டில் இயற்கை வளங்கள் சிறப்பாக அமையவும், மக்களும் ஏனைய உயிரினங்களும் நல்ல சூழ்நிலையில் வாழவும், நிலமும், மண்ணும், விண்ணும், இணைந்த அதிசயமான படைப்பே மரம். கோடிக்கணக்கான மைல்களுக்கு அப்பால் உள்ள ஆதவன் உமிழும் சக்தி அண்டவெளியில் உள்ள கரியமில வாயு மண்ணின் ஆழ்தலத்திலுள்ள பல்வேறு மூலங்கள், வற்றாத மாக்கடலில் இருந்து மேகமாக உருவெடுத்து மழையாக மாறிக் கிடைக்கும் நீர் இவற்றைக் கொண்டு எல்லா ஜீவராசிகளுக்கும் அடிப்படை உணவையும் மற்றும் உணவிற்குப் பயன்படும் ஆயிரமாயிரம் பொருட்களையும் உருவாக்கும் ஆற்றலே மரம். இந்த ஆற்றலின் பயனாய் அனைத்து உயிர்களுக்கும் அமுதசுரபியாக மரம் விளங்கியது.

தூசி, புகை மற்றும் நச்சுப்பொருட்கள் நிரம்பிய காற்றை மரத்தின் தழைகள் வடிகட்டிடும். ஒளி, ஒலி, வெப்பம் ஆகியவற்றின் கடுமையையும் தழை

அடர்ந்த மரங்கள் தனித்திடும் வல்லரசுகளின் கொடுமையான அழிவுகளிலிருந்து காத்திட மரங்களால் இயலும். சரித்திரக் காலத்தில் கொடுங்கோல் அரசரிடமிருந்து தப்பித்த மக்களைக் கானகங்கள் காத்தன என்பதுடன் நின்றிடவில்லை. இன்றைக்கும் கூட வியட்நாம் போரில் குடாபூல் மக்களுக்குக் கைகொடுத்துள்ளது. வெள்ளம் வறட்சி என்ற கொடுஞ் சூழ்நிலை களிலிருந்தும் மரங்கள் வாழ வழி செய்திடும். **'கல்கத்தா பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டாக்டர் டி.எம்.தாஸ் மரத்தின் தேவையைப் பணத்தின் அடிப்படையில் கணக்கிட்டுள்ளார்.'**3 அதன்படி 50 ஆண்டுகள் வரை வாழும் ஒரு சாதாரண அளவுள்ள மரம் தனது ஆயட்காலத்தில் ரூபாய் பதினெட்டு லட்சம் பெருமானமுள்ள வேலைகளைச் செய்கிறது.

ஒவ்வொரு ஆண்டும் அம்மரம் தயாரித்து வெளியிடும் ஆக்ஸிஜன் பெருமானம் ரூபாய் 5000. புரதப் பொருளாக மாற்றும் சேவை ரூ. 20000. காற்றைச் சுத்திகரிக்கும் பணியைச் செய்ய முற்பட்டால் செலவாகும் தொகை ரூ. 500000. மரம் வெட்டப்பட்டால் அங்கு அதே அளவு மண் வளத்தைப் பாதுகாக்க 50 ஆண்டுகளில் செலவாகும் தொகை ரூ. 300000. மரத்தின் நிழலிலும் பாதுகாப்பிலும் தங்கும் பறவைகள் விலங்குகள் முதலியவற்றிற்கு மரத்திற்குப் பதிலாக இச்சேவைகளைச் செய்ய முற்பட்டால் செலவாகும் தொகை ரூ. 300000' எனப் புள்ளி விவரங்கள் கூறுகின்றன.

மரங்களும் காடுகளும் வறட்சியிலும் வெள்ளத்திலும் பாதுகாப்பு அரண்களாக விளங்குகின்றன. வறட்சி காலத்தில் கால்நடைகளுக்கு உணவாகப் பயன்படுகின்றன. மரங்களும், காடுகளும் மண் அரிப்பைத் தடுத்து நீர் நிலைகளுக்கும் பாதுகாப்பு அரண்களாக விளங்குகின்றன. மரங்களும், காடுகளும் இல்லையேல் மண் அரிப்பு ஏற்பட்டு நீர் நிலைகள் மண்மேடிட்டு அழிந்துவிடும். மண் அரிப்பைத் தடுப்பதில் மரங்கள் பெரும் பங்கு வகிக்கின்றன.

**'உலக உயிர்களுக்குப் பயன்படும் பொருட்டு மகாவிஷ்ணு மரங்களை உண்டு பண்ணினான். எனவே கோபத்தை அடக்கிக் கொண்டு மரங்களை எரிப்பதை விட்டு விடுங்கள்'**4

நெல்லி வறண்ட நிலப்பகுதியிலும் வளருகின்ற தன்மை உடையது. அதன் காயோ நீர் வேட்கை தீர்ப்பது. ஆதலின் பாலை வழியிலே நெல்லி மரங்களை

வைத்து வளர்ப்பது அந்நாளில் அறச்செயல் கருதுவோர் மரபுகளிலே ஒன்றாயிற்று என்பதை

**'நெடுஞ்சேன வந்த நீர்நசை வம்பலர்**
**செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்**
**பல்சாய் அஞ்சினை அகவும் அத்தம்5**

இந்தப் பாடல் விளக்கும்.

சங்க காலத்தில் மரங்களும் செடிகளும் நிறைந்த இடங்கள் கா, பொதும்பர், பொழி, சோலை, தண்டலை, காடு, கானம் எனப்பலப் பெயர்களால் அழைக்கப்பட்டன. குறிப்பாக அகில், சந்தனம், வேங்கை முதலிய உயரமான மரங்கள் வளரப்பெற்றதாயின் யானை, கரடி, புலி முதலிய விலங்குகள் வாழிடமாயினும் உள்ளது காடு எனப்பெயர் பெற்றிருந்தது. அந்த காலத்தில் பாதுகாக்கப்பட்டதை

**'காடு காத்துறையும் காணலர் உளரே்6**

என்ற பாடல் வரிகளால் உணரலாம்.

நம் சங்ககால தமிழகமும் காட்டுவளத்தில் மிகச் சிறப்புற்று இருந்திருக்கிறது என்பதை

**'வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறித்**
**தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்து்7**

**'கன்றமர் நிரையொடு கானத் தல்கி்8**

**'வயிரும் வளையும் ஆர்ப்ப வயிர**
**செறியிலைக் காயா அஞ்சன மலர**
**முறியிணர்க் கொன்றை நன்பொன் சாலக்**
**கோடற் குவிமுகை யங்கை யவிழத்**
**தோடார் தோன்றி குரதி பூப்பக்9**

**'பனிவார் சிமையக் கானம் போகி10**

**'வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து**
**முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து்11**

**‘….தெவ்வர்க் கோக்கிய**
**வேலினும் வெய்ய கானமவன்’**12

**‘மலையும் சோலையும் மாபுகல் கானமும்’**13

**‘களிறுமலைந் தன்ன கண்கூடு துறகல்**
**தனிபொழி கானந் தலைதவப் பலவே’**14

**‘புலியுற வெறுத்ததன் வீழ்பினை யுள்ளிக்**
**கலைநின்று விளிக்குங் கானம் ஊழிறந்து’**15

**‘கானக் கோழிக் கவர்குரற் சேவல்**
**கானப் பலவின் முழவுமருள் பெரும்பழம்’**16

என்ற சங்கப்பாடல் வரிகள் காட்டின் இயற்கை வளத்தை எடுத்துரைக்கின்றது.

சென்னியின் சோழநாடு மண்வளத்தால் மிகுந்தது. வயலிடத்தே பொய்கையில் கிடைத்த பருத்த வாலை மீனை துணைக்கறியாக கொண்டு புதுநெல்லின் மென்சோற்றை விலாப்புடைக்க தின்று மகிழ்வார்கள் உழவர்கள். அப்பெருந்தீவனத்தால் வயலிலே சூட்டையிடும் இடம் அறியாது தடுமாறுவர். சிறுவர்களோ தென்னை நெற்றை விரும்பாது உயரக் குவிந்த போரின் மீது ஏறி நின்று பனம்பழம் பறிக்க உந்திக் கொண்டிருப்பர். இத்தகைய புது வருவாய் மிகுந்து வளநாடு இருந்ததை

**‘கொண்டைக் கூழைக் கண்டழைக் கடைசியர்**
**சிறுமாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்**
**மலங்குமிளிர் செறுபின் தளம் புதடிந்திட்ட**
**பழன வாவாப் பரூ க்கண் துணியம்**
**புதநெல் வெண்சோற்றுக் கண்ணுறை ஆக**
**விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி**
**நீடுகதிர்க் கழனி சூடுதடு மாறும்**
**வன்னக வினைஞர் புன்றலைச் சிறாஅர்**
**தெங்குபடு வியன்பழம் முனையின் தந்தையார்**
**குறைகண் நெடும்போர் ஏறி விசைத்தெழுந்து**

**செழுங்கோட பெண்ணைப் பழந்தொட முயலும்**

**வைகல் யானர் நன்னட்டுப் பொருநன்..'17**

என்று கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனர் பாடலால் விளங்கும்.

### 5.1.3. நீர் வளம்

நிலவளத்திற்கு முதன்மை தேவை நீர்வளமே ஆகும். உலகின் அனைத்து பகுதிகளுக்கும் நீர்வளம் இன்றியமையாதது ஆகும். 'நீரின்றி அமையாது உலகு'. பூமியைத் தவிர வேறு எந்த கோள்களிலும் உயிரினம் இல்லை. புல் பூண்டு கூட இல்லை. காரணம் அங்கெல்லாம் தண்ணீர் இல்லை. உலகின் தோற்றத்திற்கும் வளங்களுக்கும் மூலக்காரணம் தண்ணீர் தான். மனித உடலில் பெரும்பகுதி நீரினாலேயே ஆக்கப்பட்டுள்ளது. தண்ணீர் இயற்கை கொடை. அது இல்லையேல் உணவு உற்பத்தி இல்லை. மண்ணும், காற்றும் கூட வறண்டு போகும். எல்லா வளங்களுக்கும் தாய் நீர் வளமே. எனவே தான் நம் முன்னோர்கள் 'தாயை பழித்தாலும் தண்ணீரை பழிக்காதே' என்றார்கள். தண்ணீர் உயிரின் ஆதாரம். மண்ணின் உயிர்துளி. வாழ்க்கையின் அடிப்படை.

சங்க காலத்தில் நீர் வளத்தில் தமிழ்நாடு நிரம்பி இருந்ததை அறிய முடிகிறது. மக்களுக்கு நீர் வளத்தையும், குளத்தையும், கிணற்றையும், பலரும் செல்லும் வழியில் தங்குவதற்குரிய சிறு வீடுகளையும், தண்ணீர் பந்தல்களையும் அமைத்திட்டவன் சிறந்த செல்வம் உடையவனாய் இம்மையில் கிடைக்கும் இன்பங்களை நன்கு அனுபவிப்பவன் என்பதை

**'உன்னீர் வளம் குளம் கூவல் வழிப்புரை**

**தண்ணீரே யம்பலந்தான் பாற்ப்படுத்தான் - பன்னீர்**

**பாடலோ டாடல் பயின்றுயர் செவ்வனாய்க்**

**கூடலோ டூடலுலான் கூர்ந்து'18**

என்ற பாடல் இதனை உணர்த்தும்.

#### 5.1.3.1. அணை

மழைநீரை தேக்கி வைத்து அதை பாசனத்திற்கு பயன்படுத்திக் கொள்ளும் முறையினை சங்ககால உழவர்கள் ஓரளவிற்கு தெரிந்து வைத்திருந்தனர். காஞ்சி மரத்தின் குறுகிய கட்டைகளைக் குத்தி இனிய

சுவையினை உடைய மெல்லியத் தண்டினைக் கொண்ட சிறந்த கரும்பு கழிகளைப் பலவாக வைத்து அடைத்து செந்நெற் பயிரினை உடைய பெரிய வயலில் பசிய பள்ளங்களிலே நீரைத் தேக்கி வழிய இடத்தினை உடைய வளைந்த அணியினை வருத்தமுற்று உழவர்கள் அமைத்த முறையினை

**'கள்ஆர் உவகைக் கலிமகிழ் உழவர்**
**காஞ்சிஅம் குறுந்தறி குத்தி, தீம்சுவை**
**மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து,**
**பெருஞ்செய் நெல்லின் பாசல் பொத்தி,**
**வருத்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை**
**மீதுஅழி கடுநீர் நோக்கீ'19**

என்ற அகநானூறு பாடல் நமக்கு தெளிவுப்படுத்துகிறது.

**5.1.3.2 குளம்**

சங்க காலத்தின் நீர்வளம் சிறப்புற்று இருந்ததையும் கோடைக்காலத்தில் கூட குளத்தில் நீர் நிறைந்திருந்ததையும் அதில் மீன்பிடித் தொழில் நடந்தமையினை

**'கோடை நீடினும் குறைபட லறியாத்**
**தோடாழ் குளத்த கோடுகாத் திருக்கும்**
**கொடுமுடி வலைஞர் குடி'20**

என்ற பாடலால் அறியலாம்.

மேலும் மழைநீரால் குளம் நிரம்பி அதன்மூலம் வயல் செழித்ததை

**'சிதரற் பெரும்பெயல் சிறத்தலிற் றாங்காது**
**குணகடற் கிவர்தருங் குரூஉப்புன லுந்தி**
**நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றிக்**
**களிறுமாய்க்குங் கதிர்க்கழனி'21**

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது.

மழைக்காலத்தில் குளங்களில் நீரைத் தேக்கி வைத்து பயன்படுத்தினர். மேலும் மழைநீரால் நிரம்பி குளங்களுக்கு சேதம் ஏற்படா வண்ணம் மதகுகளைத்

திறந்து விட்டும் முழுநீரும் வழிந்து போகாதவாறு மீண்டும் மதகுகாண் கண்ணுள்ள சிலவற்றை அடைத்தும் விழிப்பாக காத்து வருவதற்கும் காவலர்களையும் நியமித்திருக்கின்றனர். இவர்களைக் ‘காப்பாள்’ என்றும் ‘மாரி குளத்துக் காப்பான்’ என்றும் அழைக்கப்பட்டதை

**‘மாரிக் குளத்துக் காப்பா என்னன்’22**

என்ற ஐங்குறுநூறு பாடல்வரிகளால் புலப்படும்.

**5.1.3.3. கிணறு**

சங்க காலத்தில் கிணற்று நீர் பாசன வசதியும் செய்யப்பட்டு இருந்தது, இதனை கல்லறுத்து இயற்றிய வள்ளுவர் கூவல் என்ற உறையூர் முதுகூற்றனார் பாடலின் வரியானது செங்கற்களை அறுத்துக் கட்டிய கிணறு இருந்ததைக் குறிப்பிடுகிறது.

**5.1.3.4 ஆறு**

ஆற்று வளத்தை அடிப்படையாகக் கொண்டதே நாட்டு மக்களின் வாழ்க்கை வளம். ஆறுகளின் போக்கும், பயனும், மலைகளின் அமைப்பும், மலையின் வளத்தையும் அடுத்துள்ளன. **‘தென்னிந்தியாவில் வடபாகத்திலுள்ள நர்மதை, தபதி என்னும் ஆறுகளை தவிர மற்ற ஆறுகள் அனைத்தும் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஓடி வங்காள விரிகுடா கடலில் சென்று சேர்கின்றன. மக்கள் தொகை குறைவாக இருந்த பண்டைய காலந்தொட்டே அவர்கள் ஆற்றோரங்களில் விரும்பி வாழ்ந்து வந்தனர். நாட்டின் தலைநகர்களும், பேரூர்களும் ஆற்றங்கரைகளிலே தோன்றின. புகார், வஞ்சி, மதுரை, விஜயநகரம், தம்பிலி முதலிய தென்னாட்டின் புகழுடன் விளங்கிய தலைநகருள் சிலவாம்’23**

மேலும் நாடுகளையும் அவற்றின் உட்பகுதிகளின் எல்லைகளையும் அமைப்பதில் ஆறுகள் பயன்பட்டன. உழவுத் தொழிலுக்கு ஆறுகள் அளிக்கும் நன்மைகள் கொஞ்சமல்லவே. ஆறுகளின் அண்மையிலும், கழிமுகத்திலும் நெற்பயிர்கள் செழிப்பாக வளருகின்றது. காவேரி ஆற்றின் கழிவுகளும் மிக்க வளம் படைத்தவை. மேலும் ஆறுகளில் வெட்டப்பட்டிருக்கும் பற்பல கால்வாய்கள் பல இடங்களுக்கும் நீர்பாசன வசதி அளிக்கின்றன.

**5.1.3.4.1 காவேரி ஆறு**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழகம் காவேரியின் ஆதி அந்தத்தை நன்கு உணர்ந்திருந்து அதனை தம் நாட்டு வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டனர்.

**'குடமலைப் பிறந்த தண்பெருங் காவேரி**
**கடன்மண் டழுவத்துக் கயவாய் கடுப்ப்'24**

என்ற காவேரி ஆறு குடகுவழிப் பிறந்து புகாரிலே கலப்பதை கூறுகின்றது.

**'வான் பொய்ப்பினும் தான் பொய்யா**
**மலைத்தலைய கடற்காவிரி**
**புனல்பரந்து பொன்கொழிக்கும்'25**

என்னும் வரிகள் வானம் மழை பெய்யாமல் பொய்த்துப் போனாலும் காவேரியானது ஏமாற்றாமல் நீர் பெருக்கெடுத்து வந்து வளம் செய்ய உதவியதை உறுதி செய்கிறது. மேலும் காவேரி புனித நீராடும் இடமாகவும் சங்ககாலம் தொட்டே இருந்து வந்துள்ளது.

தமிழ்நாட்டின் நல்லணியாக திகழும் காவேரி ஆற்றை இளங்கோவடிகள் இசைப்பாட்டால் புகழ்ந்து வாழ்த்தியுள்ளார்.

**'பூவார் சோலை மயிலாலப் புரிந்து குயில்கள் இசைபாட**
**காமர் மாலை அருங்கசைய நடந்தாய் வாழி காவேரி**
**காவிரி வந்து கவர்ப்பு ஊட்டதி**
**தோடுகொள் வேலின் தோற்றம் போல**
**ஆடுகண் கரும்பின் வெண்பூ நுடங்கும் நாடு'26**

என்று காவேரி வாய்க்கால்கள் வழியாக சென்று ஊட்டத்தொகுதி கொண்ட கரும்பு விளையும் நாடு என வெள்ளைக்குடிநாகனார் கூறுகிறார்.

**'வசையில்புகழ் வயங்குவெண்மீன்**
**திசைதிரிந்து தெற்கேகினும்**
**தற்பாடிய தளியுணவிற்**
**புட்டேம்பப் புயன்மாறி'27**

என்று காவேரி ஆறு குற்றங்கள் இல்லாத பெருமையினை உடையது என்றும் அடிவானத்தில் ஒளியோடு தோன்றும் வெள்ளிக்கோள் தான் நிற்பதற்குரிய வடக்கு திசையில் நிற்காமல் இடம் மாறி தெற்கே சென்றாலும் (அவ்வாறு சென்றால் நாட்டில் மழை பெய்யாமல் கடுமையான வறட்சி தோன்றும் என்று கூறுவார்கள்) நீரை உணவாக உண்டு வாழும் வானம்பாடி பறவைகள் உணவில்லாமல் தவிக்குமாறு மழை பெய்யாமல் போன காலத்திலும் காவேரி நீர் கொடுத்து பயன்தரும் என்று கூறுகிறார்கள்.

ஒரு வேலி நிலம் ஆயிரம் கலம் நெல் விளைக்கும் தன்மை உடையது காவிரி ஆறு என்பதை

சாலி நெல்லின் சிறைகொள் வேலி ஆயிரம் விளையிட் டாகக் காவிரி புரக்கு நாடு கிழவோனே என்ற பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றது.

**'திடற் விளங்கு கரை பொன்னி'28**

**'இனி திரைத் திவலை மோத எறியும் தண்பறவை'29**

என்று மணற்குன்றுகள் விளங்கா நின்ற காவேரி என்றும் கொந்தளிக்கும்படியான குளிர்ந்த கடல் பொன்ற காவேரி என்றும் குலசேகராழ்வார் கூறுகிறார். மேலும் கங்கையை காட்டிலும் பரிசுத்தத் தன்மை வாய்ந்த காவேரி என்றும் கூறுகிறார்.

**'கங்கையிற் புனிதம் ஆய காவேரி'30**

நாளெல்லாம் வளம் குறைந்து கோடையாயின் காலத்தும் காவேரி நீர் சுரந்து காக்கும் வளநாடு சோழநாடு என்பதை

**'கோடையாயினும் கோடி....**
**காவேரி புரக்கும் நன்னாட்டு பொருநை'31**

என்று நல்லிறையனார் சுட்டுகின்றார்.

### 5.1.3.4.2 வைகை

தமிழகத்திற்கு வளம் சேர்த்த ஆறுகளில் காவேரிக்கு அடுத்து வைகை நதி சங்க இலக்கியங்களில் பெரும்பாலும் பேசப்படுகிறது. இன்று வைகை நதிக்குப் பொருள் கூறுவோர் வை + கை வைகை என்பர். அதாவது வைகை ஆற்றின் நடுவே சென்று கை ஊன்றினால் அங்கு நதி நீரானது கை வைக்கும்

அளவிற்கு தான் ஓடும் என்பதால் இப்பெயர் பெற்றது என்பர். ஆனால் இந்த 2016ல் அந்த அளவு கூட வைகை நதியில் நீரின்றி வறண்டிருக்கிறது. ஆனால் சங்க காலத்தில் மதுரை மாநகரையும் அதன் சுற்றுப் பகுதியையும் வளம் கொழிக்க செய்தது வைகை ஆறுதான்.

**'செய்யாட்டு இழைத்த திலகம்போல் சீர்க்கொப்ப**
**வையம் விளங்கிப் புகழ்பூத்தல் அல்லது**
**பொய்யாதல் உண்டோ மதுரைபுனை தேரான்**
**வையை உண்டாக்கும் அளவு'32**

இப்பாடலானது வைகை ஆறு இருப்பதனால் திருமகளுக்கிட்ட திலகத்தைப் போல தன் சிறப்புக்கு ஏற்றபடியாக உலகத்தில் விளங்கிய புகழோடு பொலிவுறுதல் அல்லாமல் மதுரை நகரமானது தன் பெருமை கெட்டு அழிதல் என்பது கிடையாது என்று கூறுகிறது.

கார்காலம் தொடங்கவும் மலையிலே மழை பொழிகின்றது. அம்மழை நீரானது அழகுடன் தன்மையுடனும் வையையில் நிரம்பி வருகின்றது. அதனால் எங்கணும் புத்துணர்வு எழுகின்றது. மக்கள் மனக்கிளர்ச்சி கொள்கின்றனர். உழவர்கள் விரைந்து தம் தொழில்களை மேற்கொள்வராயினும் என்று

**'மேவிப் பரந்து விரைந்து வினைந்தத்**
**தாயிற்றே தண்ணம் புனல்'33**

**'வந்தன்று வையைப் புனல்'34**

**'.... தென்னவன்**
**ஒன்னாருடைபுலம் புகற்றால், மாறட்ட**
**தானையான் வையை வனப்பு'35**

சங்க காலத்தில் வைகை நதி ஒருமுறை பெருக்கெடுத்து கட்டற்று ஓடியிருக்கிறது. அத்தகை வெள்ளப் பெருக்கின் போது மக்கள் நிலையில் ஏற்பட்ட மாற்றங்களையும் சூழ்நிலைகளையும், ஒரு தெளிவான காணொளி காட்சியைப் போல பரிபாடல் ஒன்று நம் கண்முன்னே வைக்கின்றது.

குளங்களில் தண்ணிய கழுநீர் பூக்கள் இதழவிழ்ந்து வாய் மலர்ந்திருந்தன. மழைநீர் வந்து அக்குளங்களில் வீழ்ந்ததனால் நீர் மட்டம்

மலர்களுக்கு மேலாக உயர்ந்துவிட்டது, என்று ஒரு பகுதி மக்கள் பேசிக் கொண்டனாராம்.

அழகும் இளமையும் பொருந்திய கன்னிப் பெண்கள் மணலிடத்தே எழுதி இருந்த மணற்பாவைகளை புதுவெள்ளம் சிதைத்தது எனக்கூறி ஒரு பக்கத்திலிருந்து அழுது கொண்டிருந்தனராம்.

வயலகத்துள்ள இளமையான நெற்பயிர்களிலும் அரிகளைக் கட்டி அடுக்கி வைத்துள்ள நெற்போர்களிலும் மிகுதியான புனல் வந்து பரவிவிட்டது என துடிப்பறையினை அடித்து ஊரைக்கூட்டும் பறையொலி ஒரு பக்கத்தே எழுந்தது. வெள்ளம் ஊரைச் சுற்றி வளைத்துக் கொண்டது எனும் கூக்குரல் ஒரு பக்கமிருந்து எழுந்தது.

வானத்து மேகங்களின் துளைகள் சிதைவுற்றன. அதனால் பெரும் மழை வந்தது, எனும் பேச்சும் ஒரு பக்கத்திலிருந்து எழுந்தது. பாடுகின்ற பாணர்களது பாக்கத்தை வெள்ளம் மூழ்கடித்தது என்ற கூக்குரல் ஒரு பக்கமிருந்து எழுந்தது. ஆடுகின்ற ஆடர் கூத்தியரின் சேழியை வெள்ளம் அடைந்துவிட்டது என்ற பேச்சு ஒரு புறம் எழுந்தது.

வெள்ளம் வயல்களுக்குள் பாய்ந்து கால்களையும், வயல்களையும் ஒன்றாக சேர்த்துவிட்டது எனும் குரல் ஒரு பாலிருந்து எழுந்தது. வயலிடத்து உள்ள கமுகு தென்னை மரங்களின் பாலை அளவிற்கும் வெள்ளம் பெருகிற்றானபடியினாலே அப்பாலைகளை வாலைமீன்கள் உண்டுவிட்டன எனும் குரல் ஒருபுறமிருந்து எழுந்தது. வித்திடுவதற்குரிய நாற்றங்கால்கள் மேடாயிற்று என்ற பேச்சு ஒரு புறமிருந்து உண்டாயிற்று.

எத்துணையாயினும் ஊடற்சினம் தணியாதவரான ஒள்ளிய இழையணிந்த மாதர்களை கூடக் கருதும் ஆடவர்களது ஆசை பெருக்கினை போல வெள்ளம் கட்டுமீறி பெருகி விரைந்து வந்தது.

வயிற்றிடத்து வளர்ந்த நிலையிலிலிருக்கும் வாலை மீன்களைப் போல தம் சுற்றத்தோடும் கூடியவராக வயலுழவர் பலரும் பாய்ந்து வரும் புனலினை தடுக்க கருதியவராகக் கழனிகளில் பரந்து சென்று நின்றதை,

**‘கவிழ்ந்த புனலின் கயம் தண் கழுநீர்**
**அவிழ்ந்த மலர் மீதுற்றென, ஒருசார்**

**மாதர் மடநல்லார், மணலின் எழுதிய**
**பாவை சிதைத்தது என அழ, ஒரு சார்;**
**அகவயல் இளநெல் அரிகால் சூடு**
**தொகு புனல் பரந்தெனத் துடிபட, ஒருசார்,**
**ஓதம் சுற்றியது ஊர் என ஒருசார்**
**கார் தூம்பு அற்றது வான் என ஒருசார்;**
**பாடுவார் பாக்கம் கொண்டென**
**ஆடவார் சேரி அடைந்தென**
**கழனி வந்து கால் சோத்தென**
**பழன வாளை பாளை உண்டென,**
**வித்து இடு புலம் மேடு ஆயிற்றென**
**உணர்த்த உணரா ஒள்இழை மாதரைப்**
**புணர்த்திய இச்சத்துப் பெருக்கத்தின் துணைந்து**
**சினைவளர் வாளையின் கிடையொழு கெழீஇ,**
**பழன உழவர், பாய் புனல் பரத்தந்து[36]**

என்று வையை நதியில் வெள்ளம் ஏற்பட்டு தன்போக்கில் குறுக்கிட்டவான பல பொருள்களையும் கவர்ந்து சென்றதை இந்த பாடலால் அறிய முடிகின்றது.

### 5.1.3.5 ஆற்று நீர் மாசுபடுதல்

'நீர் வளம் பொருளாதார முன்னேற்றத்திற்கு இன்றியமையாதது ஆகும். இந்தியாவில் மொத்த நீர் வளத்தில் 70 சதவீதம் அசுத்தமாக உள்ளது. தண்ணீர் சம்பந்தப்பட்ட நோய்களின் காரணமாக சுமார் 7 கோடியே 80 லட்சம் வேலை நாட்கள் வீணாகின்றன என்கின்றனர்.

புனித நதிகளாக கருதப்படும் ஆறுகளை மாசுபடுத்துவதை பரவலாக ஊடகங்களின் வாயிலாகவும், நேரலையிலும் கண்டு மனம் வெதும்பி இருக்கின்றோம். ஆனால் இத்தகைய அறிவீனச் செயலானது நம் மரபு வழி வந்ததோ என்று எண்ணத் தோன்றுகிறது.

வைகை ஆற்றில் சங்க காலத்தில் நடந்த நிகழ்வைக் கூறும் பரிபாடல் வரிகள் இதனை சாட்சி கூறும் விதமாக உள்ளது.

என ஆங்கு

**'ஈர்ப்பாய் அடு நறாக் கொண்டது இவ் யாறு' எனப் பார்ப்பார் ஒழிந்தார், படிவு.**

**'மைந்தர் மகளிர் மண வரை தூவிற்று' என்று,**
**அந்தணர் தோயலர், ஆறு,**
**வையை தேம் மேவ வழுவழுப்பு உற்றென்**
**ஐயர், வாய் பூசுறார், ஆறு'37**

அதாவது நீர் விளையாட்டிற்கு களிப்போடு வந்த மக்கள் பலரும் மதுவை உண்டு களித்தனராம். எஞ்சிய மதுவை அவர்கள் ஆற்றின் நீரில் ஊற்றினராம். இவ்வாறு மது கலந்து வரும் நீரிலே வண்டினம் மொய்த்தது. அதனால் 'ஈக்கள் மொய்க்கும் அடப்பெற்ற நறவினை இவ்வாறு கொண்டுள்ளது' எனக் கூறியவராக அதன்பால் நீராட வந்த பார்ப்பார்கள் நீராடாதேயே தன் வீடு சென்றனர் என்றும் மைந்தரும், மகளிரும் நீரிலே மூழ்கித் திளைத்து விளையாடி இன்புற்ற போதும் அவர் உடலில் பூசி இருந்த மணச்சாந்தும் பொடி வகையும் நீரில் கலந்து பரவின. அதனைக் கண்ட அந்தணர்கள் அந்நீரில் தாமும் தோயராய் அகன்று போயினர்.

'தேன் மிகுதியாக கலந்து வருவதால் நீர் வழவழப்பு அடைந்தது' என்று கூறியவராக வாய் கழுவாதவராக அதனை நீக்கி சென்றனர் என்றது இப்பாடல்,

**'சாந்தும், கமழ்தாரும், கோதையும், சுண்ணமும்**
**கூந்தலும் பித்தையும் சோர்ந்தன**
**பூவினும், அல்லால், சிறிதானும் நீர் நிறம்**
**தான் தோன்றாது - இவ்வையை ஆறு**
**மழைநீர் அறு குளத்து வாய்பூசி ஆடும்**
**கழுநீர மஞ்சனக் குங்குமக் கலங்கல்**
**வழிநீர்: விழுநீர அன்று – வையை'38**

என்ற பாடல் பெண்களில் தலை மயிர்களும், சூரியப் பூக்களும், வண்ணமும், சுண்ணமும் கலந்து நீர் கலங்களாகி செல்லும் சிறிதளவினும் நீரின் இயல்பான நிறம் தோன்றாது. குளத்து நீரில் அனைத்து வேளைகளும் சென்றால் எப்படி அந்த நீர் கலங்கி இருக்குமோ, அதுபோலவே வையையில் வழிந்து செல்லும்

நீரும் கலங்கல் நீராக சென்றதேயன்றி தூய நீராக காணப்படவில்லை என்பதை எடுத்துக்காட்டுகின்றது.

இத்தகைய மாசுபடுதல் ஓரளவிற்கு வளத்தினால் ஏற்பட்ட நிகழ்வினை எடுத்துரைக்கும் முகமாக பாடப்பட்ட பாடலாக இருக்கலாம். ஆனால் தற்காலத்தில் நீர் நிலைகள் மிக மோசமாக தள்ளப்பட்டுள்ளது. நாளுக்கு நாள் தண்ணீர் பஞ்சம் அதிகரித்துக் கொண்டே போவதற்கு சரியான பருவத்தில் பெய்யாத மழையென நாம் நம்பிக்கொண்டிருக்கிறோம். அது மட்டும் தண்ணீர் பஞ்சத்திற்கு காரணமாக தெரியவில்லை. கழிவுநீரை புனித நதிகளிலும், கால்வாய்களிலும் கலக்கப்படுவதும் ஒரு காரணமாகும்.

தமிழ்நாட்டில் சென்னையில் கூவம் முதல் திருச்சியில் உய்யக்கொண்டான் கால்வாய் வரை அனைத்துக் கால்வாய்களிலும் ஒரு காலத்தில் நல்லத் தண்ணீர் ஓடியதை வரலாற்றுச் சான்றுகள் உணர்த்துகிறது. ஆனால் தற்போது அவை சாக்கடைகள் சங்கமிக்கும் இடங்களாக மாறிவருவது ஒரு காரணமாகும்.

ஏரிகள், குளங்கள் வீட்டுமனைகளாக்கப்பட்டதாலும் நீர் வளம் குன்றியும், உல்லாச கேளிக்கைகளுக்காகவும் தண்ணீர் விளையாட்டு மையங்கள், செயற்கை பனிச்சறுக்கு மையங்கள், தண்ணீர் பூங்காக்களாலும் குடிநீர் அழிகிறது. கழிவுநீராக மாசுபடுகிறது. **'பெருகிவரும் வாகன புகையினாலும் குளிர்பதனப் பெட்டிகளிலிருந்து குளொரோ.ஃப்ளோரோ கார்பன் போன்ற வாயுக்களால் ஓசோன் மண்டலத்தில் ஓட்டைவிழுந்து அதன் விளைவாக புவி சூடேறுதல் ஏற்பட்டு பருவமழை பொய்ப்பதுடன் வடதுருவ, தென்துருவ பனிக்கட்டிகள் கரைந்து கடல்மட்டம் உயர்ந்து இதன் விளைவாக நன்னீர் இருப்பின் அளவும் குறைந்து கொண்டு வருகிறது'**39 என புவியியலாளர்கள் கருதுகிறார்கள்.

### 5.1.3.6 மழை வளம்

கடந்த 18ம் நூற்றாண்டு இறுதி வரையில் தமிழகத்தில் மாதம் மும்மாரி மழை பொழிந்து தன் கடமையைத் தவறாது ஆற்றியிருக்கிறது. குறிப்பாக தமிழக குறிஞ்சி நிலங்கள் மிக்க செழிப்பும் வனப்புமாக இருந்ததை குற்றால குறவஞ்சி வெளிப்படுத்துகிறது.

**'மாதம் மூன்றும் மழை உள்ள நாடு**
**வருடம் மூன்று விளை உள்ள நாடு**

**வேதம் மூன்று பலா உள்ள நாடு**

**விசேஷம் மூன்றும் குலா உள்ள நாடு**

**போகம் மூன்றும் நலம் செய்யும் நாடு**

**புவனம் மூன்றும் வலஞ்செய்யும் நாடு'40**

அதாவது மாதம் மும்மாரி பொழிந்து மூன்று போகம் விளைந்து, மூன்று வேதங்களே வேர், மரம், பயன் என மூன்றாக அமைந்து நித்தியும், நைமித்தியம், காமியம் ஆகிய மூவகைச் சிறப்புகளும் தவறாமல் நிகழ்ந்து பிறப்பு, வாழ்வு, இறப்பு எனும் மூன்று நிலைகளிலும் நன்மை விளைவித்து மூன்று புவனங்களாகிய மேல்நாடு, நடுநாடு, கீழ்நாடு என அனைத்து மக்களையும் வளம்செய்து போற்றும் நாடாக இருந்திருக்கிறது என்பதை குற்றால குறவஞ்சி வெளிப்படுத்துகின்றது.

அனைத்து தொழிலுக்கும் முதன்மைக் காரணம் மழையே என்பதை

**'இருங் கண் ஞாலத்து ஈண்டு தொழில் உதவிப்**

**பெரும் பெயல் பொழிந்த வழி நாள் அமையத்து'41**

என்ற இளவேட்டனார் பாடல் வரிகள் உணர்த்துகிறது. இதையே வள்ளுவரும்

**'ஏரி னுழா அருழவர் புயலென்னும்**

**வாரி வளங்குன்றிக் கால்'42**

என்று கூறுகின்றார்.

அக்காலத்திலும் பருவமழையானது பலமுறை பொய்த்து போய் பருவம் தவறி பெய்து இருக்கிறது.

**'மறந்து கடல் முகந்த கமஞ் சூல் மமழை**

**பொறுத்தல் செல்லாது இறுத்த வண் பெயல்'43**

என்று இளந்திரையனார் 'அறிவில்லாது பருவகாலத்தை மறந்து கடநீரையுண்டதனாலாகிய நிறைந்த சூலையுடைய கரிய மேகம் தான் தாங்க மாட்டாமே பெய்த்தொழித்த வளவிய மழை' என்கிறார்.

மழையற்ற போது பெய்ய வேண்டியும், பெருமழை பெய்ய அதனை நிறுத்த வேண்டியும் தெய்வத்தைப் போற்றி துதித்தனர் குறமக்கள் எனும் செய்தி கபிலர் பாடலால் தெரிய வருகிறது.

**'மலைவான் கொள்என உயர்பலி தூஉய்**

**மாரி ஆன்று மழைமேக்கு உயர்க எனக்**

**கடவுள் பேணிய குறவர் மாக்கள்'44**

## 5.2 மனித வளமும் பொருளாதார நிறைவும்

மனித வளம் என்பது அவனது சிந்தனையைக் கொண்டு வளம் பெறுவது அதிலும் அறிவியல், பொறியியல், தொழில்நுட்பம், முதலீடு என அனைத்து செயல்மூலம் பொருளாதாரத்தை பூர்த்தி செய்து கொள்வது எனலாம். மனிதனின் உள்ளார்ந்த பண்புகள் அவனது உழைப்பு அறிவு, உற்பத்தி, வேலைத்திறன் முதலியவற்றின் துணைக்கொண்டு சங்ககால மக்களும், அரசர்களும் பெருஞ்செல்வத்தை அடைந்திருந்தனர்.

மேலும் போரினாலும், திரைப்பணத்தினாலும், வரி வகையினாலும், அரசாங்கம் பொருளாதார நிறைவை எட்டி இருந்தது.

**'பொருளுடையான் கண்ணத்தே போகம்'45**

என்று காரியாசான் பொருளுடையவர்கள் இன்பம், பெருகும் என்றுரைக்கிறார்.

**'முன்பொருள் செய்யாதார் - ஆதரே'46**

என்று முதுமை பருவம் வருவதற்கு முன்பே பொருள் தேடி வைத்துக் கொள்ளாதவரை அறிவில்லாதார் என்று சிறுபஞ்சமூலம் கூறுகின்றது.

உணவுத் தேடும் வாழ்க்கை முறையிலிருந்து மாறிய மனிதன் பொருள் உற்பத்தியிலும், உணவு உற்பத்தியிலும் கவனம் செலுத்தி தான் சார்ந்த நில அமைப்புக்கேற்றவாறு வருமானம் பெற வழிவகை செய்து கொண்டார்.

மலைகளில் விளைந்த ஐவன நெல்லும், திணையும், அரிசியும், மலைத்தேனும், வள்ளிக்கிழங்கும், பலாப்பழங்களும், குறிஞ்சி நில மக்களுக்கு வியாபாரப் பொருளாயின. மேலும் யானைகளையும், காட்டுப் பன்றிகளையும், புலி முதலியவற்றையும் வேட்டையாடி, அதனுடைய தோல், தந்தம் முதலியவற்றை

தமக்குரிய நிதி ஆதாரமாக மாற்றிக் கொண்டனர். சந்தனம், அகில் ஆகியவற்றை விற்றும் தம் வாழ்விற்கான நிதியைச் சேகரித்தனர்.

முல்லை நில மக்கள் மலையடிவாரத்தில் வரகு, கேழ்வரகு, துவரை, அவரை போன்ற பயிர்களை விளைவித்தும், பால், தயிர், வெண்ணெய் போன்றவற்றை கொடுத்தும் வருமானத்தைப் பெற்றனர்.

நீர் வளமும், நிலவளமும் கொண்ட மருத நில மக்கள் எருதுகளையும், எருமைகளையும், பயன்படுத்தி நெல்லை பயிரிட்டும் கரும்பு, மற்றும் காய்கறிகளையும் பயிர்செய்து அவற்றை விற்று வருமானம் பெற்றனர்.

நெய்தல் நில மக்கள் கடல் சார்ந்த தொழிலில் ஈடுபட்டு தம்முடைய நிதி ஆதாரத்தை பெருக்கிக் கொண்டனர். அவர்கள் பிடித்து வந்த மீன், முத்து, சங்குகளைப் பண்டமாற்று செய்தும் தானியங்களையும் பெற்றும், விற்றும் பயன்பெற்றனர். உப்புத் தொழிலாலும் பெரும் நிதியை ஆதாரமாகக் கொண்டனர்.

### 5.3 அரசர்களின் வள்ளல் தன்மை

கல்வி கற்றல், கற்றோரை ஆதரித்தல், குடிகளைப் பாதுகாத்தல், தீயவரை அழித்தல், வேள்வி செய்தல் என்பன மன்னனின் கடமைகள் என தொல்காப்பியம் பகர்கின்றது.

மன்னன் வேள்விகளைச் செய்யும் பொழுதும் தன் பிறந்தநாள் விழாவிலும், பிற சிறப்பு நாட்களிலும் தானங்களைச் செய்வது வழக்கம். நாட்டு நலத்திற்கும் குடிகள் நலத்திற்கும் இவ்வாறு தானம் செய்தல் மன்னனது கடமை என நம்பப்பட்டது.

அரசனானாலும், ஆண்டியானாலும் அவரவர்க்குத் தேவைப்படுவது உண்ணப்படும் பொருள் நாழித் தானியமே. உடுக்கப்படுபவை அரை ஆடை, மேலாடை என இரண்டே. இவை மற்ற உடல் உள்ளத் தேவைகளும் ஒன்றாகவே விளங்கும். அதனால் ஒருவன் பெற்றிருக்கும் செல்வமானது அடுத்தவர்க்கு கொடுப்பது தான் என்று நக்கீரர் கூறுகிறார்.

**‘தெண்கடல் வளாகம் பொதுமை இன்றி**
**வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்**
**நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்**

**கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்**

**உண்பது நாழி உடுப்பவை இரண்டே!**

**பிறவும் எல்லாம் ஓர்ஒக் கும்மே**

**செல்வத்துப் பயனே ஈதல்**

**துய்ப்பேம் எனினே தப்புந பலவே'47**

பெரும்போரில் இரு மன்னர் படைக்கும் பெருஞ்சோறு இல்லை என்னாது சேரன் கொடுத்ததை

**'ஈரைம் பதின்மரும் பொருது களத்து ஒழியப்**

**பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்'48**

எனவும் மனக்குறிப்பை முகத்திலேயே கண்டுணர்ந்து அவர்கள் வறுமையை அரசன் போக்கியதை

**'….இரவலர் வருவர் அது**

**முன்னம் முகத்தின் உணர்ந்து, அவர்'49**

என்று புறநானூறு வரிகள் கூறுகிறது.

போரின் போது வன்மையற்றவர்களாகிய ஆணினம், பார்ப்பனமாக்கள், பெண்டிர், பிணியுடையவர், புதல்வர் பெறாதோர் முதலியவர்களை பாதுகாப்பான இடத்திற்கு அனுப்பி வைத்த மன்னனின் குணநலத்தை

**'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**

**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**

**தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**

**பொன்போல் புதல்வர் பெறாஅ தீரும்'50**

என்ற பாடல் பறைசாற்றுகிறது.

**'அமிழ்துஅட்டு ஆனாக் கமழ்குய் அடிசில்**

**வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை**

**மகளிர்….'51**

அமுதத்தையும் தன் சுவையால் வெல்லுவதும் உண்ண உண்ணத் தெவிட்டாத மணங்கமழும் தாளிதத்தை உடையதுமான உணவை

வருபவர்களுக்கு எல்லையின்றி மன்னரின் மனைவி வழங்கியதைத் தெரிவிக்கின்றது இப்பாடல்,

மன்னனிடம் சென்று உணவில்லை என அருங்கலம் நீட்டினால் அதில் அவன் சோறு போடுவது இல்லையாம். அதற்கு பதில் அவன் தலைநகரான கருவூரையே அதற்கு ஈடாக தருபவனாம். ஒண்ணுதல் விறலியர் அவனை மகிழ்வித்து 'பூவிலை பெறதி' என வேண்டினால் அதற்கு அவன் மாடமதுரையை மனமகிழ்ந்து தந்திடுவானாம் அம்மன்னன், என்பதை

**'கடும்பின் அடுகலம் நிறையாக நெடுங்கொடிப்**
**பூவா வஞ்சியுந் தருகுவன் ஒன்றோ**
**வண்ணம் நீவிய வணங்குஇறைப் பணைத்தோள்**
**ஓண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகஎன**
**மாடமதுரையும் தருகுவன்; எல்லாம்'52**

என்ற கோவூர்க் கிழார் பாடல் சிந்திக்கத்தக்கதாக உள்ளது.

அரிசியைத் தானமாக கேட்டதற்கு யானையை பரிசாக அளித்த புரவலர்களும் இருந்திருக்கின்றனர். இதனை

**'….. சில**
**அரிசி வேண்டினெம் ஆகத் தான்பிற**
**வரிசை அறிதலின் தன்னும் தூக்கி**
**இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்**
**பெருங்களிறு நல்கி யோனே'53**

என்று நாஞ்சில் வள்ளுவனின் கொடை உள்ளத்தை ஔவையார் பாடியதிலிருந்து தெரிய வருகின்றது.

**'பாணர் உவப்பக் களிறுபல தரீஇக்**
**கலந்தோ ருவப்ப வெயிற்பல கடைஇ**
**மறங்கலங்கத தலைச்சென்று**
**வாழளந்ததன் தாள் வாழ்த்தி**
**நாளீண்டிய நல்லகவர்க்குத்**
**தேரொடு மாசிதறிச்'54**

என்ற மதுரைக்காஞ்சி பாடல் பாணர்களுக்கு யானைகள் பலவற்றையும் நட்பு கொண்டவர்கள் மகிழ்ச்சியடையுமாறு பகைவர்களின் நாட்டில் கவர்ந்த பல பொருள்களையும் அவர்களுக்கு கொடுத்ததையும் அதிகாலையில் புகழ்ந்துப் பாடவந்த பொருநர்களுக்குக் குதிரையும், தேரும் மன்னர்கள் வழங்கியதை இப்பாடல் குறிப்பிடுகின்றது.

### 5.3.1 கரிகால் வளவனின் வள்ளல் தன்மை

சோழன் கரிகாற்பெருவளத்தான் என்ற பெரும்புகழ் பெற்றவன் இவன் உருவப்ப.ஃ.றேன் இளஞ்சேட்சென்னியின் மகன். பொருநராற்றுப்படைக்கும், பட்டினப் பாலைக்கும் பாட்டுடைத் தலைவன். இரும்பிடர்த் தலையாரை அம்மானாகப் பெற்று அவரால் சிறுவயதிலேயே பெணி வளர்க்கப் பெற்றவன். சேரமான் பெருஞ்சேரலாதனோடு போரிட்டு வென்றவன். இவனைப் பாடியோர் கருங்குழலாதனார், வெண்ணியக்குயத்தியார், கடியலூர் உருத்திரங்கண்ணனார் ஆகியோர் **'பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார், சூடா வாகைப் பறத்தலை ஆடுபெற ஒன்பது குடையும் நண்பகல் ஒழித்த பீடில் மன்னர்'55** என, இவனோடு போரிட்டுத் தோற்ற ஒன்பது மன்னர்களையும் பரணர் பாடியுள்ளார்.

**'நெடுங்கால் மாஅத்துக் குறும்பறை பயிற்றும்**
**செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்'56**

என நக்கீரரும் இவரைப் போற்றுகின்றனர். வெண்ணிவாயில் என்னுமிடத்தில் 11 வேளியரோடு இரு பெரும் வேந்தரும் தோற்று அழிய இவன் வென்ற சிறப்பை அகநானூறு குறிப்பிடுகின்றது. காவேரிக்கு கரைகட்டியவன் என்ற பெரும்புகழும் இவனுக்கு உண்டு. இமயம் வரை தன் புகழை நிலைபெறச் செய்தவன் சோழன் கரிகால வளவன். இவனுக்கு கரிகால் பெருவளத்தான் எனப் பல பெயர்கள் உண்டு.

கரிகாலன் தன்னை நாடி பரிசு பெற்று செல்ல இரவலர்கள் வர வேண்டும் என்று விரும்பி இருப்பவன் என்பதை

**'நீற்றா விடுப்பிற் போற்றுடி நோக்கினும்'57**

என்ற பாடல் வரி எடுத்துரைக்கின்றது.

வந்த இரவலர்களுக்கு அவர்களின் வறுமைக் கோலத்தை முதலில் களையும் விதமாக அழுக்கடைந்த ஆடைகளை நீக்கச் சொல்லி புத்தாடை கொடுத்து பிறகு வயிறாற உணவும் படைத்தான் என்பதை

**'ஈரும் பேனும் இருந்திறை கூடி**
**வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த**
**துணைற் சிதாஅர் துவர நீக்கி**
**நோக்குநுழை கல்லா நுண்மைய பூக்கனிந்து**
**அரவுரி யன்ன அறுவை நல்கி58**

என்ற பாடலும் அவன் உடல் சோர்வுடன் வரும் பொருநர்களுக்கு முதலில் பொற்கலத்தில் மது அளித்து அவர்களின் வழிநடந்த களைப்பைப் போக்குவான் என்பதை

**'மழையென மருளு மகிழ்செய் மாடத்து**
**இழையணி வனப்பி வின்னகை மகளிர்**
**போக்கில் பொலங்கல நியைப் பல்கால்**
**வாக்குபு தரத்தர வரத்தம் வீட**
**ஆர வுண்டு பேரஞர் போக்கிச்**
**செருக்கொடு நின்ற காலை'59**

என்ற பாடல் தெரிவிக்கின்றது.

**'மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி**
**விசிபிணி முழவின் வேந்தர் சூடிய**
**பசுமணி பொருத பரேரெறுழ்க் கழற்கால்'60**

என கரிகாலன் பகை மன்னர்கள் தங்கள் மணிமுடியில் அணிந்திருக்கும் வைரக் கற்களை விட உயர்ந்த வைரக்கல்லை தன் கால் வீரக் கழலில் அணிந்திருந் ததைக் குறிப்பிடுகிறது.

தம்மிடமிருந்து பரிசுப்பொருள் பெறவந்த கலைஞர்களுக்குத் தேவையான உணவு, உடையுடன் போதிய அளவு பரிசுப்பொருள்களையும் கொடுத்த தோடில்லாமல் பொருநர் கூட்டத்தினை மன்னனும் உடனிருந்து வழியனுப்பும் பண்பினை கரிகாலன் பெற்றிருந்ததை

**‘துராஅய் துற்றிய துரவையம் புழக்கின்**
**பராஅரை வேவை பருகெனத் தண்டிக்**
**காழிற் சுட்ட கோழுன் கொழுங்குறை**
**ஊழின் ஊழின் வாய்வெய் தொற்றி**
**அவையவை முனிகுவ மெனினே சுவைய**
**வேறுபல் லுரவின் விரகுதந் திரீஇ**61

என்று பொருநராற்றுப்படை குறிப்பிடுகின்றது.

## 5.3.2. தொண்டைமான் இளந்திரையனின் வள்ளல் தன்மை

பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுத் தலைவன் தொண்டைமான் இளந்திரையன். இவன் **‘தொண்டை நாட்டை ஆண்டவன். இவன் பெயரை இளந்திரையன், திரையன் என்றும் வழங்குவர். திரை என்பதற்கு கடல் என்று பெயர். திரையன் என்பது காரணப் பெயர். திரை வழியாக வந்தவன். இந்த இளந்திரையன், புலவர்களை புரக்கும் வள்ளலாக வாழ்ந்தான். சிறந்த செந்தமிழ் புலவனாகவும் விளங்கினான். நற்றிணையில் இவனால் பாடப்பட்ட மூன்று பாடல்களும் உண்டு. புறநானூற்றில் ஒரு பாடல் இளந்திரையும் என்ற நூல் ஒன்றையும் அவன் இயற்றியதாக தெரிகிறது’**62 என்று சாமி சிதம்பரனார் கூறுகின்றார்.

**‘பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான்**
**கொடுவரிக் குரளை கொளவேட் டாங்குப்**
**புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்**
**கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும்**
**வென்றி யல்லது வினையுடம் படினும்**
**ஒன்றல் செல்லா உரவுவாள் தடக்கைக்**
**கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக’**63

என்ற பாடலானது புலவர் முதலியோர்க்கு அணிகலன் முதலானவைக் கொடுத்து கொடை நிகழ்த்தியப் பின் பகை மன்னர்களின் மதில்களை அழித்து மேலும் மேலும் போரில் பெரும் வெற்றியை விரும்புவது அல்லாமல் பகை மன்னர்கள் நட்பு பாராட்ட எண்ணி வந்தபோது அதற்கு மனம் விட்டுக்கொடுக்காத வலிமையான வாள் ஏந்தியிருக்கின்ற கையினையும் பகைநிலத்தில் கொள்ளைக்

கொண்ட உணவினையும் கொண்டிருக்கும் தொண்டையர்கள் குலத்தில் தோன்றியவனே என்றும்

**'மல்லர் மல்ல மறவர் மறவ**
**செல்வர் செல்வ'64**

எனவும் புகழ்ந்து கூறுகின்றது.

**'குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்**
**பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு**
**முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்**
**வேண்டுப வேண்டுப வேண்டுநர்க் கருளி**
**இடைதெரிந் துணரும் இருடிர் காட்சிக்**
**கொடைக்கட விறுத்த கூம்பா வுள்ளத்து**
**உரும்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகிப்'65**

என்ற பாடலானது கிழக்கு கடலில் நீரின் நடுவில் சூரியன் ஒளிபரப்ப தோன்றியதை போன்று தம்மிடம் வந்தவர்களுக்கும், முறை வேண்டி வந்தவர்களுக்கும் யார் யார் என்ன வேண்டினார்களோ அவரவர்களுக்கு அப்பொருளைக் கொடுத்து பிறர் கூறும் முன்பு அவர்கள் கூற வருவதை குறிப்பால் உணர்ந்து மயக்கமற்ற அறிவினை உடையவனாய் கொடுப்பதை செம்மையாக செய்யும் உள்ளம் உடையவனாய் தீமையான எதையும் கூறாத ஆலோசகர்களை உடையவனாய் விளங்குபவன் தொண்டைமான் இளந்திரையன் என்று குறிப்பிடுகின்றது.

இவன் மக்கள் எவ்வித அச்சங்களையும் அடையாத வண்ணம் அவர்களைப் பாதுகாக்கும் மாண்பினன் என்பதை

**'மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து**
**ஆனா விருப்பிற் நானின் றூட்டி'66 எனவும்**

**'பாசி யன்ன சிதர்வை நீக்கி**
**ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம்'67**

என்ற வரி திரையன் வழிநடை பயணத்துடன் அழுக்கேறி ஆடையுடன் வரும் பாணனின் ஆடையை நீக்கி புத்தாடைத் தந்ததைக் குறிப்பிடுகின்றது.

பாணர்களுக்கு இளந்திரையன் தன் முன்பாகவே உணவு பரிமாறிய பண்பு போற்றுதலுக்குரியது. இதனை

**'வல்லோன் அட்ட பல்லூண் கொழுங்குறை**
**அரிசெத் துணங்கிய பெருஞ்செந் நெல்லின்**
**தெரிகொ ளரிசித் திரணெடும் புழுக்கல்**
**அருங்கடித் தீஞ்சுவை யமுதொடு பிறவும்'68**

என்ற பாடலிலிருந்து அறிய முடிகிறது.

காலந்தாழ்த்தாமல் பரிசுகளை வறியவர்களுக்கு வழங்கும் வழக்கம் இளந்திரையனிடம் இருந்ததை

**'விசும்புசெல் இவுளியொடு பசும்படை தரீஇ**
**அன்றே விடுக்குமவன் பரிசில்'69**

என்ற வரிகள் உணர்த்துகிறது.

மேலும் பாணர்களுக்கு பொன்மாலையும், தேர்க்குதிரை மற்றும் பிற பரிசுகளையும் அவர்கள் வாழ்நாள் முழுமைக்கும் அளித்தான் என்பதை

**'ஆடுவண் டிமிரா அழலவிர் தாமரை**
**நீடிரும் பித்தை பொலியச் சூட்டி**
**உரவுக்கடல் முகந்த பருவ வானத்துப்**
**பகற்பெயற் றுளியின் மின்னுநிமிர்ந் தாங்குப்**
**புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின்**
**தொடையமை மாலை விறலியர் மலைய**
**நூலோர் புகழ்ந்த மாட்சிய மால்கடல்**
**வளைகண் டன்ன வாலுளைப் புரவி**
**துணைபுணர் தொழில் நால்குடன் பூட்டி**
**அரித்தேர் நல்கியும் அமையான்'70**

என்ற பாடல் பட்டியலிடுகிறது.

### 5.3.3. நெடுஞ்செழியனின் வள்ளல் தன்மை

**‘முழவுத்தோள் முரட்பொருநர்க்கு**
**உருகெழு பெருஞ்சிறப்பின்**
**இருபெயர்ப் பேராயமொடு**
**இலங்கு மருப்பிற் களிறு கொடுத்தும்**
**பொலந்தாமரைப் பூச்சூட்டியும்**
**நலஞ்சான்ற கலஞ்சிதறும்**
**பல்குட்டுவர் வெல்கோவே’71**

என்ற மதுரைக் காஞ்சி பாடலானது மத்தளம் போன்ற தோள்களை உடைய தடாரி என்னும் இசைக்கருவியை இசைக்கும் பொருநர்களுக்கு அச்சம்தரும் தோற்றம் உடைய பெரிய தலையினை உடைய பெண் யானையினையும் அதன் கன்றினையும் பெரிய தந்தங்கள் உடைய ஆண் யானையினையும் கொடுத்து அவர்களின் தலையில் பொன்தாமரை அணிவித்துப் பல்வகை அணி கலன்களையும் வழங்கும் தன்மையனாகியவனும் குட்ட நாட்டு மன்னனை வெற்றி கொண்டவனாகிய நெடுஞ்செழியனின் வள்ளல் தன்மையை வெளிப்படுத்துகிறது.

### 5.3.4 பெருஞ்சேரலாதனின் வள்ளல் தன்மை

தமிழகம் தன்னாட்சி பெற்று வளர்ந்த காலத்தில் தமிழ் மொழியானது தன்னிகரற்று தலைசிறந்து விளங்கியது. அறிவை அழிக்கும் வறுமையை அடைந்த புலவர்களை தமிழாய்ந்த அரசர்கள் பலர் ஆதரித்ததை சங்கப்பாடலால் அறியலாம்.

தமிழகத்தில் தன்னிகரில்லா ஆட்சி புரிந்த பெருஞ்சேரல் என்னும் அரசனின் அரண்மனையை நாடி வந்த மோசிக்கீரனார் என்ற தமிழ் புலவர் வந்த களைப்பு அதிகமாகவே அங்கிருந்த அழகிய மஞ்சத்தில் அசந்து துயில் கொண்டுவிட்டார். சிறிது நேரத்தில் அரண்மனைக்கு வந்த பெருஞ்சேரலாதன் தம் மஞ்சத்தில் வறுமைக் கோலத்துடன் முதியவர் ஒருவர் அயர்ந்து உறங்குவதைக் கண்ணுற்று அருகிலிருந்து கவரியை எடுத்து அவருக்கு வீசிப் பணிச் செய்தான். சிறிது நேரத்தில் உறக்கம் நீங்கி விழித்த கீரனார், தனக்கு அரசனே கவரி வீசுவதைக் கண்டு உள்ளம் பதைபதைக்க எழுந்தார். ஆனால் கீரனிடம் இனிய மொழி பேசி அவரின் நடுக்கத்தினை போக்கி அவர் பல்லாண்டு பசிப்பிணி

இல்லாமல் வாழ வேண்டிய அளவு பரிசு தந்து அனுப்பிய செயல் பெருஞ் சேரலாதனின் மாண்பையும், வள்ளல் தன்மையையும், மனச் செம்மையையும் உணர்த்துகிறது.

### 5.3.5 நல்லியக் கோடானின் வள்ளல் தன்மை

நல்லியக் கோடான் பெயருக்கேற்றாற் போல் நல்ல இயல்பினை பெற்று இருந்தவன். தன்னைச் சுற்றி இருப்போரின் நலம் பேணும் மன்னனாக இருந்தான். குரவோர், அறவோர், துறவோர், முதியோர், சான்றோர் ஆகியவர்களுக்கு ஓய்வின்றிக் கொடுக்கும் வள்ளமை உடையவன் என்றும், தம்மைப் பார்த்து பரிசு பெற வரும் பாணர்கள், தம்மைப் புகழ்ந்து கூறுவதற்கு முன்பாகவே அவர்களுக்கு உரிய பரிசினை தரும் குணம் உள்ளவன்.

அவன் கோட்டையின் கதவுகள் வறியவர்களுக்காக அடைக்கப்படாமல் திறந்து இருந்ததை

**'பொருநர்க் காயினும் புலவர்க் காயினும்**
**அருமறை நாவின் அந்தணர்க் காயினும்**
**கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன**
**அடையா வாயிலவன் அருங்கடை குறுகி'72**

என்ற பாடல் உணர்த்துகிறது.

**'இன்முகம் உடைமையும் இனியன் ஆதலும்**
**செறிந்து விளங்கும் சிறப்பின் அறிந்தோர் ஏத்த்'73**

என்ற வரிகள் இவன் பண்பினை பறைசாற்றும்.

குறுநில மன்னராகிய நல்லியக்கோடான் பகைவர்களை வென்று அங்கு கிடைத்த பொருள்களை கொண்டு வந்து தம்மை நாடி வந்தவர்களுக்கு வழங்கினான், என்பதனை

**'திறல்சால் வென்றியொடு தெவ்வுப்புலம் அகற்றி**
**விறல்வேல் மன்னர் மன்னெயில் முருக்கி**
**நயவர் பாணர் புன்கண் தீர்த்தபின்'74**

என்ச சுட்டுகிறது.

**‘செய்ந்நன்றி அறிதலும் சிற்றினம் இன்மையும்**
**இன்முகம் உடைமையும் இனியன் ஆதலும்**
**செறிந்து விளங்கு சிறப்பின் அறிந்தோர் ஏத்த**
**அஞ்சினர்க் களித்தலும் வெஞ்சினம் இன்மையும்**
**ஆனணி புகதலும் அழிபடை தாங்கலும்**
**வாண்மீக் கூற்றத்து வயவர் ஏத்தக்**
**கருதியது முடித்தலுங் காமுறப் படுதலும்**
**ஒருவழிப் படாமையும் ஓடிய துணர்தலும்**
**அரியேர் உண்கண் அரிவையர் ஏத்த**
**அறிவுமடம் படுதலும் அறிவுநன் குடைமையும்**
**வரிசை அறிதலும் வரையாது கொடுத்தலும்**
**பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்த்’75**

என நல்லியக்கோடனின் இயல்பினைக் கூறுவதோடு மட்டுமின்றி பரிசு வேண்டி வந்தவர்களின் சிறப்புக்கேற்றவாறு பரிசு வழங்கியதையும், தகுதியில்லாதவர் களுக்குப் பரிசு வழங்கி சிறப்பித்ததையும் எடுத்துரைக்கிறது.

வள்ளல்கள் ஏழு பேரும் செய்த கொடையறிய பாரத்தை உலகெங்கும் தெரியும்படி தான் ஒருவனாக மேற்கொண்டு தாங்கிய மனவலிமையும், முயற்சியும் உடையவர் நல்லியக்கோடான்.

### 5.3.6 நன்னனின் வள்ளல் தன்மை

நன்னன் என்ற பெயருடையார் மூவர் என்பர் ஆய்வாளர்கள். அவர்கள், கடம்பின் பெருவாயில் நன்னன், பல் குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்துவேள் நன்னன், நன்னன் உதியன் என்றும் சேரர் படைத்தலைவன் ஆகியோராவர். அவருள் பல்குன்றக் கோட்டத்து நன்னனாவன். ஞிமிலியோடு பகைக்கொண்டு அவன் படையொடும் வரத் துணைக்கு வந்த ஆய் எயினனைத் தனியே அழியவிட்டு ஒளிந்திருந்தவன் இவனே. பெண் கொலை புரிந்த நன்னன் என்ற பழிக்கும் உரியவன். வேளிர் குலத்தவன். பாழி, பாரம், பிரம்பு என்ற மலைகளுக்கு உரியவன் என வரலாறு கூறுகிறது.

நன்னன் தலைச்சிறந்த வீரன், தம்மை நாடி வரும் புலவர்களுக்கு பொருளுதவி செய்தும், இகழ்வோரை போரிலே வென்றும் அடிமையாக்கும்

தன்மையன். அவன் அவையில் கல்வி, கேள்வியில் சிறந்த சான்றோர் பலர் இருந்ததை,

**(நன்னன் தொண்டைநாட்டுப் பல்குன்றல் கோட்டத்து செந்தன்மா என்னும் ஊரின் தலைவனாக வேள்நன்னன் என்பானின் மகனாவான். அக்கால மரபுபடி தன் தந்தையின் பெயரே அவனுக்கும் அமைந்தது.)76** என வாழ்வியல் களஞ்சியம் கூறுகிறது.

**'தொலையா நல்லிசை உலகமொடு நிற்பப்**
**பலர்புறங் கண்டவர் அருங்கலந் தரீஇப்**
**புலவோர்க்குச் சுரக்கும் அவ னீகை மாரியும்**
**இகழுநர்ப் பிணிக்கும் ஆற்றலும் புகழுநர்க்கு**
**அரசுமுழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு**
**தாத்துளி பொழிந்த பொய்யா வானின்**
**வீயாது சுரக்குமவ னாண்மகி ழிருக்கையும்'77**

என்று நன்னனுடைய சிறப்பையும்

**'பரந்திடங் கொடுக்கும் விசும்புநொய் உள்ளமொடு**
**நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி**
**துவந்து உள்ளம்.'78**

என்று அவனின் உயர்ந்த சிந்தனையைக் குறிப்பிடுகின்றது.

**'நீரியக் கன்ன நிரைசெலல் நெடுந்தேர்**
**வாரிக்கொள்ளா வரைமருள் வேழம்**
**கறங்குமணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை**
**பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி**
**நிலந்தினக் கிடந்த நிதியம்'79**

**'கழைவளர் நவிரத்து மீமிசை ஞேரேரென**
**மழைசுரந் தன்ன ஈகை நல்கித்80**

**'தலைநாள் அன்ன பகலொடு வழிசிறந்தது**
**பலநாள் நிற்பினும் பெறுகுவிர்'81**

**‘உலைந்த ஒக்கல், பாடுநர் செலினே,**
**உரனமலி உள்ளமொடு முனைபா ழாக**
**அருங்குறம்பு எறிந்த பெருங்கல வெறுக்கை**
**சூழாது சுரக்கும் நன்னன்’82**

எனும் வரிகள் நன்னனின் குணத்தையும் அவன் வளத்தையும் கூறுவதோடன்றி கூத்தர்களுக்குப் பெரும்பொருட்களும். நெடிய தேர்களும், மலைப்போன்ற யானைகளையும், பசுங்கூட்டங்களையும் பரிசாக தந்த அவனுடைய கொடைத் திறத்தையும் பறை சாற்றுகின்றது.

## 5.4 கடைஏழு வள்ளல்களின் வள்ளன்மை

முதல் ஏழு வள்ளல்கள், இடை ஏழு வள்ளல்கள், கடை ஏழு வள்ளல்கள் என மொத்தம் 21 பெயர்களை அபிதான சிந்தாமணி சுட்டிக் காட்டுகிறது.

**முதல் ஏழு வள்ளல்கள்**

1. குமணன்
2. சகரன்
3. சகாரன்
4. செம்பியன்
5. துந்துமாரி
6. நளன்
7. நிருவி

**இடையேழு வள்ளல்கள்**

1. அக்குரூரன்
2. அந்திமான்
3. அரிச்சந்திரன்
4. கண்ணன்
5. சந்திமான்
6. சிசுபாலன்
7. தந்தவக்கிரன்

**கடையேழு வள்ளல்கள்**

1. எழினி
2. காரி
3. ஓரி
4. நள்ளி
5. பாரி
6. பேகன்
7. மலையன் ஆவர்.'**83**

இருப்பினும் கடையேழு வள்ளல்களை வரிசைப்படுத்துவதில் சில வேறுபாடான கருத்துக்களும் உள்ளன.

'பெருங்கல் நாடன் பேகன் பரம்பு மலையை ஆண்ட பாரி, காரி, ஆய், தகடூரை ஆண்ட அதியன் பெரிய சிகரங்களைக் கொண்ட மலைநாட்டினையுடைய நள்ளி வல்வில் ஓரி' எனவும்

கடையேழு வள்ளல்கள் பரம்பிக்கோமான் பாரியும், சொல்லியாண்ட ஓரியும், காரியூர்ந்த மலையனும், எழினியும், பெருங்கல்நாடன் பேகனும், மோசி பாடி ஆயம், ஆர்வமுடன் வரும் இரவலருடைய துயரினை தீர்த்தெளிலே வரையாது வழங்கிய பெருவள்ளலாக இருந்தனர். இவர்களுக்கு பிறகு எட்டாவது வள்ளலாக முதிரெத்தின் தலைவன் குமணன் இருந்ததையும் பெருஞ்சித்திரனார் பாடல் குறிப்பிடுகின்றது.

**'பறம்பின் கோமான் பாரியும் பிறங்குமிசைக்**
**கொல்லி ஆண்ட வல்வில் ஓரியும்**
**காரி ஊர்ந்து பேரமர்க் கடந்து**
**மாரி ஈகை மறப்போர் மலையனும்**
**ஊராது ஏந்திய குதிரைக் கூர்வேல்**
**கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்**
**ஈர்ந்தண் சிலம்பின் இருள்தூங்கும் நனிமுழை**
**அருந்திறல் கடவுள் காக்கும் உயர்சிமைப்**
**பெருங்கல் நாடன் பேகனும் திருந்துமொழி**
**மோசி பாடிய ஆயும் ஆர்வமுற்று**

**உள்ளி வருநர் உலைவு நனி தீரத்**
**தள்ளாது ஈயும் தகைசால் வண்மைக்**
**கொள்ளார் ஓட்டிய நள்ளியும் என ஆங்கு**
**எழுவர் மாய்ந்த பின்றை அழிவரப்**
**பாடி வருநரும் பிறரும் கூடி**
**இரந்தோர் அற்றம் தீர்க்கெ விரைந்து இவண்**
**உள்ளி வந்தனென் யானே'84**

### 5.4.1. பேகனின் வள்ளன்மை

வையாவிக் கோப்பெரும் பேகன் எனப்படும். மயிலுக்குப் போர்வை நல்கிய புகழுடையோன் இவனேயாவன். இவனைப் பாடியோர் பலர். இவன் மனைவியாம் கண்ணகியை மறந்து முல்லைவேலி நல்லூர்க் கண் காதலியோடு வாழப், பெரும்புலவர் பலர் இவனுக்கு அறவுரை கூறிய செய்திகளைப் புறநானூற்றுள் காணலாம். **'வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்85** எனப் பரணர் இவனைப் பற்றிக் கூறுகின்றனர்.

ஆவியர் குடியில் பிறந்தவன் பேகன். இவன் கொடைத் திறத்தைப் போல அவனுடைய பெரிய மலைநாடும் பருவம் தவறாது மழை பெய்யும் வளத்தினைக் கொண்டிருந்தது என்பதனை,

**'வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்**
**கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய**
**அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்**
**பெருங்கல் நாடன் பேகன்'86**

என நந்தனார் பாடல் கூறுகின்றது. இப்பாடல் வழியல் அவன் மயிலுக்குப் போர்வை தந்த மனித நேயமும் புலப்படுகின்றது.

**'பெருங்கடல் நாடான் பேகன்'87**

என அழைக்கப்பட்டதை புறநானூறும் குறிப்பிடுகின்றது. என்னாளும் போர்த்திரியாவன அறிந்தும் மயிலுக்குப் போர்வை அளித்தான் பேகன் என்பதை

**‘உடாஅ போரா ஆகதல் அறிந்தும்**

**படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ**

**கடாஅ யானைக் கலிமான் பேகன்’88**

**‘மடத்தகை மாமயில் பனிக்கும்என் றருளிப்**

**படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்**

**கடாஅ யானைக் கலிமான் பேக்’89**

என்ற புறநானூற்றின் பரணரின் பாடல்களும் உறுதிபடுத்துகிறது.

### 5.4.2. பாரியின் வள்ளன்மை

பறம்பு மலையை ஆட்சி செய்தவன் பாரி. இவன் கடையேழு வள்ளல்களில் ஒருவனாக குறிப்பிட்ட போதிலும் மூவேந்தரைப் போல் பெருமை வாய்ந்தவனாக போற்றப்படுகிறான். இவனது உற்ற நண்பராகவும், பாரி மகளிருக்கு ஆசானாகத் திகழ்ந்தவர் பெரும்புலவர் கபிலர்.

**பாரியின் கொடைச்சிறப்பினை**

**‘பாரிப்பாரி என்று பலர் ஏத்தி**

**ஒருவர் புகழ்வர் செந்நாப் புலவர்**

**பாரி ஒருவனும் அல்லன்**

**மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே’90**

என்ற புறநானூறு பறைசாட்டுகிறது.

**‘….சுரம்புண**

**நறுவீ உறைக்கும் நாக நெடுவழிச்**

**சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய**

**பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரல்**

**பறம்பிற் கோமான் பாரி’91**

என்று பறம்பு மலை தலைவனாகிய பாரி கொழுக் கொம்பின்றி காற்றில் தவித்தாடிய முல்லைக் கொடிக்கு தம் தேரினையே கொழுக்கொம்பாக தந்த கொடைத்திறத்தை தெரிவிக்கின்றது.

**‘ஏந்துகோட்டு யானை வேந்தர் ஓட்டிய**

**கடும் பரிப் புரவிக் கை வண் பாரி92**

என்று பாரி மூவேந்தர்களையும் வெல்லும் வலிமைப் படைத்து இருந்ததையும், விரைந்து செல்லும் குதிரைப்படையை கொண்டிருந்ததையும் எடுத்து இயம்புகிறது.

மண்ணுயிர் முதலாக புல்லுயிர் ஈராக அனைத்தையும் சமமாக கருதி ஆதரிக்கும் குணம் உள்ளவன்.

**‘மிடுக்கிய லாதானை வீம னேவிறல் விசயனே வில்லுக்கிவனென்று கொடுக்கி லாதானை பாரி யெயென்று கூறினுக்கொடுப்பாரிலை பொடிக்கொள் மேனியெம் புண்ணியன் எந்தை புகலூர் பாடுமின் புலவீன்காண்’93**

அடுக்கு மேல் அமரர் உலகமாள்வதற்கு யாதும் ஐயயுறவில்லையே

எனும் தேவாரப் பாடலாலும் பாரியின் மாண்பைப் புரிந்துக்கொள்ளலாம்.

### 5.4.3 காரியின் வள்ளன்மை

திருக்கோவிலூரை தலைநகராகக் கொண்டு மலையமான்கள் என்ற வீரர்குடியினர் ஆண்டுவந்த முள்ளூர் எனும் வளம் செறிந்த மலையின் சிற்றரசன் காரி. இவனுக்கு மலையமான், மலையமான் திருமுடிக்காடி, கோவற்க்-கோ எனும் வேறு பெயர்களும் உண்டு.

வீரத்திலும், வள்ளல் தன்மையிலும் புலவர் பலரால் போற்றப்பட்டு இருப்பவன்.

**‘காரி ஊர்ந்து பேரமர்க் கடந்த**

**மாரி ஈகை மறப்போர் மலையனும்94**

**‘துஞ்சா முழவின் கோவற் கோமான்**

**நெடுந் தேர்க் காரி கொடங்கால் மன்துறை95**

என்ற பாடல் வரிகள் இதனை எடுத்துக்காட்டுகின்றது.

சிறந்த போர்வீரரான காரி தனது வீரர்களுக்கு சிறந்த போர்ப்பயிற்சி அளித்து வைத்திருந்தான். இவனுடைய குதிரை புலவர்களால் புகழப் பட்டிருக்கிறது. சேர, சோழ, பாண்டியர் போருக்குச் செல்லும் போது இவன்

தயையை எதிர்பார்த்து காத்திருந்ததையும், காரியும் அவர்களுக்குத் துணையாக போரிடச் சென்றதையும் அதற்காக மூவேந்தர்களும் பொன்னும், பொருளும் கொடுத்தனர் என்பதை

**‘ஒன்னார் யானை ஓடைப்பொன் கொண்டு**
**பாணர் சென்னி பொலியத் தைஇ**
**வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்**
**ஓடாப் பூட்கை உரவோன் மருக்'96**

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது.

இவன் அழகிய உயர்ரக குதிரைகளையும், செல்வங்களையும் இன்முகத்துடனும், இன் சொல்லுடனும் இரவலர்களுக்கு ஈந்ததை

**‘…..கறங்குமணி**
**வாலுளைப் புரவியொடு வையகம் மருள**
**ஈர நன்மொழி இரவலர்க் கீந்த**
**அழல் திகழ்ந் திமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்**
**கழல்தொடித் தடக்கைக் காரியும்'97**

என்ற பாடல் சுட்டிக்காட்டுகின்றது.

அதியமான் நெடுமான் அஞ்சியுடனும், சோழனுடனும் பகை கொண்டிருந்தான். குணமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவன் எனும் சோழன் இவனைக் கொன்றான்.

### 5.4.4 ஆய் வள்ளன்மை

ஆய் உடைய கொடைச்சிறப்பால் ஆய்க்குடி சிறந்து விளங்கியது என்று

**‘வடதிசை யதுவே வான்தோய் இமயம்**
**தென்திசைஆ ஆய்குடி இன்றாயின்'98**

என புறநானூறு புகழ்கிறது.

உயர்ந்த மலையில் இருக்கும் தலையாரி எனும் இடத்தில் வாழ்ந்தவன். பொதிகை மலைக்கு அருகில் உள்ள ஆய்க்குடி இவனது ஊர் என்பாரும்

உண்டு. இவன் படித்தவர், படிக்காதவர், வலிமையர், வலிமையற்றவர் என்ற பாகுபாடு பார்க்காமலே, பாத்திரம் நிறைய உணவு அளித்ததை

**‘வல்லினும், வல்லார் ஆயினும், சென்றோர்க்குச்**
**சால்அவிழ் நெடுங்குழி நிறைய வீசும்**
**மாஅல் யானை ஆஅய் கானத்துத்**
**தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்’99**

என்ற பாடல் உணர்த்துகிறது.

நீல வண்ண நாகம் தந்த ஆடையினை (கலிங்கத்தை) சிவனுக்கு கொடுத்த வள்ளல் தன்மையை

**‘கழல்தொடித் தடக்கைக் காரியும் நிழல்திகழ்**
**நீல நாகம் நல்கிய கலிங்கம்**
**ஆலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த**
**சாவந் தாங்கிய சாந்துபலர் திணிதோள்**
**ஆர்வ நன்மொழி ஆயம்’100**

என்ற சிறுபாணாற்றுப்பாடல் எடுத்துரைக்கின்றது.

இரவலர் வரும்போது அவர்களுக்கு கொடுப்பது கருதி யானைத்திரள் சேர்த்து வைத்திருந்ததை

**‘இரவலர் வரூஉம் அளவை, அண்டிரன்,**
**பரவு எதிர்ந்து தொகுத்த யானை போல்’101**

என்ற பாடல் வரியால் அறியலாம். இவன் ஆய் அண்டிரன் என்றும் அழைக்கப்பட்டான்.

### 5.4.5 அதியமானின் வள்ளன்மை

தகடூரை ஆட்சிப் புரிந்தவன் அதியமான். இவனது கொடைச்சிறப்பை ஔவையார் பாடியுள்ளார். கிடைத்தற்கரிய நெல்லிக்கனி தனக்கு கிடைத்த போதிலும் அதை அவன் உண்ணாமல் அவைப் புலவர் ஔவையாருக்குக் கொடுத்த அந்த உயரிய பண்பு உலகுள்ளவரைப் போற்றப்படுகின்றது.

இந்நிகழ்வை

**‘அமிழ்துவிளை தீங்கனி ஔவைக் கீந்த**
**உரவுச்சினங் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**
**அரவக்கடல் தானை அதிகனுங்'102**

என்று எடுத்துரைக்கிறது.

இவர் குதிரை மலையைச் சார்ந்தவன். வீரத்திலும் வாய்மைச் செயலிலும், இரவலர்க்கு உதவும் கொடைச்சிறப்பிலும் உயர்ந்தவனாக இருந்துள்ளான் என்பதை

கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி நல்லிசை நிறுத்த நயவரு பனுவல், நல்லிசை தரூஉம் இரவலர்க்கு உள்ளி நசைப்பிழப்ப அறியாக கழல்தொடி அதிக என்ற வரிகளும்,

**“ஒரு நாள் செல்லலம் இருநாள் செல்லலம்**
**பலநாள் பயின்று பலரொடு செல்லினும்**
**தலைநாள் போன்ற விருப்பினன் மாதேர்'103**

என்ற பாடல் அதியனிடம் ஒருநாள் அல்ல பலநாள்கள் சென்றாலும் முதல்நாளை போலவே விருப்பமுடன் உதவும் பண்பு கொண்டதைக் குறிப்பிடுகின்றது.

### 5.4.6. நள்ளியின் வள்ளன்மை

தோட்டிமலைக்கும் அதை சார்ந்த நாட்டிற்கும் தலைவன் நள்ளி. இவன் கண்டிரக்கோ பெருநல்லி எனப்பட்டான். தம்மை நாடி வரும் இரவலர்களுக்கு வாரிவாரி வழங்கிய வள்ளலாக இருந்தவன் என்பதை

**‘கறங்குமிசை அருவிப் பிறங்குமலை நள்ளியின்**
**அசைவில் நோன்றாள் நசைவளன் ஏத்தி**
**நாடொறும் நன்கலம் களிற்றொடு கொணர்ந்து**
**கூடுவிளங்கு வியன்நகர்ப் பரிசில்முற்று அளிப்பப்**
**பீடின்மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்**
**செய்யா கூறிக் கிளத்தல்**
**எய்ய தாகின்றுஎம் சிறு செந்நாவே'104**

என்ற வன்பரணர் படலால் அறியலாம்.

இவன் நாட்டு வளமையை

**'….. கரவாது**
**நட்டோர் உவப்ப நடைப்பரி காரம்**
**முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்**
**துளிமழை பொழியும் வளிதுஞ்சா நெடுங்கோட்டு**
**நனிமலை நாடன் நள்ளியும்'105**

என்ற சிறுபாணாற்றுப்பாடல் தன்னுடைய மனதில் தோன்றும் எண்ணங்களைப் பிறரிடம் மறைக்காமல் எடுத்துக்கூறி தன்னிடம் ஒட்டிக் கொண்டவர்கள் மகிழ்ச்சி கொள்ளுமாறு அவர்களின் வீட்டுக்குத் தேவையான பொருட்களைக் குறிப்பறிந்து வழங்கியதையும் அவன் நாடு மழை வளத்தால் சிறந்திருந்ததையும் உரைக்கிறது.

**'மருந்தும் உடையையோ மற்றோ - இரப்போர்க்கு**
**இழைஅணி நெடுந்தேர் களிறொடு என்றும்**
**மழைசுரந் தன்ன ஈகை, வண்மகிழ்**
**கழல்தொடித் தடக்கை, கலிமாண், நள்ளீ'106**

என்ற பாடல் தம்மை நாடி வருவோர்க்கு அணிகலன்களும் தேர்களும், யானைகளும் பரிசாக கொடுத்ததை அறிவிக்கிறது.

பண்ணோடு இசைக்கும் பாணர்களுக்கு வகையறிந்து பரிசளித்தார்கள் மன்னர்கள். அவர்களுக்கு தரும் பரிசுகளில் மிக உயர்வான பரிசு வெள்ளி நாரால் தொடுத்த பொற்றாமரை மலர்மாலையே என அறியமுடிகிறது. இவ்வித உயர் பரிசுகளை அளித்து பாணர்களை பெருநள்ளி ஆதரித்தான். இவனது உபசரிப்பால் இசை மரபினை மறந்து விட்டனர் இசைவாணர் என்றும், கைவழி யாழிலே மாலைப்பொழுதிலே பாடுதற்குரிய செவ்வழிப் பண்ணை காலைப் பொழுதிலே பாடினார்கள் என்றும், காலையில் பாடுதற்குரிய மருதப்பண்ணை மாலையில் பாடியதாகவும் இதற்குக் காரணம் நள்ளியின் கொடைத்தன்மையே என்று பொருள்பட வன்பரணர் பாடியுள்ளார்.

**'நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்**
**மாலை மருதம் பண்ணிக் காலைக்**
**கைவழி மருங்கிற் செல்வம் பண்ணி**
**வரவு எமர் மறந்தனர் அதுநீ**
**பரவுக்கடன் பூண்ட வண்மையானே'107**

### 5.4.7 ஓரியின் வள்ளன்மை

இவன் கொல்லிமலைக்கு உரியவன். வல்வில் ஓரி என இவனுடைய வில்லாற்றல் பெரிதும் போற்றப் பெற்றதாயிருந்தது. ஓரி குதிரையினை ஊர்ந்தே இவர் போர்மேற் செல்வனாதலின் ஓரி எனப் பெற்றனன் என்பர்.இவன் மலை பலாப்பழங்களை மிகுதியாக உடையது முள்ளூர் மன்னனாகிய மலையமான் திருமுடிக்காரி என்பவன் இவனைக் கொன்று இவன் நாட்டைச் சேரர்களுக்குக் கொடுத்தான். இவன் மழவர் சேரமான் அதியமான் நெடுமான் அஞ்சிக்கும் சோழனுக்கும் நண்பனானவர்.

காரியுடன் போர் புரிந்தவன். ஓரி எனும் குதிரையை தனக்கு உரியதாக வைத்திருந்தவன். கூத்தர்களுக்குப் பரிசாக வளமிகுந்த சிறிய மலைகளை உடைய நாட்டினைத் தானமாக தந்தவன். இதனை

**'.....நளிசினை**
**நறும்போது கஞலிய நாகமுதிர் நாகத்துக்**
**குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த**
**காரிக் குதிரைக் காரியொடு மலைந்த**
**ஓரிக் குதிரை ஓரியும்'108**

என்ற பாடலால் அறியலாம்.

கொல்லி மலையையும் அதன் சுற்றுப்புறப் பகுதியையும் ஆட்சி செய்தவன் வல்வில் ஓரி. இவனுக்கு ஆதன் ஓரி என்ற பெயரும் உண்டு. இசைத்துறையில் மிகுந்த ஈடுபாடு உடையவன்.

முகத்துதியை கண்டு நாணும் தன்மையுற்றவன்.

**'செல்லா நல்இசை நிறுத்த வல்வில்**
**ஓரிக் கொன்று சேரலர்க்கு ஈத்த**
**செவ்வேர்ப் பலவின் பயன்கெழு கொல்லீ109**

என்று கல்லாடனார் ஓரியின் மலைவளத்தைக் குறிப்பிடுகின்றார். ஓரி மலைப் போன்ற கொடையை உடையவன் என்று புலவர்களால் சிறப்பிக்கப்பட்டவன்.

வளமும், வள்ளல்களின் வளமையும் என்ற இவ்வியலில் நீர்வளம், நிலவளம், மனித வளம் மற்றும் அரசர்களின் வள்ளல் தன்மையும், கடையெழு வள்ளல்களின், வள்ளன்மையும் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. இயக்கவியல் பொருள் முதல் வாதமும் வரலாற்றுப் பொருள் முதல் வாதமும் பக். 287
2. திருமுருகாற்றுப்படை பாடல் வரி 296-317
3. உழவர் நாற்றங்கால் (கையேடு) 17-18
4. ஸ்ரீமத் பாகவதம் பக். 206
5. பணவியற் பொருளாதாரம் பக். 73
6. மலைபடுகடாம் பாடல் வரி 279
7. திருமுருகாற்றுப்படை, பாடல் வரி 8-9
8. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 176
9. முல்லைப்பாட்டு படல்வரி 92-96
10. மதுரைக்காஞ்சி பாடல்வரி 148
11. நெடுநல்வாடை பாடல் வரி 129-130
12. பட்டினப்பாலை பாடல்வரி 299-300
13. மலைபடுகடாம் பாடல் வரி 69
14. மேலது, பாடல் வரி 384-385
15. மேலது, பாடல் வரி 404-405
16. மேலது, பாடல் வரி 510-511
17. புறநானூறு, பாடல் எண் 61
18. ஏலாதி பாடல் எண். 51
19. அகநானூறு பாடல் வரி 346:5-10
20. பெரும்பாணாற்றுப்படை பாடல் வரி 272-274
21. மதுரைக்காஞ்சி பாடல் வரி 244-248
22. ஐங்குறுநூறு பாடல் வரி 3:1:206:1
23. தென்னிந்திய வரலாறு பக். 57
24. மலைப்படுகடாம் பாடல்வரி 527-528
25. பட்டினப்பாலை பாடல் வரி 5-7
26. தமிழ் இன்பம் பக். 46
27. பட்டினப்பாலை பாடல் வரி 1-4

28. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் பாடல் எண் 667:1
29. மேலது பாடல் எண் 889
30. மேலது பாடல் எண் 894
31. புறநானூறு பாடல் எண் 393:22-23
32. பரிபாடல் பாடல் எண். 9
33. மேலது, பாடல் எண. 6:9-10
34. மேலது, பாடல் எண். 7:10
35. மேலது, பாடல் எண். 7:49-51
36. மேலது, பாடல் எண். 7:25-39
37. பரிபாடல் பாடல் எண் 2:58-63
38. மேலது பாடல் எண் 2:84-89
39. தண்ணீர் தாகத்திற்கா, இலாபத்திற்கா பக். 23
40. திருக்குற்றால குறவஞ்சி பாடல் எண் 10:7:1-6
41. நற்றிணை பாடல் வரி 51:1-2
42. திருக்குறள் எண் 14
43. நற்றிணை பாடல் எண் 99:6-7
44. புறநானூறு பாடல் எண் 143:1-3
45. சிறுபஞ்சமூலம் பாடல் வரி 3
46. மேலது, பாடல் வரி 20
47. புறநானூறு, பாடல் எண் 189
48. மேலது, பாடல் எண் 2:15-16
49. மேலது, பாடல் எண் 3:24-25
50. மேலது, பாடல் எண் 9:1-4
51. மேலது, பாடல் எண் 10:7-8
52. மேலது, பாடல் எண் 32:1-5
53. மேலது, பாடல் எண் 140:4-8
54. மதுரைக்காஞ்சி பாடல் வரி 219-224
55. அகநானூறு பாடல் எண் 125:18-21
56. மேலது பாடல் எண் 141:21-22

57. மேலது பாடல் எண் 151
58. மேலது, பாடல் வரி 79-83
59. மேலது பாடல் வரி 84-89
60. பட்டினப்பாலை பாடல் வரி 292-294
61. பொருநராற்றுப்படை பாடல் வரி 103-108
62. பத்துப்பாட்டும் பண்டைய தமிழரும் பக். 78
63. பெரும்பாணாற்றுப்படை பாடல்வரி 448-454
64. மேலது பாடல் வரி 455-461
65. மேலது, பாடல் வரி 441 – 447
66. மேலது, பாடல் வரி 478-479
67. மேலது, பாடல் வரி 468-469
68. மேலது, பாடல் வரி 472-479
69. மேலது, பாடல் வரி 492-493
70. மேலது, பாடல் வரி 481-490
71. மதுரைக்காஞ்சி, பாடல் வரி 99-105
72. சிறுபாணாற்றுப்படை, பாடல் வரி 203-206
73. மேலது பாடல் வரி 208-209
74. மேலது, பாடல் வரி 246-248
75. மேலது, பாடல் வரி 207-218
76. வாழ்வியல் களஞ்சியம் பக். 146
77. கூத்தராற்றுப்படை பாடல் வரி 70-76
78. மேலது, பாடல் வரி 558-560
79. மேலது, பாடல் வரி 571-575
80. மேலது, பாடல் வரி 579-580
81. மேலது, பாடல் வரி 565-566
82. அகநானூறு பாடல் எண் 349:5-8
83. அபிதான சிந்தாமணி பக். 1699
84. புறநானூறு பாடல் எண் 158:4-20
85. அகநானூறு பாடல் எண். 422

86. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 84-87

87. புறநானூறு பாடல் எண் 158:13

88. புறநானூறு பாடல் எண் 141:10-13

89. மேலது பாடல் எண் 145:1-3

90. மேலது பாடல் எண் 164

91. சிறுபாணாற்றுப்படை பாடல்வரி 87-91

92. அகநானூறு பாடல் எண் 78:21-22

93. தேவாரம் பாடல் எண். 42

94. புறநானூறு பாடல் எண் 158:6-37

95. புறநானூறு பாடல் எண் 35:14-16

96. புறநானூறு பாடல் எண் 126:1-4

97. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 91-95

98. புறநானூறு பாடல் எண். 73

99. அகநானூறு பாடல் எண் 152:19-22

100. சிறும்பாணாற்றுப்படை பாடல் வரி 95-99

101. நற்றிணை பாடல் எண் 237:7-8

102. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 101-103

103. புறநானூறு பாடல் எண் 101:1-3

104. வன்பரணர் பாடல் எண் 76

105. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 103-107

106. அகநானூறு பாடல் எண் 238 : 11-14

107. வன்பரணர் பாடல் எண். 122

108. சிறுபாணாற்றுப்படை பாடல் வரி 107-111

109. அகநானூறு பாடல் எண் 209:13-15

# முடிவுரை

சங்க இலக்கியங்களில் காணப்படும் பொருளாதார கருத்துக்களை "சங்க இலக்கியத்தில் பொருளாதார சிந்தனைகள்" என்னும் இந்த ஆய்வின் மூலம் ஆராயப்பெற்று ஒவ்வொரு இயலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ள ஆய்வு முடிவுகளின் தொகுப்பாக இம்முடிவுரை பின்வருமாறு அமைகிறது.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழகம் பொருளாதார விஞ்ஞானத்தின் தொடக்க நிலையிலேயே பொருளாதாரத்தின் திறன் மிக்க அறிவாளிகளை பெற்றிருந்தது. அவர்கள் சமூகம் சார்ந்த பொருளியல் சிந்தனைகள் உலகப் பொருளியல் அறிஞர்களால் வரையறுக்கப்பட்ட பொருளாதார கருத்துக்களுடன் ஒன்றுபட்டு உள்ளது.

தமிழகம் பொருளாதாரத்தில் நசிவுற்ற நிலையில் இருந்து வளர்ந்த நிலையை எட்ட வேண்டும் என்ற நோக்கில் சங்ககால மக்களின் வாழ்க்கை முறை, பண்பாடு, நாகரீகம், மன்னர்களின் வரலாறு, போர் முறைகள் அரசியல் மற்றும் தொழில் நுட்பங்கள் அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

சங்ககால தமிழகத்தில் குடும்ப முறைகளும், சமய நிலைகளும், கடவுள் வழிபாடுகளும், கலைகளும், சமுதாய வளர்ச்சியும் உன்னத இடத்தில் இருந்துள்ளதை காணமுடிகின்றது.

திணை சமுதாயத்தில் சமூக வேறுபாடுகளும் சீறூர், முதுகுடி, குறுநில மன்னர்கள் மற்றும் மூவேந்தர்களின் நிலைப்பாட்டையும், அவர்களில் ஆட்சி முறையில் நிகழ்ந்த போரினால் மிகுந்த நன்மைகளும், ஒரு சில பாதிப்புகளும் நிகழ்ந்திருக்கிறது. இருப்பினும் அவை காலத்தின் கட்டாயத்தால் நிகழ்ந்துள்ளதை அறிய முடிகிறது.

வாணிபம், வாணிப முறைகள், வாணிப பொருள்கள், உள்நாட்டு அயல்நாட்டு வாணிகங்கள், ஏற்றுமதி, இறக்குமதி முறைகள், நிலம் சார்ந்த தொழில்கள், பொதுத் தொழில்கள், முறையே சீராகவும், சிறப்பாகவும் நடைபெற்று நாட்டின் வளர்ச்சிக்கு உறுதுணையாக உள்ளன.

ஐவகை நிலங்களை சார்ந்து வாழ்ந்தவர்கள் தானம் தர்ம குணங்களில் மேலோங்கியவர்களாக இருந்து வாடிய மக்களை வளம் பெறச் செய்தனர். தம்மை நாடி வந்தவர்களை மட்டும் ஆற்றுப் படுத்தாமல் தாமே முன்சென்று ஏழ்மையில் இருந்தவர்களை ஆற்றுப்படுத்தும் உயர்ந்த குணங்களை கொண்டவர்களாக சங்க கால மக்கள் இருந்தார்கள் என்பதை அறியலாம்.

நீர் வளத்திலும், நில வளத்திலும், மனித வளத்திலும் அரசர்களின் வள்ளல் தன்மையிலும் சங்ககால தமிழகம் வளம்மிக்க தமிழகமாகவும், அதே நேரத்தில் ஒரு சில காலக்கட்டங்களில் நிலவிய வறட்சி காரணமாக ஒரு சில நிலப்பகுதிகள் வறுமைமிக்க தமிழகமாகவும் இருந்திருக்கிறது என்பது தெளிவு.

மனித சமுதாயத்தில் அரசன் முதல் ஆண்டிவரை ஈறாக உள்ள யாவரும் பொருளாதார சூழலில் வாழ வேண்டியுள்ளது. வாழ்வின் முக்கிய அம்சமாக பொருளாதாரம் காணப்படுவதால் பொருளாதாரம் பற்றிய எண்ணங்களும், நம்பிக்கைகளும் எல்லோர்க்கும் பொதுவாகவே அமைந்துள்ளது.

வறுமை, வேலையில்லாத் திண்டாட்டத்தின் காரணமாகவோ இன்று வாழும் மக்கள் பொருளாதார கோட்பாட்டை பின்பற்ற தடுமாறி கலங்காவண்ணம் பல்வேறு பொருளியல் கருத்துக்களை எடுத்துக்காட்டுகளுடன் கூறி அவற்றை பின்பற்றினால் உண்டாகக்கூடிய நன்மைகளையும், ஏழ்மையை போக்கும் கழுவாய்களும் இலக்கியத்தின் வாயிலாக விரித்து கொடுக்கப்பட்டுள்ளதால் மக்கள் அவற்றை பயன்படுத்திக் கொண்டு வாழ இவ்வாராய்ச்சி துணைபுரியும்.

இவ்வாராய்ச்சியில் சங்ககால தமிழகத்தின் பொருளாதாரம் பற்றிய உண்மை நிலை உணர்த்தப்பட்டுள்ளது. இதனை மேற்கொண்டு விரிவாக ஆராய முற்படுவோர் தமிழ்நாட்டு பொருளாதாரத்தையோ, இந்திய பொருளாதாரத்தையோ, ஆராய்ந்து அரிய செய்திகளை புலப்படுத்த இவ்வாராய்ச்சி தோற்றுவாயாக அமையும் என்பது ஆய்வாளரின் நம்பிக்கையாகும்.

துணை நூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்

(எட்டுத்தொகை நூல்கள்)


| | | |
|---|---|---|
| 1 | அகநானூறு | புலியூர் கேசிகன் (உரையாசிரியர்)<br>சாரதா பதிப்பகம்<br>சி-4, சாந்தி அடுக்ககம்<br>3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு<br>ராயப்பேட்டை, சென்னை -14.<br>முதல் பதிப்பு 2010 |
| 2. | ஐங்குறுநூறு | புலியூர் கேசிகன் (உரையாசிரியர்)<br>சாரதா பதிப்பகம்<br>சி-4, சாந்தி அடுக்ககம்<br>3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு<br>ராயப்பேட்டை, சென்னை -14.<br>முதல் பதிப்பு 2010 |
| 3. | கலித்தொகை | புலியூர் கேசிகன் (உரையாசிரியர்)<br>சாரதா பதிப்பகம்<br>சி-4, சாந்தி அடுக்ககம்<br>3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு<br>ராயப்பேட்டை, சென்னை -14.<br>முதல் பதிப்பு : அக்டோபர் 2009 |
| 4. | கலித்தொகை | சக்திதாசன் சுப்ரமணியன் (உ.ஆ)<br>அன்பு வெளியீடு, புதுச்சேரி<br>முதல் பதிப்பு 3-1958 |
| 5. | குறுந்தொகை | புலியூர் கேசிகன் (உரையாசிரியர்)<br>சாரதா பதிப்பகம்<br>சி-4, சாந்தி அடுக்ககம்<br>3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு<br>ராயப்பேட்டை, சென்னை -14.<br>முதல் பதிப்பு 2010 |
| 6. | நற்றிணை | நாராயணசாமி ஐயர், அ (ஊ.ஆ)<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>154, டி.டி.கே. சாலை, சென்னை – 18<br>இரண்டாம் பதிப்பு 2007 |
| 7. | பதிற்றுப்பத்து | ஔவை சு. துரைசாமிபிள்ளை (உ.ஆ)<br>சாரதா பதிப்பகம் |

சி-4, சாந்தி அடுக்ககம்
3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு
ராயப்பேட்டை, சென்னை -14.
முதல் பதிப்பு : டிசம்பர் 2008

8. பரிபாடல் — புலியூர் கேசிகன் (உரையாசிரியர்)
சாரதா பதிப்பகம்
சி-4, சாந்தி அடுக்ககம்
3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு
ராயப்பேட்டை, சென்னை -14.
முதல் பதிப்பு : டிசம்பர் 2009

9. புறநானூறு — புலியூர் கேசிகன் (உரையாசிரியர்)
சாரதா பதிப்பகம்
சி-4, சாந்தி அடுக்ககம்
3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு
ராயப்பேட்டை, சென்னை -14.
முதல் பதிப்பு : டிசம்பர் 2009

10. பத்துப்பாட்டு (மூலமும் உரையும்) (திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, நெடுநல்வாடை) — கதிர் முருகு (உ.ஆ)
சாரதா பதிப்பகம்
சி-4, சாந்தி அடுக்ககம்
3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு
ராயப்பேட்டை, சென்னை -14.
முதல் பதிப்பு : சூன் 2009


**துணைமை ஆதாரங்கள்**


11. ஆசாரக்கோவை — பெருவாயின் முள்ளியார்
சாரதா பதிப்பகம்
3-ம் பதிப்பு சூலை 2009

12. இன்னா நாற்பது, இனியவை நாற்பது — கௌமாரீஸ்வரி எஸ். (உ.ஆ)
சாரதா பதிப்பகம், 4-ம் பதிப்பு
ஆகஸ்ட் 2008

13. இன்னிலை – கைநிலை — பொய்கையார்
சாரதா பதிப்பகம்
முதல் பதிப்பு : சூலை 2006

14. ஏலாதி — கணித மேதாவியார்
சாரதா பதிப்பகம்,
ஆகஸ்ட் 2008

15. ஐந்திணை ஐம்பது — மாறன் பொறையனார்
சாரதா பதிப்பகம்,
ஆகஸ்ட் சூலை 2006

| | | |
|---|---|---|
| 16. | ஐந்திணை எழுபது | மூவாதியார்<br>சாரதா பதிப்பகம்<br>முதற்பதிப்பு : ஆகஸ்ட் 2008 |
| 17. | கம்பராமாயணம் (முதல் பாகம்) | பூவண்ணன் (உ.ஆ)<br>வர்த்தமானன் பதிப்பகம்<br>ஏ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ்<br>141, உஸ்மான் சாலை, தி.நகர்,<br>சென்னை – 17<br>புதிய பதிப்பு : ஏப்ரல் 2000 |
| 18. | கார் நாற்பது<br>களவழி நாற்பது | மதுரை கண்ணங்கூத்தனார்<br>பொய்கையார், (ந.மு. வேங்கடசாமி<br>நாடார் உரை) சாரதா பதிப்பகம்<br>முதல் பதிப்பு : ஆகஸ்ட் 2005 |
| 19. | சிறுபஞ்சமூலம் | காரியாசான்<br>சாரதா பதிப்பகம்<br>ஆகஸ்ட் 2005 |
| 20. | சிலப்பதிகாரம் | ஸ்ரீசந்திரன் ஜெ. (உ.ஆ)<br>வர்த்தமானன் பதிப்பகம்<br>8-ம் பதிப்பு, பிப்ரவரி 2000 |
| 21. | சீவக சிந்தாமணி | மாணிக்கவாசகன் ஞா. (உ.ஆ)<br>மணிவாசகர் பதிப்பகம்<br>55, லிங்கி தெரு, சென்னை-1<br>முதல் பதிப்பு ஆகஸ்ட் 1988 |
| 22. | நாலடியார் | ஸ்ரீசந்திரன் ஜெ. (உ.ஆ)<br>வர்த்தமானன் பதிப்பகம்<br>8-ம் பதிப்பு, பிப்ரவரி 2000 |
| 23. | நாலடியார் | பாலசுந்தரம் பிள்ளை (உ.ஆ)<br>சைவ சித்தாந்த நூற்பதிப்பு<br>கழகம்<br>14, பிராட்வே, சென்னை-1 |
| 24. | நாலாயிர திவ்ய பிரபந்தம் | கமலகண்ணன், இரா.வ. (உ.ஆ)<br>வர்த்தமானன் பதிப்பகம்<br>பதிப்பு ஆண்டு இல்லை |
| 25. | நான்மணிக்கடிகை | விளம்பிநாகனார்<br>சாரதா பதிப்பகம், 3-ம் பதிப்பு<br>சூலை 2009 |
| 26. | திரிகடுகம் | நல்லாதனார்<br>சாரதா பதிப்பகம், 4-ம் பதிப்பு<br>ஆகஸ்ட் 2005 |

| | | |
|---|---|---|
| 27. | திருக்குறள் (ஜைனர் உரை) | வேங்கடராமையா கே.எம். (உ.ஆ)<br>சரஸ்வதி மஹால் நூலகம்,<br>தஞ்சை |
| 28. | திருக்குற்றால குறவஞ்சி | திரிக்கூட இராசப்ப கவிராயர்<br>சாரதா பதிப்பகம், 2-ம் பதிப்பு,<br>சூன் 2010. |
| 29. | திருவிளையாடற் புராணம் (பாம் 2,3) | பரஞ்சோதி முனிவர்<br>ஜோதி. வ. (உ.ஆ)<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>2-ம் பதிப்பு 1998 |
| 30. | திணைமாலை நூற்றைம்பது | கணித மேதாவியார்<br>சாரதா பதிப்பகம். முதல் பதிப்பு,<br>ஆகஸ்ட் 2006 |
| 31. | திணைமொழி ஐம்பது | கண்ணன் சேந்தனார்<br>சாரதா பதிப்பகம்,<br>முதற்பதிப்பு சூலை 2006 |
| 32. | முதுமொழிக்காஞ்சி | மதுரைக் கூடலூர் கிழார்<br>சாரதா பதிப்பகம்,<br>முதற்பதிப்பு அக்டோபர் 2005 |
| 33. | முத்தொள்ளாயிரம் | கதிர் முருகு (உ.ஆ)<br>சாரதா பதிப்பகம்,<br>முதற்பதிப்பு செப்டம்பர் 2009 |


## வடமொழி இலக்கியங்கள்


| | | |
|---|---|---|
| 34. | பகவத் கீதை (உண்மை உருவில்) | பக்தி வேதாந்த புத்தக<br>அறக்கட்டளை<br>ஹரி கிருஷ்ணா லேண்ட், ஜாகு,<br>மும்பை – 400049<br>26-ம் பதிப்பு, மே – 2004 |
| 35. | வால்மீகி இராமாயணம்<br>(பகாம் 1,2,4) | ஜோதி வ. (உ.ஆ)<br>வர்த்தமானன் பதிப்பகம்<br>5ம் பதிப்பு, அக்டோபர் 2001 |
| 36. | விதுர நீதி யவ்ய பிரச்னம் | கண்ணன்சுவாமி ஆர். (தமிழில்)<br>91, துளசிங்க முதலி தெரு,<br>பெரம்பூர், சென்னை -11<br>முதல் பதிப்பு, சூலை 1990 |

37. வியாசபாரதம் (பாகம் 1,3) — வியாசர், ஜோதி.வ. (உ.ஆ)
வர்த்தமானன் பதிப்பகம்,
5ம் பதிப்பு, செப்டம்பர் 2001

38. ஸ்ரீமத் பாகவதம் — வியாசர், ஜோதி.வ. (உ.ஆ)
வர்த்தமானன் பதிப்பகம்,
7ம் பதிப்பு, பதிப்பு ஆண்டு இல்லை

39. தொல்காப்பியம் (பொருளதிகாரம்) — இளம்பூரணார்
சண்முகம் பிள்ளை மு. (ப.ஆ)
முல்லை நிலையம், 9 பாரதி நாகர்,
முதல் தெரு, தி.நகர், சென்னை 17
3ம் பதிப்பு – 2000

40. நன்னூல் சொல்லதிகாரம் பெயரியல் — சங்கர நமச்சிவாயம் (உ.ஆ)
பதிப்பு ஆண்டு இல்லை.

41. இரகோத்தமன் இரா. — ஐம்பெருங்காப்பியங்களில்
சடங்குகளும் நம்பிக்கைகளும்
சென்னை பல்கலைகழகத்திற்கு
டாக்டர் பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆராய்ச்சி ஏடு,
தேசியக் கல்லூரி, 1987.

42. சரண்யா அ. — ஆற்றுப்படை நூல்களில் மனிதநேய பண்புகள்
ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு
புனித சிலுவை தன்னாட்சி கல்லூரி,
திருச்சி.

43. தீபஜோதி, ச. — பெரியார் - பாரதிதாசன் பெண்ணிய
சிந்தனைகள் ஓர் ஒப்பீட்டாய்வு
பாரதிதாசன் பல்கலைக்கழக
முனைவர் தமிழ்ப்பட்டத்திற்காக
பகுதி நிறைவாக அளிக்கப்பெற்ற
ஆய்வுக் கட்டுரை, உருமு
தனலட்சுமி கல்லூரி, திருச்சி. சூன்
2003.

44. பாலமுருகன் ச. — தமிழர் வாழ்வியலில் நிமித்தமும்,
கனவுகளும்,
பாரதிதாசன் பல்கலைக்கழக
முனைவர் தமிழ்ப் பட்டத்திற்கு
பகுதி நிறைவாக அளிக்கப்பெற்ற
ஆய்வுக்கட்டுரை, உருமு
தனலட்சுமி கல்லூரி, திருச்சி.
செப்டம்பர் 2008

45. பிரேமா பா. — பத்துப்பாட்டு புற இலக்கியத்தில் பொருளாதாரம் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு – பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சி.

46. மரியரெக்ஸி மெரன்சிலா — பொருநராற்றுப்படையில் புரவலர் - இரவலர் உறவு, ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு, புனித சிலுவை தன்னாட்சிக் கல்லூரி, திருச்சி.

47. ராபியத்துல் பஷிரியா அ.ரா. — பத்துப்பாட்டில் மன்னர்களின் ஆட்சி முறையும் மக்களின் மாண்புகளும், ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு, புனித சிலுவை தன்னாட்சிக் கல்லூரி, திருச்சி.

48. விமலா இரா. — அகநானூற்றில் வாழ்வியல் கூறுகள் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு, புனித சிலுவை தன்னாட்சிக் கல்லூரி, திருச்சி.

49. விஜயபாரதி, இரா. — சங்க இலக்கியத்தில் வரைவின் மகளிர் பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் தமிழ்ப் பட்டத்திற்காக பகுதி நிறைவாக அளிக்கப்பெற்ற ஆய்வுக்கட்டுரை, உருமு தனலட்சுமி கல்லூரி, திருச்சி.

**ஆய்வு நூல்கள்**

50. அப்துல் ரகுமான் — கம்பனின் அரசியல் கோட்பாடுகள் கவிக்கோ பதிப்பகம், 15, புல்பான் பஜார். 3-வது தெரு, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5. 2-ம் பதிப்பு, 1995

51. அரங்கசாமி (பதிப்பாசிரியர்) — பத்துப்பாட்டில் பைந்தமிழ் வளம் மெய்யப்பன் பதிப்பகம், 53, புதுத்தெரு, சிதம்பரம் 608 001. முதல்பதிப்பு : டிசம்பர் 2004

| | | |
|---|---|---|
| 52. | அனுராதா | சங்க பேழை<br>13, முதன்மை சாலை,<br>விஜயலட்சுமிபுரம்,<br>அம்பத்தூர், சென்னை – 53<br>முதல் பதிப்பு 12-2002 |
| 53. | ஆறுமுகம் அ. | சங்க இலக்கியத்தில் குடும்பம்,<br>உடைமை, அரசு, பாவேந்தர்<br>பதிப்பகம்.<br>திருமழப்பாடி, அரியலூர். முதற்<br>பதிப்பு 1994 |
| 54. | இரவிச்சந்திரன் இரா. (பதிப்பாசிரியர்) | ஆராய்ச்சி தொகுதி (1,2,4)<br>பாரி நிலையம், சென்னை,<br>முதற்பதிப்ப 1964 |
| 55. | இராகவையங்கார் மு | இந்திய தேசிய ஒருமைப்பாட்டிற்கு<br>சமயத் தமிழ் இலக்கியங்களின்<br>பங்களிப்பு, தமிழாய்வுத் துறை,<br>உருமு தனலட்சுமி கல்லூரி,<br>திருச்சி – 19. முதல் பதிப்பு சூன்<br>- 2010 |
| 56. | இராசமாணிக்கனார் ம. | பத்துப்பட்டு ஆராய்ச்சி<br>சென்னை பல்கலைக்கழகம். 1970 |
| 57. | கந்தயா, ந.சி. | தமிழர் சரித்திரம், அமிழ்தம்<br>பதிப்பகம்<br>சென்னை – 17, முதல்பதிப்பு 2003 |
| 58. | கரிகாலன், நை.மு. (தொகுப்பாசிரியர்) | பத்துப்பாட்டு ஆய்வுகள்.<br>நியு செஞ்சுரி, முதல் பதிப்பு<br>டிசம்பர் 2011 |
| 59. | கருணாநிதி ஆ.<br>தேவி, ஜெ. (பதிப்பாசிரியர்) | இந்திய தேசிய ஒருமைப்பாட்டிற்கச்<br>சமண பௌத்த சமயங்கள்<br>வழங்கிய காப்பிய மரபுகளும்<br>வாழ்வியல் நெறிகளும்<br>தமிழாய்வுத்துறை, உருமு<br>தனலட்சுமி கல்லூரி, திருச்சி 19<br>முதல் பதிப்பு மார்ச் 2012 |
| 60. | சங்க இலக்கிய ஆய்வு மையம்,<br>குறிஞ்சி | ஐங்குறுநூறு ஆய்வுக்கோவை<br>(முதல் தொகுதி) 17, வீட்டுவசதி<br>வாரியக் குடியிருப்பு, தோப்பூர்,<br>மதுரை 625 008. |

61. சண்முக சுந்தரம் க. — திருவரங்கம் பெரியகோயில் திருவிழாக்களும், ஒழுகலாறுகளும், கந்த மேஸ்தியார் பதிப்பகம், 123, கீரைக்கார தெரு, ஸ்ரீரங்கம், திருச்சி 6, முதற்பதிப்பு : நவம்பர் 2002

62. சிதம்பரனார் சாமி — பத்துப்பாட்டும் பண்டையத் தமிழரும் அறிவுப் பதிப்பகம், 142, ஜானி ஜான் கான் ரோடு, இராயப்பேட்டை, சென்னை – 14, முதற்பதிபபு : அக்டோபர் 2003

63. சுப்ரமணியன் கா. — சங்ககால சமுதாயம், நியூ செஞ்சரி, 2-ம் பதிப்பு

64. சேதுப்பிள்ளை ரா.பி. — தமிழ் இன்பம், பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி – 2 15ம் பதிப்பு – 1987

65. பிள்ளை கே.கே. — தமிழக வரலாறும், மக்களும், பண்பாடும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.

66. மயிலை சீனி. வேங்கடசாமி — பழங்காலத் தமிழர் வாணிகம் நியூ செஞ்சுரி, 6-ம் பதிப்பு, டிசம்பர் 2011

67. மாத்தளை சோமு — வியக்கவைக்கும் தமிழர் அறிவியல் உதகம் வெளியீடு, உலகத் தமிழாய்வுத்க் கழகம், பி-15, ஐந்தாவது முதன்மை சாலை, இராமலிங்க நகர், உறையூர், திருச்சி 3 முதற் பதிப்பு 2005

68. மாதையன் பெ. — சங்ககால இனக்குழு சமுதாயமும், அரசு உருவாக்கமும் பாவை பப்ளிகேஷன்ஸ், 142, ஜானி ஜான் கான் சாலை, சென்னை 14, 4-வது பதிப்பு 12-2012

69. மாதையன் பெ. — சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 2-ம் பதிப்பு 3-2010

70. மீனாட்சி சுந்தரனார் தெ.பொ. — உலக நாகரீகத்தில் தமிழரின் பங்கு ஞாலத் தமிழ் பண்பாட்டு ஆய்வு மன்றம், தமிழ்த்துறை, மதுரை காமராஜர் பல்கலைக்கழகம், மதுரை 625021. 3-ம் பதிப்பு 1992.

71. வேளம்மாள் நா. — தமிழ் நாவல்களில் பொருளாதார சிக்கல்கள், நியூ செஞ்சுரி, முதல் பதிப்பு ஆகஸ்ட் 2008

72. வைத்தியலிங்கம் செ. — தமிழ் பண்பாட்டு வரலாறு


**பாட நூல்கள்**


73. ஆதிதிராவிடர் பழங்குடி நலத்துறை — பனிரெண்டாம் வகுப்பு வணிகவியல் சிறப்பு வழிகாட்டி, சென்னை. 2ம் பதிப்பு 1995

74. குரசாமி மா.பா. — தொழில் பொருளாதாரம் தேன்மொழி பதிப்பகம், 117 சன்னதிதெரு திருச்செந்தூர் - 628 215 சிதம்பரனார் மாவட்டம், 3ம் பதிப்பு, 1989

75. சடகோபன் கோ. — இந்திய பொருளாதாரம் அமுதன் பதிப்பகம், 31 சாமிநாதன் நகர் மேலக்காவிரி, கும்பகோணம் -002.

76. சடகோபன் கே. — நிதியியல் பொருளாதாரம் அமுதன் பதிப்பகம்

77. சடகோபன் கே. — நுண்ணினப் பொருளியல், அமுதன் பதிப்பகம்.

78. சடகோபன் கே. — பண்பாட்டுப் பொருளாதாரம் அமுதன் பதிப்பகம், கும்பகோணம் 612002.- 1988

79. தமிழக அரசு பாடநூல் நிறுவனம் — பனிரெண்டாம் வகுப்பு வணிகவியல் சிறப்பு வழிகாட்டி, சென்னை. 2ம் பதிப்பு 1988

| | | |
|---|---|---|
| 80. | தேவ இரக்கம் | நுண்ணின பொருளியல்,<br>ஜோதி பதிப்பகம்.<br>56, அண்ணா நகர்,<br>திருநெல்வேலி 627 001.<br>2ம் பதிப்பு – 1986 |
| 81. | பத்மாவதி சு. | வட்டார பொருளியல், தனுஸ் பப்ளிகேஷன்ஸ்<br>பொன்னகரம், பாம்பாட்டித் தெரு,<br>தஞ்சை 615 001, 1993. |
| 82. | பாலசுப்ரமணியன் சு.வை. | பணவியற் பொருளாதாரம்<br>மலர் பதிப்பகம்,<br>23, ஜவுளிச் செட்டித் தெரு,<br>தஞ்சாவூர், 613 009.<br>முதற் பதிப்பு 1986. |
| 83. | மதலை மேதி பாத்திமாராஜ் ஜ | சுற்றுச்சூழல் பொருளாதாரம்<br>பீட்டர் பவுல்ராஜ் பப்ளிகேஷன்ஸ்<br>788, குவார்ட்ர்ஸ்,<br>புதிய வீட்டு வசதி காலனி,<br>சரபோஜி கல்லூரிக்கு எதிரில்,<br>தஞ்சை – 613 005.<br>2ம் பதிப்பு 1993 |


**மொழிபெயர்ப்பு நூல்கள்**


| | | |
|---|---|---|
| 84. | அனிக்கின் அ.வி.<br>(தமிழில் : தர்மராஜன் ந) | மஞ்சள் பிசாசு, முன்னேற்ற பதிப்பகம் மாஸ்கோ<br>(விற்பனை – நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை) |
| 85. | அனிக்கின் அ.வி<br>(தமிழில் : தர்மராஜன் ந) | அரசியல் பொருளாதார இளமைக்காலம்<br>முன்னேற்ற பதிப்பகம், மாஸ்கோ,<br>நியூ செஞ்சுரி 1983 |
| 86. | கிப்ரான் கலீல் கிப்ரான்<br>(தமிழில் பெருமாள் எஸ்.) | முறிந்த சிறகுகள்<br>இன்ஸ்டிடியூட் ஆப் சௌத் குன்றயன்<br>ஸ்டடீஸ், 16, நல்லதம்பி தெரு,<br>எல்லீஸ் ரோடு, சென்னை – 2 |
| 87. | இலியின் எம். ஜெபகால் யா<br>(தமிழில் முகமது செரீப். நா) | மனிதன் எங்ஙனம் பேராற்றல் மிக்கவன் ஆனான்?<br>ராதுகா பதிப்பகம், சோவியத் நாடு – 1988 |

| | | |
|---|---|---|
| 88. | எங்கெல்ஸ் | குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம் |
| 89. | காந்தி<br>(தமிழில் : வேங்கடராஜுலு ரா) | சத்தியசோதனை<br>காந்திய இலக்கிய கழகம்,<br>காந்தி மியூசியம், மதுரை – 20.<br>முதல் பதிப்பு – 1994 |
| 90. | கார்ல் மார்க்ஸ்<br>(தமிழில் : கிருஷ்ணையா, இரா) | கூலியுழைப்பு மூலதனம்<br>முன்னேற்ற பதிப்பகம், மாஸ்கோ<br>நியூ செஞ்சுரி. |
| 91. | சேத்தி பி.ஆர்<br>(தமிழில் பாலசுப்ரமணியம் மோ) | என் கடிதம்<br>இந்திய ஆயுள் காப்பீட்டுக் கழகம்<br>தென்மண்டல அலுவலகம்,<br>எல்.ஐ.சி. கட்டிடம், அண்ணாசாலை<br>சென்னை – 2, 1992 |
| 92. | பெலங்கோ கார்கி அஸ்திரமோவ்<br>(தமிழில் : பெயர் இலை) | உலக சோசலிச அமைப்பு<br>தோற்றமும் வளர்ச்சியும்<br>முன்னேற்ற பதிப்பகம், மாஸ்கோ,<br>நியூ செஞ்சுரி. |
| 93. | மெதவோய் அ.சி<br>(தமிழில் தர்மராஜன் நா) | இந்திய பொருாளதாரம்<br>முன்னேற்ற பதிப்பகம்,<br>நியூ செஞ்சுரி 1986. |
| 94. | லெவ்வஸ்க்ரி சென்ஸ்கி<br>(தமிழில் : பெயர் இல்லை) | சோவியத் விவசாயம்<br>முன்னேற்ற பதிப்பகம், மாஸ்கோ |
| 95. | வலென்கேய் தி.இ<br>(தமிழில் பாஸ்கரன் இரா.) | மக்கள் தொகை தத்துவத்தின்<br>அடிப்படைகள், முன்னேற்ற<br>பதிப்பகம்<br>மாஸ்கோ. (விற்பனை : நியூ<br>செஞ்சுரி) 1986 |
| 96. | வோல்காப் எம்.எம்.<br>(தமிழில் : பெயர் இல்லை) | சமூக விஞ்ஞான பாடநூல்<br>(சோசலிசம் என்றால் என்ன?<br>கம்யூனிசம் என்றால் என்ன?)<br>முன்னேற்ற பதிப்பகம், சோவியத்<br>நாடு, (விற்பனை : நியூ செஞ்சுரி,<br>சென்னை – 1990) |
| 97. | வோல்காப் எம்.எம்.<br>(தமிழில் பெயர் இல்லை) | சமூக விஞ்ஞான பாடநூல்<br>(இயக்கவியல் மற்றும் வரலாற்று<br>பொருள் முதல் பாகம்)<br>முன்னேற்ற பதிப்பகம், சோவியத்<br>நாடு, (விற்பனை : நியூ செஞ்சுரி,<br>சென்னை – 1990) |

| | | |
|---|---|---|
| 98. | வையவன் (தமிழில்) | இந்திய வளர்ச்சி திட்டங்கள்<br>மாநிலப் பள்ளி சாராக்கல்விக்<br>கருவூலம் எண் 1, முதல் தெரு,<br>ரெங்கரத்தின நகர், விரிவு,<br>அடையார், சென்னை — 20.<br>முதல் பதிப்பு : 9-1994 |
| 99. | ஹோரொஸ் வி.<br>(தமிழில் பெயர் இல்லை) | வளர்முக நாடுகள் பாப்புலிசம்<br>முன்னேற்ற பதிப்பகம், சோவியத்<br>நாடு (விற்பனை நியூ செஞ்சுரி)<br>1986 |
| 100. | ஹோரொஜ் வி. | இயக்கவியல் பொருள்<br>முதல்வாதமும்<br>வரலாற்று பொருள் முதல் வாதமும்<br>முன்னேற்ற பதிப்பகம், சோவியத்<br>நாடு (விற்பனை : நியூ செஞ்சுரி-<br>1978) |
| 101. | ஜவஹர்லால் நேரு<br>(தமிழில் அழகேசன் ந.வி.) | உலக சரித்திரம் (முதல் தொகுதி)<br>புக்ஸ் (இந்தியா) பிரைவேட்<br>லிமிடெட்<br>முதல் பதிப்பு — ஏப்ரல் 1958 |
| 102. | | சோவியத் அயல்துறைக் கொள்கை<br>— வினாவிடை<br>Frolor at Sovet Nadu Office<br>115, T. Nagar, Madras 17 – 1985 |
| 103. | இராமலிங்கம் பிள்ளை | நாமக்கல் கவிஞர் பாடல்கள்<br>சீதை பதிப்பகம், 17-1 தாச்சி<br>அருணாச்சலம் தெரு, மயிலை,<br>சென்னை -14<br>முதல் பதிப்பு 7-2008 |
| 104. | கௌதமன் | எழுபது கோடியில் இவனும்<br>ஒருவன்,<br>கலைஞன் பதிப்பகம் - 10,<br>ஹென்ஸ்மென் ரோடு, தி.நகர்,<br>சென்னை — 17.<br>முதல் பதிப்பு — டிசம்பர் 1983 |
| 105. | பாரதிதாசன் | இருண்டவீடு<br>மணிவாசகர் பதிப்பகம்<br>31, சிங்கர் தெரு, பாரிமுனை,<br>சென்னை — 108<br>5ம் பதிப்பு — 2003 |

| | | |
|---|---|---|
| 106. | பாரதியார் | மகாகவி பாரதியார் கவிதைகள்<br>ஸ்ரீஇந்து பதிப்பகம், 40 பாஞ்சால<br>சுப்ரமணியம் தெரு, தி.நகர்,<br>சென்னை – 14<br>13-ம் பதிப்ப – டிசம்பர் 2004 |
| 107. | அருணன் | தமிழ் இலக்கிய வழி வரலாறு,<br>இமயம் பதிப்பகம், 8, நீலா தெற்கு<br>வீதி, நாகப்பட்டினம் - 611 001.<br>முதல் பதிப்பு – நவம்பர் 1996. |
| 108. | அண்ணாமலை மு. | தமிழ்நாட்டில் கல்வி அன்றும்<br>இன்றும் |
| 109. | அப்பாதுரை | வருங்கால தமிழகம்<br>தமிழ் இந்தியா நிலையத்தார்<br>2ம் பதிப்பு, 15.9.1949 |
| 110. | அகமது இப்ராஹிம் காதிரி ரப்பானி | வலீலா என்றால் என்ன?<br>ரப்பானி பப்ளிஷர்ஸ், சி-2தெற்கு<br>யாதவர் தெரு, பீம நகர், திருச்சி<br>முதல் பதிப்பு ஏப்ரல் 1965 |
| 111. | காசி சுவாமிகள் | சதுரகிரி அருள்மிகு சுந்தர<br>மகாலிங்கம்<br>வெள்ளி கவச மலர் (சதுரகிரி<br>யாத்திரை குழு) மதுரை. |
| 112. | கண்ணதாசன் | தெய்வ தரிசனம்,<br>கங்கை புத்தக நிலையம்,<br>13, தீனதயாளு தெரு, தி.நகர்,<br>சென்னை – 17. |
| 113. | கனகசபை வெ. | ஆயிரத்து எண்ணூறு<br>ஆண்டுகளுக்கு முற்பட்ட சமூகம்<br>வசந்தா பதிப்பகம், மனை எண் 9<br>ஜோசப் காலனி, ஆதம்பாக்கம்,<br>சென்னை – 14) |
| 114. | காளமேக புலவர் | கவி காளமேகம் |
| 115. | சத்தியமூர்த்தி எஸ். | தொழில் வியாபாரம் விவாசயக்<br>கடன் வாங்கும் முறைகள்<br>ராஜாமணி பதிப்பகம். நூறடி<br>கோபுரம், காரைக்குடி – 630 002.<br>2ம் பதிப்பு – 1996. |

116. சத்பவானந்தர் — எதிர்கால இந்தியா
ஸ்ரீராம கிருஷ்ணா தபோவனம்
திருப்பராய்த்துறை, திருச்சி.
6ம் பதிப்பு – 1984

117. சிதம்பர ரகுநாதன் — இலக்கிய விமர்சனம்
தமிழ் புத்தக ஆலயம், மயிலாப்பூர்
சென்னை – 4, முதற்பதிப்பு 1946.

118. தமிழ்த்துறை ஆசிரியர்கள் — தமிழ் இலக்கிய வரலாறு
தமிழாய்வுத் துறை, பிஷப் ஹீபர்
கல்லூரி, திருச்சி – 17.
முதற்பதிப்பு 1999.

119. தமிழ்த்துறை — தமிழ் இலக்கிய வரலாறு
தூய வளனார் தன்னாட்சி கல்லூரி,
திருச்சி, 4ம் பதிப்பு 1999.

120. - — வாழ்வியல் களஞ்சியம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

121. - — உழவர் நாற்றங்கால் (கையேடு)
தமிழ்நாடு வனத்துறை, சமூக
வனப்பிரிவு, சென்னை.

122. தமிழண்ணல் — தமிழ் இலக்கிய வரலாறு

123. பாலச்சந்திரன் சு. — இலக்கிய திறனாய்வு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
5ம் பதிப்பு, டிசம்பர் 2000.

124. பாலசுப்ரமணியன் சி. — தமிழ் இலக்கிய வரலாறு
மனமலர் பதிப்பகம், சென்னை.
(விற்பனை! பாரி நிலையம் 184,
பிரகாசம் சாலை, சென்னை – 108
28ம் பதிப்பு 1998)

125 பாலசுப்ரமணியன் ஜே.பி. — சந்திப்போம் சிந்திப்போம்
பயனீர் மேட்ச் இன்டஸ்டிரீஸ்
தர்மபுரி 636 702.
10ம் பதிப்பு, ஆகஸ்ட் 2010

126. - — தெய்வீக குண பூங்கொத்து
பிரம்மகுமாரிகள் உலக ஆன்மீக
பல்கலைக்கழகம், தமிழக
தலைமையகம், ‘சாந்தி தர்மம்’ 93,
3வது அவென்யூ, அண்ணா நகர்,
சென்னை – 40.

127. பூவண்ணன் — தமிழ் இலக்கிய வரலாறு
வர்த்தமானன் பதிப்பகம்,
முதற்பதிப்பு 1984

128. - — தண்ணீர் தாகத்திற்கா?
லாபத்திற்கா?
மக்கள் கலை இலக்கிய கழகம்,
புதிய கலாச்சாரம்,
18 முல்லைநகர்,
வணிக வளாகம்,
2வது நிழற்சாலை,
அசோக் நகர், சென்னை – 83.
முதற்பதிப்பு ஜுலை 2005.

129 மெர்வின் — திறமையே நமது செல்வம்
குமரன் பதிப்பகம், 2
முத்துகிருஷ்ணன் தெரு, தி.நகர்,
சென்னை – 17. முதற்பதிப்பு 1992.

130. வரதராசனார் மு. — 'காந்தி அண்ணல்'
பாரி நிலையம், 59, பிராட்வே,
சென்னை
3ம் பதிப்பு 1949.

131. - — மாநிலங்களை பாலையாக்கும்
இறால் பண்ணைகள்
விவசாய விடுதலை முன்னணி
10, அவுலியா யாகிப் தெரு,
எல்லிஸ் சாலை, சென்னை – 2.
முதற் பதிப்பு, அக்டோபர், 1996.

132. விவேகானந்தர் — எனது சிந்தனைகள்
ஸ்ரீராம கிருஷ்ணா மடம்
மயிலாப்பூர், சென்னை – 4 – 2011

133. விவேகானந்தர் — எனது பாரதம் அமர பாரதம்
ஸ்ரீராம கிருஷ்ணா மடம்
மயிலாப்பூர், சென்னை – 4 – 2011

134. வையவன் — இந்திய வளர்ச்சி திட்டங்கள்
மாநில பள்ளிசாரா கல்வி கருவூலம்
முதல் தெரு, வெங்கட்ரத்தினம்
நகர்
விஸ்தரிப்பு, அடையார், சென்னை
– 28. முதற்பதிப்பு 1994.

135. ஜான். சாமுவேல் கி. — இலக்கியத்தில் சமுதாய பார்வை
ஐந்திணை பதிப்பகம், எண் 15
சைடோஜி தெரு, திருவல்லிக்கேணி
சென்னை – 5, முதற்பதிப்பு 1984.

136. ஜீவானந்தம், ப. — பாரதியைப் பற்றி ஜீவா
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை – 8. 4ம் பதிப்பு 1989.


## இதழ்கள்


137. காட்டூர் எக்ஸ்பிரஸ் (மாத இதழ்) — ச. பாலமுரகன்
3-395, கிழக்க அண்ணாநகர்,
வடக்கு காட்டூர், திருச்சி – 19.

138. சத்தியசீலன்
(முத்திங்கள் இதழ்) — சத்தியசீலன் சோ.
55, சேதுராமப்பிள்ளை காலனி
திருச்சி – 20. ஜுலை 1987

139. புதவை ராகம் (மாத இதழ்) — ச. பாலமுரகன்
3-395, கிழக்க அண்ணாநகர்,
வடக்கு காட்டூர், திருச்சி – 19.

140. மாலைமுரசு (பக்தி மலர்) — திருச்சி பதிப்பு

141. அபிதான சிந்தாமணி — சிங்கார வேலு முதலியார் ஆ
சாரதா பதிப்பகம்.

142. கழக தமிழ் அகராதி — திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூல் கழகம்
1-140 பிரகாசம் சாலை,
சென்னை, 3ம் பதிப்பு 1974.

143. தமிழ் - பிரெஞ்சு மரபு
தொடர் அகராதி — ஜெயராஜ் தானியேல்
84, முத்தைய முதலி தெரு
முத்தால் பேட்டை
பாண்டிச்சேரி 605 003
முதல் பதிப்பு – மார்ச் 2004

144. மதுரை தமிழ் பேரகராதி
(பாகம் 1,2) — கோபால கிருஷ்ணன் இ.ம.
(பதிப்பாசிரியர்) சென்னை
பதிப்பு ஆண்டு 1956.

145. The Poems of Ancient Tamil — Hart G.I.
University of California Press,
London, 1st Edition 1975.

146. South Indian Customs — Jagadisa Ayyar, P.V.
Asian Education Service
New Delhi – 1982.

## Dictionary – Encyclopaedias


| | | |
|---|---|---|
| 148. | Encyclopaedia of the social science (Vol. I) | Edwin R.A Seligman (Editor) The Macmillon Company New York – 1937. |
| 149. | Encyclopaedia Religion and Ethics (Vol. II) | James Hastings (Editor) T&T clock, New York, 1909. |
| 150. | International Encyclopaedia of Social Science, Sills Vol. I, II) | David I (Editor) Callier Macmillon Publishers. London Reprint – 1972. |
| 151. | Pie Pallavan Tamil Index | University of Madras, Madras, 1st edition 1966. |

# முடிவுரை

சங்க இலக்கியங்களில் காணப்படும் பொருளாதார கருத்துக்களை “சங்க இலக்கியத்தில் பொருளாதார சிந்தனைகள்” என்னும் இந்த ஆய்வின் மூலம் ஆராயப்பெற்று ஒவ்வொரு இயலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ள ஆய்வு முடிவுகளின் தொகுப்பாக இம்முடிவுரை பின்வருமாறு அமைகிறது.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழகம் பொருளாதார விஞ்ஞானத்தின் தொடக்க நிலையிலேயே பொருளாதாரத்தின் திறன் மிக்க அறிவாளிகளை பெற்றிருந்தது. அவர்கள் சமூகம் சார்ந்த பொருளியல் சிந்தனைகள் உலகப் பொருளியல் அறிஞர்களால் வரையறுக்கப்பட்ட பொருளாதார கருத்துக்களுடன் ஒன்றுபட்டு உள்ளது.

தமிழகம் பொருளாதாரத்தில் நசிவுற்ற நிலையில் இருந்து வளர்ந்த நிலையை எட்ட வேண்டும் என்ற நோக்கில் சங்ககால மக்களின் வாழ்க்கை முறை, பண்பாடு, நாகரீகம், மன்னர்களின் வரலாறு, போர் முறைகள் அரசியல் மற்றும் தொழில் நுட்பங்கள் அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

சங்ககால தமிழகத்தில் குடும்ப முறைகளும், சமய நிலைகளும், கடவுள் வழிபாடுகளும், கலைகளும், சமுதாய வளர்ச்சியும் உன்னத இடத்தில் இருந்துள்ளதை காணமுடிகின்றது.

திணை சமுதாயத்தில் சமூக வேறுபாடுகளும் சீறூர், முதுகுடி, குறுநில மன்னர்கள் மற்றும் மூவேந்தர்களின் நிலைப்பாட்டையும், அவர்களில் ஆட்சி முறையில் நிகழ்ந்த போரினால் மிகுந்த நன்மைகளும், ஒரு சில பாதிப்புகளும் நிகழ்ந்திருக்கிறது. இருப்பினும் அவை காலத்தின் கட்டாயத்தால் நிகழ்ந்துள்ளதை அறிய முடிகிறது.

வாணிபம், வாணிப முறைகள், வாணிப பொருள்கள், உள்நாட்டு அயல்நாட்டு வாணிகங்கள், ஏற்றுமதி, இறக்குமதி முறைகள், நிலம் சார்ந்த தொழில்கள், பொதுத் தொழில்கள், முறையே சீராகவும், சிறப்பாகவும் நடைபெற்று நாட்டின் வளர்ச்சிக்கு உறுதுணையாக உள்ளன.

ஐவகை நிலங்களை சார்ந்து வாழ்ந்தவர்கள் தானம் தர்ம குணங்களில் மேலோங்கியவர்களாக இருந்து வாடிய மக்களை வளம் பெறச் செய்தனர். தம்மை நாடி வந்தவர்களை மட்டும் ஆற்றுப் படுத்தாமல் தாமே முன்சென்று ஏழ்மையில் இருந்தவர்களை ஆற்றுப்படுத்தும் உயர்ந்த குணங்களை கொண்டவர்களாக சங்க கால மக்கள் இருந்தார்கள் என்பதை அறியலாம்.

நீர் வளத்திலும், நில வளத்திலும், மனித வளத்திலும் அரசர்களின் வள்ளல் தன்மையிலும் சங்ககால தமிழகம் வளம்மிக்க தமிழகமாகவும், அதே நேரத்தில் ஒரு சில காலக்கட்டங்களில் நிலவிய வறட்சி காரணமாக ஒரு சில நிலப்பகுதிகள் வறுமைமிக்க தமிழகமாகவும் இருந்திருக்கிறது என்பது தெளிவு.

மனித சமுதாயத்தில் அரசன் முதல் ஆண்டிவரை ஈறாக உள்ள யாவரும் பொருளாதார சூழலில் வாழ வேண்டியுள்ளது. வாழ்வின் முக்கிய அம்சமாக பொருளாதாரம் காணப்படுவதால் பொருளாதாரம் பற்றிய எண்ணங்களும், நம்பிக்கைகளும் எல்லோர்க்கும் பொதுவாகவே அமைந்துள்ளது.

வறுமை, வேலையில்லாத் திண்டாட்டத்தின் காரணமாகவோ இன்று வாழும் மக்கள் பொருளாதார கோட்பாட்டை பின்பற்ற தடுமாறி கலங்காவண்ணம் பல்வேறு பொருளியல் கருத்துக்களை எடுத்துக்காட்டுகளுடன் கூறி அவற்றை பின்பற்றினால் உண்டாகக்கூடிய நன்மைகளையும், ஏழ்மையை போக்கும் கழுவாய்களும் இலக்கியத்தின் வாயிலாக விரித்து கொடுக்கப்பட்டுள்ளதால் மக்கள் அவற்றை பயன்படுத்திக் கொண்டு வாழ இவ்வாராய்ச்சி துணைபுரியும்.

இவ்வாராய்ச்சியில் சங்ககால தமிழகத்தின் பொருளாதாரம் பற்றிய உண்மை நிலை உணர்த்தப்பட்டுள்ளது. இதனை மேற்கொண்டு விரிவாக ஆராய முற்படுவோர் தமிழ்நாட்டு பொருளாதாரத்தையோ, இந்திய பொருளாதாரத்தையோ, ஆராய்ந்து அரிய செய்திகளை புலப்படுத்த இவ்வாராய்ச்சி தோற்றுவாயாக அமையும் என்பது ஆய்வாளரின் நம்பிக்கையாகும்.